# அஷ்டாவக்ர மகாகீதை

## இப்போதே முடியும் - இங்கேயே முடியும்

Ashtavakra Mahagita - Vol.9



ஓஷோ

9

# அஷ்டாவக்ர மகாகீதை

## ஒன்பதாம் பாகம்

## இப்போதே முடியும் - இங்கேயே முடியும்

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 258 முதல் 298 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

**ஓஷோ**

தமிழாக்கம்:

**டாக்டர் என். ஸ்ரீதரன்**



Since 1976


**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216-1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (ஒன்பதாம் பாகம்) - இப்போதே முடியும் - இங்கேயே முடியும்

முதற் பதிப்பு : 2019
விலை : ₹ 250/-

Ashtaavakra Mahageethai - Part-9

Originally published in Hindi under the title:
ASHTAVAKRA MAHAGITA, VOL. 9



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 2019 |
| Pages | : | 264 |
| **Price** | : | **₹ 250/-** |
| ISBN | : | 978-93-884500-8-9 |
| DTP | : | S. Asokkumar |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |



Published by :
**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ந சாந்தம் ஸ்தௌதி நிஷ்காமோ ந துஷ்டமபி நிந்ததி |
ஸம துக்க சுகஸ் த்ருப்த: கிஞ்சித் க்ருத்யம் ந பஸ்யதி ||258

தீரோ ந த்வேம்ட்டி ஸம்சாரம் ஆத்மாநம் ந தித்ரு க்ஷதி |
ஹர்ஷ அமர்ஷ விநிர்முக்தோ ந ம்ருதோ ந ச ஜீவதி || 259

நி: ஸ்நேஹ: புத்ர தாராதௌ நிஷ்காமோ விஷயேஷு ச |
நிஸ்சிந்த ஸ்வஸரீரே அபி நிராஷ: ஷோபதே புத: || 260

துஷ்டி: ஸர்வத்ர தீரஸ்ய யதா பதிதவர்த்தின: |
ஸ்வச்சந்தம் சரதோ தேஷாந்யத்ராஸ்த மிதஸாயின: || 261

பததூதேது வா தேஹோ நாஸ்ய சிந்தா மஹாத்மன: |
ஸ்வபாவ பூமி விஸ்ராந்தி விஸ்ம்ருத அஷேஷ
பென்ஸ்ருதே || 262

அகிஞ்சன: காமசாரோ நிர்த்வந்த்வஸ் சின்ன ஸம்ஸய: |
அஸக்த: ஸர்வபாவேஷு கேவலோ ரமதே புத: || 263

முதலில் ஒரு கவிதை கேள்:

உன் வலப்பக்கம் யார் இடப்பக்கம் யாரெனத்
திரும்பித் திரும்பிப் பார்க்காதே
அனைவர் மீதும் அன்புக் காற்றை வீசி
மேலே சென்றுகொண்டே இரு
வழியில் எவனும் எதிரி உன்னை
ஏசினாலும் ஆசி கூறு

கடுஞ்சொல் அவன் பேசினாலும்
மெல்லிசை போன்ற பதில் கூறு
உலக நாடக மேடையில்
எல்லா வகைக் குரல்களும் உண்டு
பூவைக் கண்டு சிரிக்கும் நீ
முள்ளைக் கண்டுச் சுளிக்காதே

ஆன்மிக உலகில் அனைவருக்கும் சம உரிமை, சமமான வரவேற்பு உண்டு. பாரபட்சம் கிடையாது. இப்படி இருந்தால் நன்றாக இருக்கும், அப்படி இருந்தால் நன்றாக இருக்காது— இவ்வாறு எண்ணும்வரை மனம் என்பது மரிப்பதில்லை. உலகப் பற்று நீங்குவதில்லை.

எது எப்படியோ அதுவே சுபம். ஒரு விஷயம் எப்படியோ அப்படித்தான் இருக்க முடியும்; அப்படித்தான் இருக்க வேண்டும்; எது எப்படியோ அவ்வாறே அதனுடன் முழுமையாக உனக்கு சமரசம் என்னும் நிலை உருவானால் அதுவே சமர்ப்பணம், சந்நியாசம், உலகப் பற்று நீங்குதல், ஜீவன் முக்தி ஆகியவை யாகும்.

'பற்றற்றவன், அமைதியானவனை அல்லது ஒரு மகாத்மாவைப் பார்த்து வழிபடும் உணர்வு பெறுவதில்லை. தீயவர்களைப் பார்த்து அவர்களைப் பழிப்பதும் இல்லை' **(சுலோகம் 258)**

நீ மகாத்மாவைத் துதிக்கிறாய். ஏனெனில் நீ மகாத்மா ஆக விரும்புகிறாய். நாம் எவரைப்போல் ஆக விரும்புவோமோ அவரைத்தானே துதிப்போம். நாம் எவரைப்போல் ஆக விரும்பவில்லையோ அவரைத்தானே பழிப்போம். நாம் இன்னும் மகாத்மா ஆகவில்லையாயினும் அவரை நாம் விரும்புவதைத் துதிப்பதன் மூலம் வெளிப்படுத்துகிறோம். இது நமது எதிர்கால வளர்ச்சியுடன் சம்பந்தப்பட்டது. நாம் பிறரை நிந்திக்கும்போது அது எவ்விதத்திலோ நமது கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டது.

'ஒவ்வொரு புனிதருக்கும் கடந்த காலம் உண்டு; ஒவ்வொரு பாவிக்கும் எதிர்காலம் உண்டு' என்றொரு பொன்மொழி. இதன் பொருள்: இன்று புனிதராக இருப்பவர் முன்பு பாவங்கள் செய்து

வருந்தியிருக்கக்கூடும். இன்று பாவியாகக் கருதப்படுபவர் மனம் திருந்தி எதிர்காலத்தில் புனிதராக மாற வாய்ப்புண்டு.

அரசியல் பிரமுகர் ஒருவர் உன் ஊருக்கு வருகிறார். நீ அவரைப் பார்க்கச் செல்வது ஏன்? உன் ஆழ்மனத்தில் அரசியல் மூலம் பதவியும் கௌரவமும் பெற நீ ஆசைப்படுகிறாய். உனக்கு அவை கிடைக்காவிடிலும் எவருக்குக் கிடைத்துள்ளதோ அவரை யாவது பார்த்துச் சற்று திருப்தி பெறலாம் என நினைக்கிறாய்.

**ஓ**ர் உணவுவிடுதியில் மகாபலசாலியான ஒரு மனிதன் நுழைந்தான். ஒரு போத்தலில் கொண்டுவந்திருந்த கள்ளைக் குடித்துவிட்டுப் பலத்த குரலில், "என்னோடு மோத யாருக்காவது வலுவுள்ளதா? என்னைத் தோற்கடிக்கக்கூடிய ஆம்பிளை சிங்கம் யாராவது உண்டா?" என்று சவால்விட்டான். மற்றவர்கள் நடுங்கிப் போயிருக்க, சராசரி உடல்பலம் கொண்டே. குள்ளமான மனிதன் எழுந்தான்.

அங்கிருந்தவர்கள் திகைத்தார்கள். இந்தக் குள்ளனை அந்த மாமிச மலை மனிதன் தூளாக்கிவிடுவானே என அஞ்சினர். ஆனால அந்தக் குள்ளன் கராத்தே* அறிந்தவன். உடலின் எந்த பாகத்தில் எப்படி அடித்தால் எதிரி வீழ்வான் என்பதைக் கற்றிருந்த குள்ளன் கொடுத்த அடியில் அந்த குண்டன் கீழே வீழ்ந்தான்.

அவனது மார்பில் ஏறி உட்கார்ந்து குள்ளன், "உன் அடுத்த திட்டம் என்ன? ஆம்பிளை சிங்கத்தைப் பாத்துவிட்டாயல்லவா?" என்று நக்கலாகக் கேட்டான். பயில்வான், "நீ யாரப்பா?" என்று கேட்க, குள்ளன், "நீ ஹோட்டலுக்குள் நுழையும்போது உன்னை யாரென நினைத்தாயோ அது நான்தான். நீ கள் குடித்துவிட்டு உன்னை யாரென நினைத்தாயோ அது நான்தான்," என்றான்.

நாம் எவரையாவது துதிக்கும்போது ஆழ்மனத்தில் நமது எதிர்காலத்தைத் தேடுகிறோம். நாம் அவரைப்போல் ஆக விரும்புகிறோம். ஆகவே கட்சித் தலைவரைக் காணச் செல்பவன் மகான்களை தரிசிக்கப் போகமாட்டான். அப்படி அவன் போனால்,

* Karate 17ஆம் நூற்றாண்டில் தோன்றி 1920களில் ஜப்பானில் பிரவேசித்து, பிறகு உலகெங்கும் பரவியது.

அவன் அரசியலையும் ஆன்மிகத்தையும் பிரித்துப் பார்ப்பவனாக இருக்கமாட்டான். எதன் மூலமாகவாவது தனக்கு சமூக அந்தஸ்து கிடைத்தால் சரியென நினைப்பான். தனது அகங்கார உணர்வுக்குத் தீனி கிடைத்தால் போதுமென நினைப்பான். அரசியல் தலைவராகவோ, ஆன்மிக குருவாகவோ எப்படியானாலும் அவனுக்கு சம்மதம்.

நீ அரசியல் பிரமுகரைத் துதிக்கும்போது மறைமுகமாக உன் எதிர்பார்ப்பை வெளிப்படுத்துகிறாய். 'நானும் இப்படி ஆக விரும்புகிறேன். ஆக முடியாமல் போய்விட்டது. நான் தோல்வியடைந்தேன். வெற்றி பெற்றவரைப் பார்த்தால், என்னால் முடியாததை இவர் சாதித்தார் என்ற ஆறுதலாவது ஏற்படும்' என்று நீ எண்ணுகிறாய்.

ஒரு ஞானியைப் பார்க்கச் செல்லும்போது நீ இதேபோல் எண்ணுகிறாய். 'நானும் ஒரு ஞானியாக முடியவில்லை. நான் வழி தெரியாமல் பாதைகளை மாற்றிய வண்ணமே இருந்தேன். நான் முள்புதர்களில் சிக்கிக்கொண்டேன். இவரைப் பார்க்கப் போனால் நம்மைப் போல் ஒருவன் எந்த அளவிற்கு உயர முடிகிறது என்னும் திருப்தியாவது கிடைக்கும்' என நீ நினைப்பாய்.

ஒரு மனிதன் ஒரு சம்பவத்தை அல்லது இன்னொருவனை மிகவும் நிந்தித்தால் அவ்வாறு நிந்திக்கின்ற அந்த மனிதனை முதலில் உற்றுக்கவனி என்கிறார் ஆங்கில தத்துவமேதையான பெர்ட்ரண்ட் ரஸ்ஸல். உதாரணமாக, ஒருவ்னது பர்சை எவனோ திருடிவிட்டான். அப்போது அந்த இடத்தில் இன்னொருவன் 'விடாதீங்க, ஆளைப் பிடிச்சு செம்மையா உதைங்க' என்றெல்லாம் கூக்குரலிட்டால், அவ்வாறு கத்துபவனைத்தான் முதலில் பிடிக்க வேண்டும். அவன்தான் ஜேப்படி செய்திருப்பான்! ஆனால் அவன் கத்துவதால் மக்கள் அவன் நிச்சயமாக ஜேப்படிக்காரன் இல்லை என்றே நினைப்பார்கள். அவன் திருடியிருந்தால் திருடுவதை இவ்வளவு தீர்மானமாக எதிர்ப்பானா என்றே நினைப்பார்கள்.

ஒருவன் எந்த விஷயத்தை எந்த அளவிற்குத் தீவிரமாக எதிர்க்கிறானோ அதன்மீது அவனது ஆழ்மனத்தில் ஒரு பிடிப்பு

இருக்கும். அது மற்றவர்களுக்குத் தெரியாது. காமத்தை ஓரளவு எதிர்ப்பதில் நியாயமுள்ளது. அதனால் வாழ்க்கையில் சிக்கல்கள் உண்டாவதை மறுக்க முடியாது. ஆனால் கண்மூடித்தனமாக காமத்தை எதிர்த்தால், அதிலும் காம அனுபவம் இருக்க வாய்ப்பில்லாத சாமியார்கள் எதிர்த்தால், அங்கு ஒரு விஷயம் உள்ளது. அவர்களின் ஆழ்மனத்தில் காமநினைவு இருக்கிறதென லாம். காமத்தை எதிர்ப்பவர்களுக்கு எப்பொழுதும் காம நினைவுள்ளது. பெண்களைப் பாடல்களில் ஏசுபவர்களும் பெண் உடலின் அழகுகளை வர்ணிக்கத் தவறுவதில்லை. சராசரி மனிதனுக்குக்கூட பெண் உடலின் நினைவோ, காம நினைவோ எப்போதாவதுதான் எழுகிது.

பரமஞானி எதையும் துதிப்பதில்லை; எதையும் நிந்திப்ப தில்லை. அவன் மகாத்மாக்கள் எனப்படுவோரின் கால்களில் பூ சமர்ப்பிப்பதில்ல; பாவி எனப்படுவோரின் தலையில் நெருப்பு வைப்பதில்லை. அவன் சமூகத்தில் நல்லவரெனப்படுவோருக்குப் பொன்னாடை போர்த்துவதில்லை; தீயோர் எனப்படுவோரைச் செருப்பால் அடிப்பதில்லை. அவன் யார் எப்படியோ அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்.* ராமன்-ராவணன், வேப்பம் பழம்-மாம்பழம், முள்-பூ, எல்லாம் தேவைதான் என்பான். ராவணர்கள் எல்லோரையும் ராமர்களாக்க நினைப்பதில்லை. வேப்பம் பழத்தின் கசப்பு, மாம்பழத்தின் இனிப்பு இரண்டுமே வேண்டும் என்பான். பூவைக் காப்பதில் அவன் முள்ளின் பணியை அறிவான்.

ஞானி பற்றுகள் அற்றவன் என்பதால் எவரையும் புகழ்ந்து பாடவோ, துஷ்டர்களை நிந்திக்கவோ ஆர்வம் கொள்வதில்லை. அவன் இப்பக்கமும் இல்லை, அப்பக்கமும் இல்லை, எப்பக்கமும் இல்லை. அவன் எதுவும், எவரும் இப்படித்தான் இருக்க வேண்டு மென்று வற்புறுத்துவதில்லை.

அவன் இன்ப துன்பத்தையும் சமமாக நினைக்கிறான். எல்லா சூழ்நிலைகளிலும் அவன் திருப்தியாக உள்ளான். தான் செய்ய வேண்டிய பணி அல்லது கடமை என்றெல்லாம் இருப்பதாக அவன் கர்த்தா மனப்பான்மை கொள்வதில்லை.

---

* Accept people as they are.

இன்பம்-துன்பம் இரண்டையும் குறித்து ஞானியின் மனத்தில் சமமான உணர்வு (ஸம பாவம்) உள்ளது. நம் நாட்டில் இந்த சமபாவத்தை அடையத்தான் தேடுதல் நடக்கிறது. ஜைனர்கள் இதை ஸம்யகத்துவம் என்கின்றனர். பௌத்தர்கள் ஸந்துவன் (balance, poise) என்கின்றனர். இந்துக்கள் ஸமாதி என்கின்றனர். இவை எல்லாவற்றிலும் சமம் என்னும் சொல் வருவதைக் கவனிக்கவும். சமம் என்பதற்கு இந்தப் பக்கமும் சாய்வதில்லை, அந்தப் பக்கமும் சாய்வதில்லை, முன்னாலும் குனிவதில்லை, பின்னாலும் வளைவதில்லை. ஞானி நடுவான மையத்தில் நிற்கிறான். ஆடாமல், அசையாமல் நிற்கிறான். சமநிலையில், சமாதிநிலையில் இருக்கிறான்.

சம சித்தம் என்பது ஆழ்மன நிலை. அங்கு சலனம் கிடையாது. நீ நல்லதைப் புகழ்ந்தால் தீயதை இகழ்ந்தால் உன் மனம் தடுமாறுவதாகப் பொருள். நீ அமைதியாக ஓரிடத்தில் உள்ளாய். ஒருவன் அவ்வழி செல்வதைப் பார்த்து, 'இவன் துஷ்டனாயிற்றே. நரகத்திற்குத் தான் போவான்' என நீ எண்ணினால் உன் மனத்தில் சலனம் தோன்றிவிட்டது.

அல்லது அவன் மீது இரக்கப்பட்டு, 'இவனுக்கு உபதேசித்து இவனைக் காப்பாற்ற வேண்டும்; இவனை நல்லவனாக்க வேண்டும்' என நீ எண்ணினால் அப்போதும் உன் மனம் சலனமடைகிறது. துஷ்டனுக்குப் பதிலாக அந்த வழியாக ஒரு துறவி சென்றால் அதைப் பார்த்து நீ 'இந்த மனிதர்தாம் எவ்வளவு அதிர்ஷ்டசாலி! நானும் இவரைப்போல் ஆகும் பேறு கிடைக்குமா?' என்று ஏங்கினால் அதுவும் மனச்சலனம்தான். எண்ணம் என்பது தோன்றினாலே மனம் சமநிலையை இழக்கிறது.

உன் கண்ணெதிரே ஒரு நல்லவன் சென்றாலும், தீயவன் சென்றாலும் நீ பாதிப்படையாமல் இருந்தால்; சுகம்-துக்கம், சன்மானம்-அவமானம் ஆகிய சூழ்நிலைகளிலும் பாதிக்கப் படாமல் இருந்தால் நீ சமமான மனநிலையை அடைந்துவிட்டாய்; நீ பற்றற்றவனாகிவிட்டாய் என்று அர்த்தம்.

மேலும், அவன்தான் திருப்திகொண்ட மனத்தினனாய் இருக்கிறான். ஏனெனில் மனிதனுக்குத் துன்பத்திலோ திருப்தி

என்ற பேச்சுக்கே இடமில்லை. சுகத்திலோ அவனுக்கு முழு திருப்தி ஏற்படுவதில்லை.

துன்பம் நிகழும்போது அதிலிருந்து தப்பிக்க வேண்டுமென்ற ஆசைதான் மேலோங்கி நிற்கும். சுகத்திலும் திருப்தி இல்லை. சுகம் இன்னும் வேண்டும் என்று பேராசை ஒருபுறமும், இந்த சுகம் பறிக்கப்பட்டுவிடுமோ என்ற பயம் இன்னொரு புறமும் மனிதனை வாட்டுவதால் அவன் சுகத்தில் திருப்தி பெறுவதில்லை. இவ்வாறு சுகம், துக்கம் என்னும் இரு நிலைகளிலும் உன் மனம் நடுநிலையை இழந்து ஊசலாடுகிறது. ஆகவே சுகம் என்பது ஒருவகையில் துன்பநிலைதான்.

பணமில்லாதவன் அதை எப்படிச் சம்பாதிப்பது என்று கவலைப்படுகிறான். பணம் வைத்திருப்பவன் பல வேறு பயங்களுக்கு உள்ளாகிறான். தொலைந்துவிடுமோ, திருட்டுப் போய்விடுமோ, அரசாங்கம் பிடுங்கிக் கொண்டுவிடுமோ, கம்யூனிச ஆட்சி வந்து விடுமோ என்று அவனுக்கு விதவிதமான அச்சம்.

பணம் குறைவாக வைத்திருப்பவன் ஒருவேளை இரவில் நன்கு தூங்குவான். பணக்காரனால் நிம்மதியாகத் தூங்க முடியாது. பணம் நிறைய இருந்தால் பாதுகாப்பு என்று மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் பணம் நிறைய இருந்தால் அதைப் பாதுகாப்பது எப்படி என்று புதுக்கவலை எழுகிறது. பணக்காரன் பணத்தின் எஜமானனாக அல்லது அதை அனுபவிப்பவனாக இல்லாமல் அதைப் பாதுகாக்கும் காவல்காரன் நிலைக்கு இறங்கிவிடுகிறான்.

இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக பாவிப்பவன் திருப்தியுடன் விளங்குவான். துன்பம் வந்தால் அதை 'வெளியே போ' என்று உத்தரவிட மாட்டான். சுகம் வந்தால் அதை 'இங்கேயே தங்கிவிடேன்' என்று கெஞ்சமாட்டான். 'நீங்கள் உங்கள் இஷ்டப்படி வந்தீர்கள். தங்குவதும் வெளியேறுவதும் உங்கள் இஷ்டம்' என்று சொல்லிவிடுவான். அவன் மனம் எப்போதும் ஒரே நிலையில் இருக்கிறது.

இதெல்லாம் வெளியுலகத்துடன் நின்றுவிடுவதில்லை. உள்ளே தியானத்திற்கும் இதுவே சூத்திரம் (ஃபார்முலா). உன் மனத்தில் திருடலாம், கொல்லலாம் என்னும் எண்ணம் எழுந்தால் அதை நிந்திக்காதே. நீ அந்த எண்ணத்தைப் பார்த்தபடி இரு. அதனுடன் நீ தொடர்பு கொள்ளாதே. எண்ணம் என்பது நீ அல்லன். நீ அதைப் பார்க்கும் சாட்சி மட்டுமே ஆவாய்.

இதேபோல் உன் மனத்தில் வேறுவகையான எண்ணம் உதிக்கிறது. செல்வத்தை தானம் செய்துவிடலாம்; கோயில் கட்டலாம்; ஆஸ்பத்திரி திறக்கலாம் என்றெல்லாம் தோன்றுகிறது. இதற்காக நீ உன்னையே மெச்சி நெஞ்சை நிமிர்த்திக்கொள்ள வேண்டாம். எனக்குத்தான் எவ்வளவு நல்ல-நல்ல எண்ணம் என்று கர்வப்படாதே. அந்த சுபச்சிந்தனையும் நீ அல்லன். நீ அதைப் பார்க்கும் சாட்சி மட்டுமே ஆவாய்.

இந்த சமச்சிந்தனையைப் பெற்றுவிட்டவன் மேற்கொண்டு ஆன்மிகப் பயிற்சி செய்யவேண்டியதில்லை. ஜெபம், தவம், யோகம், யாகம் மேற்கொள்ள வேண்டியதில்லை. அவனுக்கு உலகத்தை விடவேண்டுமென்றும் தோன்றாது; மோட்சம் பெற வேண்டுமென்றும் தோன்றாது. இந்த சமாதிநிலையில் எல்லா வற்றையும் பெற்றுவிட்டதுபோல்தான்.

சாட்சி நிலைக்கு நீ வந்துவிட்டால் பிறகு கர்த்தா நிலையில் (நான் செய்பவன் என்னும் மனநிலையில்) நீ இருக்கமாட்டாய். பிறகு ஆனந்தம் மட்டுமே மிஞ்சும், 'நான் செய்பவன்' என்று நினைத்தால் கிடைப்பது வெற்றி-தோல்வி எதுவாயினும் உனக்குக் கவலைகளே தோன்றும். நீ பிச்சைக்காரனாக இருந்தால் ஒருவகைக் கவலை. நீ அலெக்ஸாந்தர், நெப்போலியன்போல் இருந்தால் வேறுவகைக் கவலை. கர்த்தா மனப்பான்மை எப்படியும் உன்னைக் கவலை வலையில் சிக்கவைத்துவிடும்.

ஞானி எதுவும் செய்வதில்லை. கை-கால்கூட அசைப்ப தில்லை என்று நினைக்கக்கூடாது. அவன் தனக்கு சுபாவமான, இயற்கையான வேலைகளைத் தொடர்ந்து செய்கிறான். பசியெடுத்தால் சாப்பிடுகிறான். தாகமெடுத்தால் தண்ணீர் குடிக்கிறான். இவற்றையெல்லாம் அவன் வலிந்து செய்வதில்லை.

இவை தன்னிச்சையாக (automatic) நிகழ்கின்றன. சமூகக் கடமைகளையும் அவன் தன் உள்ளுணர்வுக்கு ஏற்றபடி செய்வானே தவிர, சட்டத்திற்கும் கட்டளைகளுக்கும் அஞ்சிச் செய்யமாட்டான். அவன் தன்னைக் கடவுளின் கருவியாகக் கருதியே பணிகளில் ஈடுபடுவான்.

ஒவ்வொரு ஞானியும் ஒவ்வொரு விதம். ஞானி இப்படித்தான் இருக்க வேண்டும் என்று வரையறுக்க (define) முடியாது. ஒரு ஞானி சில சமயம் நிறையச் செய்வார். இன்னொரு சமயம் செய்யமாட்டார். ஒரு ஞானி செய்வதை இன்னொரு ஞானி செய்யாமல் போகலாம். எதுவும் சொல்ல முடியாது. ஒரு ஞானி சொற்பொழிவாற்றுவார். வேறொரு ஞானி மௌன விரதம் கடைப்பிடிப்பார். ஒரு ஞானி செயலுலகில் தீவிரமாக இறங்கி எங்கும் தென்படுவார்.

இன்னொரு ஞானி உலகை மறந்து குகையில் உட்கார்ந்திருப்பார். இந்த இரண்டு வகை நடத்தைகளும் ஆன்மிகத்தில் ஒன்றுதான், சரியானவைதான். காரணம், இரண்டின் அடிப்படையும் உள் தூண்டுதல்தான்.

'ஆன்ம வீரன் உலகத்தை வெறுப்பதில்லை. ஆத்மாவைக் காண வேண்டுமென விரும்புவதுமில்லை. மகிழ்ச்சி-சோகம் இரண்டிலிருந்தும் அவன் விடுபட்டவனாயிருக்கிறான். அவன் இறந்தவன் போலும் இல்லை, உயிருள்ளவன் போலும் இல்லை!' **(சுலோகம் 259)**

**ஞா**னி உலகை நிஜமென்றோ, பொய்யென்றோ நினைக்காமல் அது ஒரு தோற்றம் மட்டுமே என்று கருதுவதால் அதை அவன் வெறுக்க வேண்டிய அவசியம் எழுவதில்லை.

இரவில் இருட்டில் பாதையில் கயிறு கிடந்தால் நீ அதைப் பாம்பென நினைத்து பயந்து ஓடுகிறாய். அப்போது ஒருவன் விளக்குக் கொண்டுவர, பாம்பில்லை, கயிறுதான் என நீ அறிகிறாய். பிறகும் நீ கயிற்றின் அருகில் செல்லமாட்டாயா? பயந்து ஓடுவாயா? வீடு திரும்பியபின் நீ பிள்ளைகளிடம், "அந்தப் பாதையில் செல்லாதீர்கள். அங்கே பாம்புபோல் ஒரு நீளமான

கயிறு கிடக்கிறது,'' என்று எச்சரிப்பாயா? அவர்கள் சிரிக்கத்தான் செய்வார்கள்.

சமயத் தலைவர்கள் உலகை மாயை என்றும் சொல் கிறார்கள். அதிலிருந்து தப்பி ஓடும்படி எச்சரிக்கவும் செய் கிறார்கள். இது முரண்பாடு அல்லவா? கயிறு என்றும் சொல்லி அப்பக்கம் போகாதீர்கள் என்று பிள்ளைகளை எச்சரிப்பது போல்தான் மடத்தலைவர்களின்எச்சரிக்கையும் உள்ளது. உலகை மாயை என்று சொன்ன பிறகு அதிலிருந்து தப்புவது பற்றி எப்படிப் பேச்செழும்? ''அங்கே கயிறுதான் கிடக்கிறது. ஆனால் பாம்புபோல் தெரிவதால் ஓடிவிடுங்கள்,'' என்று கூறினால் எப்படியிருக்கும்?

ஞானி உலகை வெறுப்பதில்லை. ஏனெனில் வெறுப்பின் மறுபக்கம்தானே விருப்பு. உலகை வெறுப்பவனுக்கு அதன் மீது பற்று ஏற்படவும் வாய்ப்பு உள்ளது. நண்பன் பகைவனாவதும், பகைவன் நண்பனாவதும்போல்தான் இதுவும்.

மாக்யவெலி* 'தி பிரின்ஸ்' என்னும் நூலில் அரசர்களுக்கு அறிவுரைகள் வழங்குகிறார். அவற்றில் ஒன்று: 'உன் எதிரியிடம் கூட நீ சொல்ல விரும்பாத விஷயத்தை உன் நண்பனிடமும் சொல்லாதே!' ஏனெனில் இன்று நண்பனாக இருப்பவன் நாளை எதிரியாகலாம். இன்னொரு அறிவுரை: 'உன் எதிரியையும் அளவுகூர்ந்து பழிச்சொல் கூறாதே. அவனுடன் பிறகு நட்பு விளைந்தால் உன் பழிச்சொல்லைத் திரும்பப் பெறுவது கடினம்.' நட்பும் பகைமையும் ஒன்றுக்கொன்று தலைகீழாக நிற்கும் சிரசாஸனம் போன்றவை.

ஞானி உலகைத் தோற்றங்களின் தொகுப்பு என்று கருதி அவற்றின் மீது பற்றுக்கொள்ளாமல் இருப்பதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் இந்த சுலோகத்தில் ஞானி ஆத்மாவைத் தேடுவதும் பெறுவதும் கூட கிடையாது என அஷ்டாவக்ரர்

---

* Machiavelli (1469-1527) இத்தாலி நாட்டு அரசியல் அறிஞர். அரசாள்வோருக்கான கையேடு போன்று இவர் எழுதிய நூல் The Prince. ஆட்சியை இழக்காமலிருக்க எந்தத் தவறான நடவடிக்கைகளையும் எடுக்கலாம் என்பது இவரது கண்ணோட்டம்.

கூறுவது நுணுக்கமான கருத்து. உலகில் எதுவும் பெறுவதற்கு இல்லை என்று உலகின் இயல்பை அறிந்த அக்கணமே ஞானி ஆத்மாவைப் பெற்றுவிடுகிறான். ஆகவே இனிமேல்தான் ஆத்மாவைப் பெறுதல் என்னும் பேச்சுக்கு இடமில்லை.

இது சதவிகிதக் கணக்குப் போன்றது. உனக்கு நூறு சதவிகிதம் உலகமே தென்பட்டால் ஆத்மா பற்றிய உணர்வே இருக்காது. உலகப் பற்றின் சதவிகிதம் குறையக் குறைய உன் ஆத்ம உணர்வு வளரும். ஒரு கட்டத்தில் காமன் தோற்று ராமன் ஜெயிப்பார். அப்போது உலகப் பற்று பூஜ்ஜியமாகி விடும். நீ ஆத்மாவை நூற்றுக்கு நூறு விகிதம் உணர்ந்து அதன் எஜமானனாகிவிடுவாய். இத்தகையோரைத்தான் ஜின் (ஜைனர்) என்பர்.

உலகில் இருவிதமான மனிதர்களைப் பார்க்கலாம். ஒருவகையினர் சம்சாரி எனப்படுவர். இன்னொரு வகையினர் வைராகி எனப்படுவர். சம்சாரி உலகை நேசிக்கிறான். வைராகி உலகை துவேஷிக்கிறான். ஆக, இருவகையினரும் உலகம் வலுவானது என்பதை ஒத்துக்கொள்கின்றனர். உலகமின்றி சுகமில்லை என்பான் சம்சாரி. உலகம் உள்ளவரையிலம் சுகமில்லை என்பான் வைராகி. ஆக, இருவரின் சுகமும் உலகைத்தான் பொறுத்துள்ளது. உலகை வென்றால் சம்சாரி சுகம் என நினைக்கிறான். உலகை உதறித்தள்ளினால் சுகமென வைராகி நினைக்கிறான்.

ஞானி போகியும் (அனுபவிப்பவனும்) அல்லன், தியாகியும் அல்லன். நேசிப்பவனும் அல்லன், வெறுப்பவனும் அல்லன். அவன் எதையும் பிடித்துக் கொள்வதும் இல்லை, கைவிடுவதும் இல்லை. அவனது நிலை 'வீதராகம்' (ஒட்டுதலற்ற நிலை) எனப் படுகிறது. அவனே இந்நிலையில் ஆத்மவான் ஆகிவிடுவதால் அவன் புதிதாக ஆத்மாவைப் பிரித்துப் பார்க்க வேண்டியதில்லை.

ஆத்ம தரிசனம் (ஆத்மாவைக் காண்பது) என்பதுகூட சரியான சொல்வழக்கு இல்லை. நாம் எதைப் பார்க்க முடியுமோ அது நம்மிடமிருந்து பிரிந்து தனியாகத்தான் இருக்கும். நாம் நம்மையே எப்படி தரிசிக்க முடியும்? நீ இந்த நுணுக்கம் பற்றி

யோசித்ததுண்டா? பார்த்தல் என்பதில் இரு கூறுகள்—பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள். (த்ருஷ்ட்டா-த்ருஷ்ய). ஆத்மாதானே பார்ப்பவனும். அது காட்சிப் பொருளாக ஆக முடியாது. காட்சிப் பொருள் என்பது உலகைத்தான் குறிப்பிடும்.

'நான் பார்ப்பவன்' என்பதை எப்பொழுதும் நினைவில் கொள். என் பார்வையில் படுகின்ற எதுவும் 'நான்' இல்லை என்பதை நினைவில் கொள். அனுபவ வழியாகப் பெறும் எதுவும்கூட நீ இல்லை. நீ அனுபவங்களைக் கடந்தவன். நீ சாட்சி.

எந்த அனுபவமும் ஆன்மிகமானது அன்று. எல்லா அனுபவங்களும் உலகுடன் சம்பந்தப்பட்டவை. அனுபவிப்பவன் தனி. அவன் ஆன்மிகன். இத்தகைய ஆன்மவீரன் இன்பம்-துன்பத்திலிருந்து விடுதலை பெற்றவன். அவன் இழப்பதற்கு ஒன்றுமில்லை, பெறுவதற்கு ஒன்றுமில்லை. அவனுக்கு உலகப்பற்றும் இல்லை, மோட்ச ஆசையும் இல்லை. வெளியே எதையும் அடைய வேண்டியதில்லை; உள்ளே எதையும் பெறவேண்டியதில்லை. அவன் உலகையும் தேடவில்லை, ஆத்மாவையும் தேடவில்லை. அவனது தேடுதல் எல்லாம் முடிந்துவிட்டது. அப்போது ஓர் அதிசயம் நிகழ்கிறது.

ஞானி இறப்பவனாகவும் தெரியவில்லை, வாழ்பவனாகவும் தெரியவில்லை. அதாவது நாம் வாழும் விதம் அவனுக்கு இறப்பது போன்ற நிலையாக உள்ளது. நாம் பரபரப்பாக, படபடப்பாக வாழ்கிறோம். பணம், பதவி, சமூக கௌரவம், பேராசை என்று ஓடியபடி இருக்கிறோம். நாம் காய்ச்சல் வந்தவர்கள்போல் உள்ளோம். ஞானியிடம் இந்த அறிகுறிகள் கிடையாதென்பதால் அவன் செத்தவன் போலிருக்கிறான்.

வேறு விதத்தில் அவன் வாழ்கிறான். ஆனால் நீ செத்த நிலையில் இருக்கிறாய். நீ நிஜமாக இறக்கிறாய். ஞானி சென்றடைந்துள்ள தளத்தில் சாவு நிகழ்வதில்லை. அவன் அமரத்தன்மை பெறுகிறான்.

ஞானி நமது உலகில் வாழ்ந்தபோதிலும் அவன் அதன் அங்கமாக இல்லை. நம்மைப் போலவே உணவு உண்டாலும்

ஞானிக்கு அது உபவாசம் இருப்பதற்கு சமம். நீ உபவாசம் இருக்கும்போதே வாயால் சாப்பிடாவிட்டாலும் மனத்தால் பலமுறை சாப்பிடுகிறாய்! மற்ற நாட்களில் உரிய நேரத்தில் மட்டுமே (சுமார் மூன்று முறை) உணவின் ஞாபகம் உனக்கு வரும். உபவாச காலத்திலோ நாள் முழுதும் உணவுச் சிந்தனையே மனத்தை ஆக்கிரமிக்கும். ஒரு நாளைக்கு மேல் உபவாசம் இருந்தால் கனவில் உணவு வந்துவிடும்!

ஞானிகள் உண்பது குறைவு. அவர்களுக்கு உணவின் ஞாபகம் இருப்பதில்லை. உண்ணும்போதும் உணவில் விசேஷ ஆர்வம் கொள்வதில்லை. ஆகவே அவர்களுக்கு உண்பதும் உபவாசம் இருப்பதுபோல்தான்.

'மனைவி, பிள்ளைகள் முதலியவர்களுடன் ஒட்டிக் கொள்ளாமல் இருந்து, பாச உணர்வில் சிக்கிக்கொள்ளாமலிருந்து, புலன்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஆசையின்றி, தனது உடல் குறித்தும் கவலையற்று இருக்கும் ஞானியர் சோபிக் கிறார்கள்.' **(சுலோகம் 260)**

இந்த சுலோகத்திற்கு மேலோட்டமான அர்த்தம் எடுத்துக் கொள்ளக் கூடாது. ஞானிக்குக் கல்மனசு என்று நினைத்துவிடக் கூடாது. குடும்பத்தில் வாழும் ஞானிக்கும் மனைவி-பிள்ளைகள் மீது அன்புண்டு. அது 'என்னவர்கள்' என்பதன் காரணமாக ஏற்பட்டதன்று.

நீ உன் அம்மா, உன் மனைவி, உன் மகன் என்பதால் அவர்களை நேசிக்கிறாய். உன் மகனைப் படிக்கவைத்து, பல வசதிகள் செய்துகொடுத்து வாழ்க்கையில் முன்னேற்றுகிறாய். உன் மனைவி இறந்துபோகிறாள். அவள் பெட்டியை சுத்தம் செய்யும்போது பழுப்பேறிய ஒரு கடிதம் கிடைக்கிறது. அதன் மூலம் நீ நேசிக்கும் மகன் மனைவியின் முன்னாள் காதலனுக்குப் பிறந்தவன் எனத் தெரிகிறது. எத்தனையோ ஆண்டுகளாக நீ பொழிந்த அன்பு கடிதத்தைப் படித்த சில நிமிடங்களிலேயே அளவுகடந்த வெறுப்பாகிவிடுகிறது. பிறகு நீ உன் மகனைக் கண்ணெதிரே பார்க்கக்கூட விரும்பமாட்டாய்.

ஆகவே நீ காட்டிய பாசம் உண்மையில் மகன் மீது அன்று. அது உன் அகங்காரத்துடன் சம்பந்தப்பட்டது. உன்னுடையது என்றால்தான் அன்பு பிறக்கிறது.

சூஃபி துறவி பாய்ஜீத் ஒரு கதை சொல்கிறார். ஒருவன் தன் வீட்டுவாசலில் கோடாலியால் மரக்கட்டைகளைப் பிளந்து கொண்டிருந்தான். உணவு நேரத்தின்போது எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு உள்ளே போனான். உண்டபின் வெளியே வந்து பார்த்தபோது கோடாலியில்லை. அவன் சற்றுத் தொலைவில் பக்கத்து வீட்டுக்காரனின் மகன் செல்வதைப் பார்த்தான். அவன்தான் எடுத்துச் சென்றிருப்பான் என நினைத்தான். அவனது கற்பனையில் அந்தச் சிறுவன் பெரிய போக்கிரியாக, சமூக விரோதியாகத் தெரிந்தான். அவனை எப்படித் தண்டிப்பதென அவன் யோசித்தான்.

இரவில் மழைவரும் போலிருந்தது. இருட்டத் தொடங் கியதும் அவன் காலையில் வெட்டிய விறகுக்கட்டைகளை உள்ளே எடுத்துச்சென்று அடுக்கினான். எல்லாவற்றிற்கும் அடியில் அவனது கோடாலி கிடந்தது! பசியின் தீவிரத்தில் அவசரமாகப் பகலில் உள்ளே போனதால் கோடாலியை விறகுக்கட்டைகளில் அலட்சியமாக எறிந்ததால் அது தென்படவில்லை.

பக்கத்துவீட்டுச் சிறுவனை சந்தேகித்தமைக்காக அவன் வருந்தினான். இப்போது அவனது கற்பனையில் அந்தச் சிறுவன் மிகவும் நல்லவனாகத் தெரிந்தான். என் மகன், என் மனைவி என்றெல்லாம் சொல்லும்போது 'என்' என்பது 'நான்' என்னும் அகங்காரத்தின் விரிவாக்கம்தான். ஞானி அன்பு செலுத்துகிறான். அதில் 'என்னுடைய' என்பதைச் சேர்ப்பதில்லை. அவன் அன்புமயமானவன். எல்லோருக்கும் அவனது அன்பு உண்டு. அவனது தூய அன்பைத்தான் புத்தர் கருணை என்கிறார்; மகாவீரர் அஹிம்சை என்கிறார். சராசரி மனிதர்களாகிய நமது அன்போ சிறைப்படுத்துவதாக, சித்திரவதை செய்வதாக உள்ளது. ஒருத்திமீது நமக்கு அன்பென்றால் அவளை அடைந்து நாற்புறமும் சுவர் எழுப்பிவிடுகிறோம். பெயர்தான் மனைவியே தவிர அவள் கூண்டிலடைபட்ட கிளியாகிறாள்.

நீ ஒருத்தியை உண்மையில் நேசிப்பவனாயின் அவளுக்கு முழு சுதந்திரம் அளிப்பாய். அவளைக் கட்டிப்போடமாட்டாய். கூண்டில் அடைக்காமல் ஆகாயத்தில் பறக்கவிடுவாய். ஆனால் உன் அன்பு ஆபத்தானதாக உள்ளது. அவள் யாரையாவது பார்த்துப் புன்னகை செய்தால் உனக்குத் தலைவரை விஷம் ஏறுகிறது. ஸ்ரீதனம் (சீதனம்) என்கிறார்களே அது பொன்னோ, பொருளோ அல்ல. ஸ்திரீயே தனம் (பெண்ணே ஒரு சொத்து) என்று ஆண்கள் அதன்மீது தங்கள் எஜமானத்துவத்தை நிலைநாட்டுகிறார்கள். நாம் காட்டும் அன்பில் இரக்கம் இல்லை என்பதால் புத்தர் அதற்குப் பதிலாக கருணை என்று சொன்னார். நமது அன்பில் வன்முறை (அடக்குமுறை) உள்ளதால் மகாவீரர் அதற்குப் பதிலாக அஹிம்சை என்று சொன்னார்.

ஞானி தன் உடலைப் பற்றி கவலைப்படுவதில்லை. அது ஒருநாள் இறக்கும் என்று அவனுக்குத்தெரியும். பிறந்த அன்றி லிருந்தே அது மரணத்தை நோக்கிப் பயணத்தைத் தொடங்கி விடுகிறது. இதை அறிந்தும் நாம் அறியாதது போலிருக்கிறோம். மேலும், வாழ்க்கையில் எது நடந்தாலும் நடக்காவிடிலும், நிச்சயமாக நிகழப்போவது சாவு என்றும் நமக்குத் தெரியும். அப்படியும் அது நினைவில் இருப்பதில்லை.

சாவு நம் எல்லோருக்கும் பொதுவான தலைவிதி அது நடப்பதை என் தடைசெய்யினும் நில்லாது. அது உடலுக்குள் ஒளிந்திருக்கிறது. அது வளர்ந்துகொண்டே செல்கிறது. ஒருநாள் உன்னைப் பிடித்துக்கொள்கிறது. சாவை உடலின் மறைமுகமான ஓர் அங்கம் எனலாம்.

சாவு நிச்சயம் என்னும்போது கவலைப்பட்டு என்ன ஆகப்போகிறது என்று ஞானி கேட்பான். சாவு நிச்சயம் என்பதால் தான் கவலைப்படுகிறேன் என்பான் சம்சாரி. சாவு என்னும் சொல்லைக் கூறவே நீ பயப்படுகிறாய். மற்றவர்களுக்குத்தான் சாவு, தனக்குக் கிடையாது என்பதுபோல் ஒவ்வொருவனும் நடந்து கொள்கிறான். நீ எத்தனையோ தடவை பிறந்து இறந்திருக்கிறாய். சாவு சமயமும் சரி, பிறக்கும்போதும் சரி, நீ மயக்கத்திலிருப்பதால் நீ மறுபிறவி எடுப்பது உனக்குத் தெரியவில்லை.

புத்தர் ஒரு கிராமத்துக்குப் போயிருந்தார். ஓர் ஏழை மனிதன் அவரை வணங்குகையில் மரியாதை நிமித்தம் தன் குடிசையில் உணவருந்த அழைத்தான். ஆனால் அவர் நிஜமாகவே வந்துவிட்டார்! ஏழையின் வீட்டில் உலர்ந்த சப்பாத்தியும் காளான் கறியும்தான் இருந்தது. சில சமயம் காளானில் விஷம் நிறைந்திருக்கும்.

புத்தர் கொஞ்சம் சாப்பிட்டதும் கறியில் விஷம் பரவி இருப்பதை உணர்ந்துவிட்டார் அவர் அவனைக் கண்டிக்க வில்லை. புத்தர் பரம ஏழையாகிய தன் வீட்டில் எளிய உணவு அருந்துகிறாரே என்ற பரவசத்தில் அவன் கண்ணீர்விட்டுக் கொண்டிருந்தான். பக்தியுடன் புத்தருக்கு விசிறிக் கொண்டிருந் தான்.

புத்தர் அவனது மனத்தைப் புண்படுத்த விரும்பவில்லை. பிறகு ஆயுள் முழுதும் அவன் குற்ற உணர்வால் துடிப்பான். கறியை மிச்சப்படுத்தினால் அதை அவன் சாப்பிடும்போது தெரிந்துகொண்டுவிடுவான். ஆகவே புத்தர் துளியும் மீதி வைக்காமல் மொத்தக் கறியையும் சாப்பிட்டுவிட்டார்!

புத்தர் தங்குமிடத்திற்குத் திரும்பினார். உடலில் விஷம் பரவியது. அவர் தனது மருத்துவரான ஜீவகர் என்பவரை அழைத்து நடந்ததைக் கூறினார். வைத்தியர் கோபித்தார். ஏன் அவனிடம் காளானில் விஷமுள்ளதைத் தெரிவிக்கவில்லை என்று கேட்டார்.

புத்தர் சொன்னார், "சாவு எப்படியும் நிச்சயம். அதில் நான் எப்படித் தலையிட முடியும்? ஆனால் அந்த மனிதனுக்கு வேதனை உண்டாக்காமல் இருப்பது என் கையில் இருக்கிறது. இன்றில்லையென்றால் மரணம் வேறுவிதத்தில் இன்னொரு நாள் வரத்தான் போகிறது," என்று சுட்டிக்காட்டினார்.

பிறகு அவர் தன் சீடர்களைக் கூப்பிட்டு ஒரு செய்தியைப் பரப்பச் சொன்னார். அந்தச் செய்தி: 'உலகில் இரண்டுபேர் நிச்சயமாக பாக்கியசாலிகள். புத்தர் பிறந்தபின் முதல் முறையாகத் தாய்ப்பால் கொடுத்தவரும், புத்தருக்குக் கடைசியாக உணவளித்த

வரும் (Last supper) அந்த இரு பாக்கியசாலிகள். சீடர்கள், "கடைசி உணவளித்தவனை ஏன் குறிப்பிட வேண்டும்?' என்று கேட்டனர். "இல்லாவிடில் அந்த உணவைச் சாப்பிட்டதால்தான் புத்தர் இறந்தார் என்று சந்தேகப்பட்டு அவனை அடித்துக் கொன்றுவிடுவார்கள்," என்று புத்தர் விளக்கினார்.

ஞானிகள் நிராசை (ஏமாற்றம்) நிலையிலும் சோபையுடன் விளங்குகின்றனர். உலகில் எந்த ஆசையும் (எதிர்பார்ப்பும்) முழுமையாக நிறைவேறுவதில்லை என்பதை அவர்கள் அறிந்துள்ளனர். ஞானிகளின் இந்த நிராசை நிலையில் அவர்களது வாழ்க்கையின் புஷ்பம் மலர்கிறது. வெளியே பெறுவதற்கு ஒன்றுமில்லை என்ற நிலையில் ஜீவ சக்தி உள்முகமாகப் பாய்கிறது. வெளியே ஓடி அலையத் தேவையில்லை என்ற நிலையில் ஞானிகள் உட்புற மையத்தில் அழகாக, அமைதியாக நிலைத்துவிடுகிறார்கள்.

நீ அன்பு, பாசம் என்று சொல்வதெல்லாம் அகங்காரத்தின் வெளிப்பாடுதான். ஆனால் நீ அதை மறைக்க முயல்கிறாய்.

முல்லா நஸ்ருத்தீன் ரயிலில் பயணித்துக் கொண்டிருக் கிறார். கையில் உள்ள செய்தித்தாளைத் தலைகீழாக வைத்திருக் கிறார்! ஏனெனில் அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் பிறர் முன்னிலையில் தன் அறியாமையைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை. ஆகவேதான் கடையில் செய்தித்தாள் வாங்கினார்.

அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பொல்லாதவன் விஷயத்தை ஊகித்துவிட்டான். அவன் நஸ்ருத்தீனிடம், "இந்தாங்க ஐயா, உங்களுக்குப் படிக்கத் தெரியாதுள்ளா, செய்தித்தாளை ஏன் வாங்கினீங்க. சும்மா உட்கார்ந்திருந்தா உங்க குட்டு வெளிப்பட்டிருக்காதே," என்றான்.

அதற்கு நஸ்ருத்தீன், "போய்யா உன் வழியைப் பார்த்துக் கிட்டு. எல்லோருமேதான் பேப்பரை நேராக வச்சு படிக்கிறாங்க. அதனால அதில என்ன விசேஷம்? எனக்குத் தலைகீழா பேப்பர் படிக்க வரும்னு ஜனங்க நல்லா தெரிஞ்சுக்கட்டும்," என்று சமாளித்தார்.

முட்டைக்குள் இருக்கும் குஞ்சு அதையே ஆகாயமென்று நினைக்கிறது. நீயும் அகங்காரம் என்னும் முட்டைக்குள் அடைபட்டுள்ளாய். அன்பெனும் விரிந்த ஆகாயத்தை நீ அறிந்ததில்லை. முட்டையை உடை வெளியே வா. உன்னைக் கட்டிப்போட்டுள்ள அகங்காரத்திலிருந்து வெளியேறு.

'கிடைத்ததை வைத்து வாழ்க்கை நடத்துகின்றவனும், நாட்டின் பகுதிகளில் சுதந்திரமாகச் செல்லக்கூடியவனும், சூரியன் மறையும் இடத்தில் உறங்குபவனும் ஆகிய ஆன்மவீரன் எங்கும் திருப்தியுடன் விளங்குவான்.' **(சுலோகம் 261)**

சந்நியாசி தனக்குக் கிடைத்ததை வைத்துக்கொண்டு வாழ்நாளை ஒட்டுவான். எது கிடைக்கிறதோ, எப்படிக் கிடைக் கிறதோ, எங்கே கிடைக்கிறதோ அதை ஏற்பது சந்நியாசியின் இலக்கணமாகும்.

அவன் எங்கும் நிரந்தரமாகத் தங்கிவிடுவதில்லை. அவன் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் சென்ற வண்ணமாக இருப்பான். அவன் குளம்போல் ஒரே இடத்தில் தேங்குவதில்லை. அவன் நதியைப் போல் முன்னேறியபடியே இருப்பான்.

இரவில் எங்கு தங்குவது என்று அவன் முன்கூட்டியே முடிவு செய்வதில்லை, திட்டம் தயாரிப்பதில்லை. சூரியன் அஸ்த மிக்கையில் அவன் எங்கு உள்ளானோ அங்கே தங்கிவிடுவான்! அதாவது அவன் எதிர்காலம் குறித்து தயாரிப்புகள் செய்வதில்லை.

ஆனால் அஷ்டாவக்ரர் உலகத்தை எதிர்ப்பவர் அல்லர். அவர் எல்லோரும் துறவறம் பூண்டு அலைந்து திரிவதை ஆதரிக்கவில்லை. பிறகு யார் யாருக்கு உணவளிக்க முடியும்?

துறவி இல்லறத்தானை நம்பி வாழ்கிறான். நாம் ஒரு விஷயத்தில் யாரை நம்பி இருக்கிறோமோ அதில் அவரைவிட உயர்ந்தவராக ஆக முடியாது. நாம் தாழ்ந்துதான் இருப்போம். இல்லறத்தான் துறவியின் காலைத் தொட்டு வணங்கினாலும் துறவி அவனுக்குக் கட்டுப்பட்டு இருக்கிறான்.

தாய்லாந்து அரசு துறவிகள் குறித்து ஒரு சட்டம் இயற்றியது. அங்கு மக்கள் தொகை நாலு கோடி. அவர்களில் பிட்சுக்கள் 20 லட்சம்! அந்த பிட்சுகளுக்கு எப்படி உண வளிப்பது? ஏழை நாடு. ஆகவே தாய்லாந்து அரசு பிட்சுக்களும் வயலில் உழைத்து விளைச்சலைப் பெருக்க வேண்டும் என்று ஆணையிட்டது. தியானத்திலேயே ஈடுபட்டிருந்த பிட்சுக்கள் உடலுழைப்பும் செய்ய நேர்ந்தது.

உலகம் முழுவதிலும் இப்படித்தான் ஆகப்போகிறது. இந்தியாவிற்கும் இது பொருந்தும். ஆகவே நான் புதிய சந்நியாச முறையைத் தொடங்கினேன். என் துறவி எவரையும் சார்ந்திருக்க மாட்டான். பிச்சைக்கார வாழ்வு நடத்தமாட்டான். நீ எங்கே இருந்தாலும், வீட்டில் இருந்தாலும், துறவறத்தைப் பின்பற்றலாம். உனது துறவறத்தை அரசாங்கம் பிடுங்கிக்கொள்ள முடியாது. பழைய முறையிலான சந்நியாசத்துக்கு இனி மதிப்பில்லை. முற்கால வகையிலான சந்நியாசிகள் சுரண்டல் பேர்வழிகள்! பிறரது உழைப்பில் வாழ்பவர்கள். அவர் தியானம் செய்ய வேண்டும், சமாதி நிலைக்குச் செல்ல வேண்டும் என்பதற்காக மற்றவர்கள் அதற்கு வசதி செய்துதர வேண்டுமென எதிர்பார்ப்பது நேர்மையில்லை. அவர் மடத்தில் உட்கார்ந்து பூஜைசெய்வதற்காக மற்றவர்கள் கல்லுடைத்துச் சிரமப்படுவது நியாயமில்லை. அவர் மற்றவர்களின் உழைப்பின் பயனை அனுபவிக்கும்போது அதற்கு கூலி கொடுத்தால் பாராட்டலாம். மடாதிபதி அல்லது நிறுவனம் நடத்தும் துறவிகள் எதையும் இலவசமாகப் பெறக்கூடாது. தேவை புதுவகையான துறவி. அவர் சமூகத்தின் நடுவில் வாழ்ந்துகொண்டு அதேசமயம் சமூகத்தைச் சுரண்டாமலிருப்பவராகவும், உலகப்பற்று நீங்கியவராகவும் இருத்தல் வேண்டும்.

அஷ்டாவக்ரர் உலகைத் தியாகம் செய்யச் சொல்லவில்லை. உலகைப் பற்றிய ஞானம் பெறச் சொல்கிறார். குடும்ப-சமூகக் கடமைகளைப் புறக்கணிக்கச் சொல்லவில்லை. எனது விளக்கப்படி, கடவுளிடமிருந்து எது எவ்வளவு கிடைக்கிறதோ அதை ஏற்றுக்கொள். அதற்கு மேல் இன்னும் வேண்டும் என்று நீயாகக் கேட்காதே. கிடைத்த அளவிற்குக் கடவுளுக்கு நன்றி கூறு.

ஞானி நாட்டின் பகுதிகளில் சுதந்திரமாக உலவுகிறான் என்று சுலோகம் கூறுவது பூகோளம் (நிலவியல்) சம்பந்தப்பட்ட விஷயமில்லை. உனக்குள்ளேயே விசாலமான ஆன்மிக தேசம் ஒன்று உள்ளது. அதைப் பகுதி-பகுதியாக ஆராய்ந்து முழு அறிவு பெற வேண்டும். உள்ளே பல வதை தேசங்கள்—சுவர்க்கம், நரகம், மோட்சம், குரோதம் (பழியுணர்வு), வெறுப்பு, அன்பு, கருணை, மோகம், பேராசை, தியாகம், வைராக்கியம் இப்படி எத்தனையோ பகுதிகள். அவற்றையெல்லாம் அறிந்துகொண்டால் அவற்றைக் கடந்து கடைசியில் எப்பகுதியும் இல்லை சூனிய மனநிலைக்குப் போவது சாத்தியப்படும்.

உலகில் பகலும் இரவும்போல் நமக்குள்ளேயும் அவ்வாறு அமைந்துள்ளன. வெளியில் சூரியன் உதிப்பதும் மறைவதும்போல, உள்ளே ஞானம் தோன்றிய நிலை, தோன்றா நிலை என இரண்டு உண்டு.

ஆத்மாவையும் உடலையும் இணைப்பது மனம். ஆத்மா என்பது ஒளி, ஞானம், சூரியன். உடல் என்பது இருட்டு, அமாவாசை, உடல் சாவு, ஆத்மா அமிர்தம். மனம் ஆத்மாவால் பாதியும், உடலால் பாதியும் பாதிக்கப்பட்டுள்ளது. மனத்தின் ஒரு பாதி பகலெனில் மறு பாதி இரவு. ஞானி பகல் என்னும் ஒளி இருக்கும் கட்டம்வரை வந்து நின்றுவிடுகிறான். அது அஸ்தமன சமயம் போன்ற கட்டம். அவன் இருட்டில் பிரவேசிப்பதில்லை.

வேறு விதமாகவும் கூறலாம். யோக சாஸ்திரப்படி உடலில் ஏழு சக்கரங்கள். கீழே மூன்று, மேலே மூன்று. நடுவில் இணைப்பது அநாகத சக்கரம் அல்லது இதயச் சக்கரம். கீழுள்ள மூன்று சக்கரங்கள் உலகத்தின் சின்னங்கள். மேலேயுள்ள கடைசி மூன்று முக்திநிலையின் அடையாளங்கள். கீழேயும் அன்பு உண்டு; மேலேயும் அன்பு உண்டு. ஆனால் வெவ்வேறு தரம். கீழேயுள்ள அன்பை காமம், இச்சை, ஹிம்சை என்போம். ஞானி இதயத்திற்கு மேலுள்ள சக்கரப் பகுதியில் ஒளிபிரதேசத்தில் தங்குகிறான். அறிவிலி கீழுள்ள இருட்டுப் பகுதியில் உழலுகிறான். கிருஷ்ணரின் பகவத்கீதையில் எந்த இருட்டில். எல்லா பிராணிகளும் உறங்குகின்றனவோ அப்போது ஞானி விழித்திருப்பான் என்பது இங்கு ஒப்பிடத்தக்கது.

'எவன் தனது சொந்த சுபாவம் என்னும் பூமியில் ஓய்வெடுக்கிறானோ, எவன் மீதி உலகை மறந்துவிடுகிறானோ அத்தகைய மகாத்மா உடல் இருந்தாலென்ன, போனாலென்ன என்று நினைப்பவனாக இருப்பான்.' **(சுலோகம் 262)**

**த**னது சுபாவத்தில் ஆழ்ந்திருப்பவன் என்றால், அதை மீறி அதற்கு எதிரிடையாகச் செல்லமாட்டான். தனது சுபாவத்தின் எல்லைகளைக் கடக்கமாட்டான். அவ்வாறு செய்து வீணாக மன இறுக்கம் கொள்ளமாட்டான் அவன் சகஜமாக, இயற்கையாக இருப்பான்.

ஆத்மா பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருப்பவன் உலகை மறக்கிறான். உலகைப் பற்றியே அதிகமாக நினைப்பவனுக்கு ஆத்மாவின் ஞாபகம் இருக்காது. ஒரே மனிதனிடம் இந்த இரண்டு கண்ணோட்டமும் ஒரே சமயம் இருக்காது. கயிறு பாம்பாகத் தெரியலாம். பாம்பு கயிறாகத் தெரியலாம். இரண்டு தோற்றமும் ஒரேசமயம் தெரியாது.

ஞானிக்கு உடல் உலகத்தின் அங்கம் என்றும், தனது அங்கம் இல்லை என்றும் தெரியும். 'நான் உடல் அல்லன்' என்பது அவனது அறிவிப்பு.

'பணிவானவனும், சுதந்திரமானவனும், உள்மனப் போராட் டங்கள் அற்றவனும், சந்தேகமற்றவனும், பற்றற்றவனும், தனியான வனுமான ஞானி எல்லா மனநிலைகளையும் அறிந்தவனாக இருப்பான்.' **(சுலோகம் 263)**

**ஞா**னி அகங்காரம் என்பது பொய் அறிவிப்பு என்பான். 'நானும் கவனித்து மதிக்கப்பட வேண்டியவன்தான் என்னும் திமிர் அவனிடம் இருக்காது. அவன்' துணிந்து 'நான் பூஜ்ஜியம், சூனியம்' என்பான். அவன் தனக்கு இயற்கையானதையே செய்கிறான். நடப்பதைத் தடுக்காமல் நடைபெற விடுகிறான். விளைவை ஏற்றுக்கொள்கிறான். அதிலிருந்து நழுவ அவன் முயல்வதில்லை.

அவன் தன் உள்மனப் பிரதேசம் எங்கும் பயணிக்கிறான். பார்க்க வேண்டியதை எல்லாம் பார்க்கிறான். ஆழத்தில் இறங்குகிறான், உச்சத்தைத் தொடுகிறான்.

தான் ஒன்றுமில்லை என நினைப்பவனால்தான் சுதந்திரமாக இயங்க முடியும். ஆனால் கௌரவம், புண்ணியம், மோட்சம் ஆகியவை பெற விரும்புபவன் சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொண்டு அவற்றைப் பின்பற்ற நேரிடும் அவன் மனத்தில் போராட்டங்கள் நிகழும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! என் கண்கள் மழைகாலம் போல் நீர் பொழிகின்றன. ஆயினும் என் தாகம் அடங்கவில்லையே!**

மனம் என்னும் ஒன்றிருக்கும் வரை தாகமும் நீடிக்கத்தான் செய்யும். மனமும் தாகமும் பிரிக்க முடியாதவை. அதிருப்தியுடன் இருப்பது மனத்தின் சுபாவம். மனம் திருப்தியடைய வாய்ப் பில்லை. மனம் நடைபெற முடியாத ஒன்றை நடைபெற வைக்க முயலுவதால் அதன் தாகம் அடங்குவதில்லை. தாகம் ஏற்பட்டால் அது தணிவதும் சாத்தியம்தானே என நினைக்கலாம். இந்த வாதம் மனத்திற்குப் பொருந்தாது.

கண்களிலிருந்து வடியும் அன்புக் கண்ணீருக்கும் மனம் திருப்திகொள்வதற்கும் சம்பந்தம் இல்லை.

இந்த வாழ்க்கையில் நாம் பல திட்டங்கள் தயாரிக்கிறோம். ஆனால் எந்தத் திட்டம் நிரந்தரமாக முழுமை பெற்றிருக்கிறது? அலெக்சாந்தரே முழுமையான வெற்றி பெற்றவரில்லையே. உலகாளும் அவரது கனவு பலிக்கவில்லையே. அவர் 33 வயதிலேயே இறந்துபோனாரே.

நாம் செய்வது ஒன்று. கிடைக்கும் பலன் வேறொன்று. மனம் வெளியுலகில் சுற்றுகிறது; வெளியுலகில் தேடுகிறது.

நீ கூறிய உன் அழுகையைத் தடுக்க இரண்டு வழிகள் உள்ளன. அவை ஆறுதல், தியானம் என்பவை. நீ பார்க்கும் சமயத் தலைவர்களும் சந்நியாசிகளும் மேற்கொள்ளும் வழி ஆறுதல் கூறுதல். அவர்கள் உன் கண்ணீரைத் துடைக்கிறார்கள்;

முதுகில் தட்டிக்கொடுக்கிறார்கள்; தாலாட்டுப் பாடுகிறார்கள். "குழந்தாய்! எல்லாம் கடவுள் கிருபையால் சரியாகிவிடுமப்பா. பயப்படாதே. நான் சொல்லித்தரும் மந்திரத்தை ஜெபம் செய். நான் தரும் ஜெபமாலையை உருட்டு," என்று சொல்கிறார்கள். இவர்கள் நீ ஞான விழிப்புப் பெற விடுவதில்லை.

வேறு சில சாமியார்கள், "அதிர்ஷ்டத்தை நம்பு. கடவுளை நம்பு. பூஜை செய். பாராயணம் செய். ஹோமம் செய். யாகம் செய். நீ இதுவரை தனியாக முயன்றாய். இனி நீ கடவுளையும் உன் பக்கம் சேர்த்துக்கொண்டு ஆன்ம தாகம் நீங்க முயற்சிசெய். நீ இதுவரை அரைகுறையாக முயற்சி செய்தாய். இனி நீ முழு மூச்சுடன் முயன்று பார்," என்று ஆலோசனை கூறுவார்கள்.

**எ**ன் ஆசிரியர் ஒருவர், அலெக்சாந்தர் கூறிய, 'முடியாது என்று எதுவும் கிடையாது' (Nothing is impossible) என்னும் மேற்கோளை அடிக்கடி வகுப்பில் எடுத்துக்கூறுவார். பிறகு அக்கருத்தை விளக்கியும் வற்புறுத்தியும் சிறப்பாகச் சொற்பொழிவு செய்வார்.

என்னால் பொறுக்க முடியவில்லை. ஒருநாள் நான் எழுந்து, "சார்! உங்கள் பேச்சு அருமையாக இருந்தபோதிலும் உண்மையில்லை. இந்த மேற்கோளைக் கூறிய அலெக்சாந்தரின் வாழ்க்கையே படுதோல்விதானே. நீங்கள் முடியாதது என எதுவும் கிடையாதென உறுதியாக நம்புவதால் இந்தக் கரும்பலகையில் 2+2=3 என்று வருமாறு செய்துகாட்டுங்கள் பார்ப்போம். அப்படிச் செய்தால் நானும் உங்களைப் போலவே முடியாதது என எதுவுமில்லை என்பதை ஒத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்," என்று ஆசிரியரை மடக்கினேன். அவர் அசந்துபோனார்.

நான் போலியான ஆறுதல் தருபவனில்லை. என் கருத்து கசப்பாக இருந்தாலும், உனக்குக் கோபமூட்டினாலும், நான் யதார்த்தத்தை மறைக்க விரும்பவில்லை. தட்டிக்கொடுத்து உன்னைத் தூங்கச் செய்யாமல் முடிந்தவரையிலும் உங்களை எழுப்பவே முயல்கிறேன்.

மனம் இருக்கும்வரை துன்பமுண்டு, நரகமுண்டு. நீ மனத்தைக் கட. மனத்தை உறங்கச் செய்துவிட்டு நீ கண்விழி.

மனம் என்னும் ஜன்னலைவிட்டு விலகி நில். தியானத்தின் அர்த்தம் இதுதான். மனத்தில் எண்ணமே தோன்றாத இடை வெளியில் எந்தத் தாகமும் உண்டாகாது. அப்போது திருப்தியாக உணர்வாய். எண்ணம் இருக்கும் வரை தாகம் (ஏக்கம்) இருக்கும். எண்ணமற்ற நிலையில் திருப்தி நிறைந்திருக்கும்.

நீ செய்ய வேண்டிய ஒரே வேலை தியானத்தை மேற் கொள்வது. இதற்கென நீ தினமும் நேரம் ஒதுக்கிவை. மனத்தில் எழும் எண்ணங்களை வலுக்கட்டாயமாகத் தடுக்காதே. தடுத்தால் அவை நீடிக்கும். எண்ணங்களை அவற்றின் போக்கில் விட்டால் அவை வெளியேறி, சிறிது நேரத்தில் மனம் வெற்றிடமாகிவிடும். கெட்ட எண்ணங்கள் எழுந்தால் பயப்படாதே. அதற்காக உன்னை நிந்தித்துக் கொள்ளாதே. தியானத்தின் மூலம் அவை வெளியேற வாய்ப்புக் கிடைக்கிறது. நீ உன் மனத்தை நீதிபதிபோல் மதிப்பிடாமல் சாட்சிபோல் பார்த்தபடி இரு.

நல்ல, கெட்ட எல்லா எண்ணங்களும் வெளியேற விடு. என் மனம் என்னும் நினைவுகூட இருக்க வேண்டாம். நீ மனமில்லை. நீ உடலில்லை. நீ உள்ளே உட்கார்ந்தபடி எண்ணங்கள் வெளியேறு வதைப் பார். எண்ணங்கள் முழுமையாக வெளியேறிவிடும் என நம்புவது ஆரம்பத்தில் சிரமம்தான். ஏனெனில் கடலில் அலைகள்போல் அல்லவா எண்ணங்கள் விடாமல் வருகின்றன.

முதலில் முடிவே இல்லாமல் இருட்டாகத் தோன்றும். பயப்பட வேண்டாம். நண்பகலில் கொளுத்தும் வெயிலில் வெளியே அலைந்துவிட்டு வீட்டுக்குள் நுழைந்ததும் முதலில் இருட்டாகத் தோன்றுகிறது. சில விநாடிகளில் கண்கள் பழைய நிலைக்கு வருகின்றன. சுற்றிலும் வழக்கமான பிரகாசத்தைக் கண்கள் உணர்கின்றன.

சற்று பழக்கம் தேவை. எண்ணங்கள் ஆற்றைப்போல் பெருக்கெடுத்து ஓடுவதைப் பார்த்து அவற்றிற்கு முடிவே கிடையாதெனத் தோன்றும். மனம் மிரட்டும். ‘தியானம் செய்தது போதும். திரும்பிச் செல். முன்பு நன்றாக இருந்தாய். ஒரே நேரத்தில் இவ்வளவு எண்ணங்கள் முண்டியடித்துக் கொண்டு வந்ததில்லை. நீ எப்பொழுது தியானத்தில் உட்கார்ந்தாலும்

இப்படித்தான் ஆகப்போகிறது. தியானத்தால் எவரோ ஒருவருக்குப் பலன் கிடைத்தது என்பதால் உனக்கும் பலன் கிடைக்கும் என்று நிச்சயமில்லை. அப்படி எவருக்கோ பலன் கிடைத்தது என்பதுகூட பொய்யான செய்தியாக இருக்கும். இந்த தியானம், சமாதி என்பதெல்லாம் உன் கற்பனை விரித்த வலைகள்' என்று மனம் கூறி உன்னைப் பின்வாங்க வைக்கும்.

நீ சற்றுப் பொறுமையாக இரு. எண்ணங்களை மதிப்பிடாமல் அவை ஓடுவதைப் பார்த்தபடி இரு. முதலில் தொடர்ச்சியாக எண்ணங்கள் வரும். பிறகு இடைவெளி தோன்ற ஆரம்பிக்கும். பிறகு அது நீண்ட இடைவெளியாக அமையும். அந்த இடைவெளி சூனியப் பிரதேசமாக இருக்கும். அந்த சூனியம் திருப்தி தருவதாக இருக்கும். தாகம் நீங்கும்.

மனத்தின் மூலமாக யாரும் எப்போதும் திருப்தி பெற்ற தில்லை. திருப்தி பெற்றவர்கள் மனத்தைக் கடந்தவர்களாகவே இருப்பர். மனம் அதிருப்தியின் விளைநிலம். தியானம் திருப்தியின் ஊற்று.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்களை மொழி அறிஞர், பொருளாதார வல்லுநர், மேலாண்மை மேதை, சட்ட நிபுணர், சமூகவியல் பண்டிதர், அரசியல் அறிஞர் என்று கூறுவதையெல்லாம் ஏற்பதில்லை. இந்த விஷயங்கள் பரமஞானத்தில் அடங்கியவை இல்லையா? எனக்கோ நீங்கள் சகலகலா வல்லவராகத் தெரிகிறீர்கள்.**

பரமஞானம் என்றால் பரம அஞ்ஞானம் என்று அர்த்தம்! பரமஞானத்தில் எதுவுமே உள்ளடங்கியிருக்கவில்லை. அதிலிருந்து எல்லாம் வெளியேறிவிடுகின்றன. ஏற்கெனவே கற்றதெல்லாம் வீணெனத் தோன்றுகிறது. கற்றவன்தான் மிஞ்சியிருக்கிறான். அறிந்தவன் மிஞ்சியிருப்பதுதான் பரமஞானம். அப்போது சாட்சி மட்டுமே மிஞ்சியுள்ளான். பரமஞானம்

அறிவுடன் சம்பந்தப்பட்டதில்லை. அறிந்தவனுடன் சம்பந்தப் பட்டது.

பரமஞானத்தில் நீ சொன்ன சாஸ்திரங்கள் கிடையாது. தர்ம சாஸ்திரம், ஆன்மிகம், தத்துவ இயல் ஆகியவையும் கிடையாது தான். பரமஞானத்தில் எதுவுமே கிடையாது! பரமஞானம் என்பது மகாசூனியத்தின் பெயர். ஆகவேதான் பூரண அறிவு என்பது பூரண அறியாமை என்கிறேன். அந்த நேரத்தில் நீ எதுவும் அறிந்திருப்பதில்லை. நீ மட்டுமே மிஞ்சுகிறாய்.

சாதாரண அறிவிற்கும் பரமஞானத்திற்குமிடையே பலத்த வேறுபாடு உண்டு. நீ ரோஜாப் பூவைப் பார்க்கிறாய். அதன் உருவம் கண்ணிற்குள் அப்படியே செல்வதில்லை. கண்ணின் பின்புறத்திலுள்ள நரம்புகள் விளைவிக்கும் ரசாயன மாற்றத்தால் மீண்டும் ரோஜாப்பூ தெரிகிறது.

நீ என்பவன் (உணர்பவன்) உள்ளே இருக்கிறாய். பூ வெளியே இருக்கிறது. ஆனாலும் பூ தனது உருவத்தை மீண்டும் எடுக்கிறது. இது சாதாரண அறிவு என்றால் பரமஞானம் என்பது எதுவாக இருக்க முடியும்? எந்த உருவமும்—அது சாணக் குவியலானாலும், மலர்க் குவியலானாலும்—தோன்றாமைதான் பூரண ஞானம். அப்போது நீ எல்லாத் தோற்றங்களின் பாதிப்பி லிருந்தும் விடுபடுகிறாய். நீயே ஒருவகையில் உருவமில்லாத வனாக ஆகிவிடுகிறாய்.

பூரண ஞான நிலையில் எந்தத் தோற்றமும் மனத்தில் எழுவதில்லை என்னும்போது புத்தர், கிருஷ்ணர் முதலியவர் களின் தோற்றமுமா வரக்கூடாது என்று கேட்டால், 'ஆம்' என்பதே எனது பதில். ஒரு ஜென் துறவி, "உனது தியானத்தின் போது புத்தரின் உருவமும் நினைவில் வந்தால் கத்தி எடுத்து அவரை இரண்டு துண்டாக்கிவிடு." என்கிறார்! நானும் அதையே சொல்கிறேன். அப்படியே செய், தயங்காதே. தியானத்தின்போது புத்தரின் நினைவு வந்தால் உனது தியானம் சிறிதளவாவது சிதைந்துவிட்டது எனலாம்.

இதேபோல், தியானத்தின்போது கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசித்தால் அவரையும் வெளியே விரட்டிவிடு. அதுவும்

தியானத்திற்கு இடையூறு (விக்கினம்) ஆகும். இயேசுநாதர், கிருஷ்ணர், புத்தர், மகாவீரர் போன்ற எல்லாத் தோற்றங்களுக்கும் கும்பிடு போட்டுவிட்டு அவர்களிடமிருந்து தப்பிப் பிழை. பரிபூரண ஞானத்திற்கு முந்தைய நிலையில் மனம் இப்படித் தோற்றங்களை அனுப்பிக் கடைசிப் படியில் ஏறவிடாமல் தடுத்துவிடுகிறது.

பரமஞான நிலை எத்தோற்றமும் இல்லாத சூனியநிலை. ஆகவே அதை ஒன்றுமே இல்லாத பூரண அறியாமை நிலை என்று கூறுகிறேன்.

நீ என்னை சகலகலாவல்லவன் என நினைத்துப் புகழ்கிறாய். காரணம், என்மீது உனக்கு மிகையான அன்பு (மோகம்) உள்ளது. ஆனால் எனக்கு என் மீது சிறிதும் பற்று கிடையாது. பிடிப்பு கிடையாது. ஆகவே நான் என்னை எதுவும் தெரிந்தவனாக நினைத்துக் கொள்வதில்லை. இதை நினைவில் முடிச்சுப்போட்டு வைத்துக்கொள்.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! புத்த புருஷர்களை (புத்தர் போன்ற ஞானம் பெற்றவர்களை) எப்படி அடையாளம் காண்பது?**

இதற்குப் பதில் கூறுவது கடினம். ஞானிகளுக்கென்று விசேஷ அங்க அடையாளங்கள் இல்லை. ஏனெனில் ஞானி என்பவர் இப்படித் தான் இருப்பார் என்று உதாரணங்கள் கூற முடியாது. பிறருடன் ஒப்பிட்டு முடிவு செய்ய முடியாது. ஒவ்வொரு ஞானியும் தனி ரகம், தனிப் பிறவி.

உதாரணமாக, புத்தரை அடிப்படையாக வைத்து மகாவீரர் ஞானியா, இல்லையா என்று மதிப்பிட முடியாது. மகாவீரரை உதாரணமாக வைத்து கிருஷ்ணர் எந்த அளவிற்கு ஞானி என்று நிச்சயிக்க இயலாது. ஞானி குறிப்பிட்ட ஒருவரைப்போல்தான் இருக்க வேண்டுமென நீ நினைத்தால் மற்ற ஞானிகளின் ஞானம் உனக்குக் கிடைக்காமல் போய்விடும்.

உலகில் ஏராளமான ஞானிகள் தோன்றியிருக்கிறார்கள். இனியும் தோன்றுவார்கள். இவர்களின் வெளியே தெரியும் நடை-உடை-பாவனைகள் வெவ்வேறு. உள் உலக அடிப்படையில்தான் இவர்கள் ஞானிகள் என்னும் ஒற்றுமையுண்டு. இவர்களின் வெளித் தோற்றத்திற்கும் உள்தோற்றத்திற்கும் சம்பந்தமிருக்காது.

மகாவீரர் ஆடையின்றி நிற்கிறார். கிருஷ்ணர் மஞ்சள் ஆடை, மயிலிறகு கிரீடம், புல்லாங்குழலுடன் காட்சி தருகிறார். இயேசுநாதர் சிலுவையில் தொங்குகிறார். புத்தர் சிலைபோல போதி மரத்தின்கீழ் அமர்ந்துள்ளார். அசையவே மாட்டார்போல் தெரிகிறது. சீன ஞானி லாவோத்சூ பார்ப்பதற்கு நம்மைப் போலவே, சாதாரண மனிதர் போலவே தெரிந்தார். கூட்டத்தில் அவரைத் தனியாகப் பிரித்துப்பார்க்க முடியாது. இவர்கள் வெளித் தோற்றத்தில் துளிக்கூட சமமாக இல்லை. ஆனால் உள்ளே இவர்கள் அனைவரும் சமமாக ஞான விழிப்புப் பெற்றிருந்தனர்.

நூற்றுக் கணக்கான வகைகளில் விளக்குகள் தயாரிக்கலாம். அவற்றை வெவ்வேறு நிறத்திலான மெல்லிய காகிதத்தால் மூடுகிறோம். ஒவ்வொரு விளக்கின் உயரம், பருமன் வித்தியாச மாக இருக்கலாம். ஆனால் எல்லா விளக்குகளையும் ஏற்றிய பிறகு உள்ளே தெரிவது ஒரேமாதிரியான பிரகாசம்தான். ஒவ்வொரு விளக்கையும் ஒரு ஞானியாகக் கொண்டால், விளக்கின்மேல் ஒட்டியுள்ள மெல்லிய வண்ணக் காகிதப்படி வெவ்வேறு நிற ஒளி தருவார். ஆனால் அனைவர் உள்ளேயும் பிரகாசிக்கும் ஞான ஒளி ஒன்றேதான்.

ஞானியைக் கண்டறிய அடையாளம் அவர் முழு விழிப்புப் பெற்றவராக இருப்பதுதான். ஆனால் முழு விழிப்புணர்வு என்றால் என்ன? நீ தூங்குகிறாய்; தூக்கத்தை அனுபவிக்கிறாய். விழிப்பு பற்றி உனக்கு எதுவும் தெரியாது. அந்தச் சொல்தான் உனக்குப் பழக்கம். அந்த அனுபவம் உனக்குக் கிடைத்ததில்லை. விழித்தால்தான் விழிப்பு பற்றி அறியலாம்.

விழிப்பு என்பதை வரையறுத்துக் கூற முடியாது. வரையறுத்தல் என்றால முழுமையாகக் கூறுதல் என்று பொருள். அதற்கப் பதிலாக சாடை (சமிக்ஞை) மூலம் விழிப்பைச் சிறிது

புரியவைக்கலாம். சந்திரனை வரையறுப்பது கடினம். ஆனால் விரல் மூலம் சாடை காட்டி எது சந்திரன், அது வானத்தில் எங்குள்ளது என்று சுட்டிக்காட்டலாம்.

ஞானி என்று ஒருவனைச் சுட்டிக்காட்டும் சில சங்கேதங்கள் (அறிகுறிகள்):

அவன் பணிகளில் ஈடுபட்டுள்ள நிலையிலும் உறங்குபவன் போல் அமைதியாகத் தெரிவான். அவன் நடந்தாலும் நடக்கவில்லை போலிருக்கும். பேசினாலும் பேசவில்லைபோல் தோன்றும். உட்கார்ந்தாலும் எழுந்தாலும் அசையவில்லை போலிருக்கும். அவன் தூங்கினாலும், அவன் தூங்குவதை நீ பார்த்தாலும் அவனுக்குள் ஏதோ விழித்திருப்பதுபோல் இருக்கும். அவன் விழித்திருக்கும்போதோ தூங்குபவன்போல் சாந்தமாக விளங்குவான். அவனது முன்னிலையில் நீயும் படபடப்பு நீங்கி சாந்தமாக உணர்வாய். வெளியுலகில் அலைந்தபடி இருந்த உன் மனம் வீட்டுக்குத் திரும்பும். அவனருகே உட்கார்ந்தால் அவனது ஆளுமை உன்னை இழுப்பதுபோல் தோன்றும். அவன் உன்னைப் பயணிக்க வைப்பது போலிருக்கும். இத்தனைக்கும் அவனாக உன்னை எதுவும் செய்யமாட்டான். நீதான் அவன் அருகில் இருந்தால் மாறுவாய்.

ஞானி அருகே நீ இருக்கையில் வானம் திறந்துகொண்டது போல் தோன்றும். அவரது முன்னிலையிலும் உன்னைச் சுற்றிலுமுள்ள சுவர்கள் இடிந்து விழுந்தனபோல் உணர்வாய்.

காலையில் நீ கண்விழிக்கும் நேரம். தூக்கம் கலைந்து கொண்டிருக்கிறது. ஆனால் முழுமையாகக் கலையவில்லை. பால்காரன் கதவு மணி அடிக்கிறான். பிள்ளைகள் பாடப் புத்தகங்கள் முதலியவற்றைப் பள்ளிக்கு எடுத்துச்செல்ல ஏற்பாடு செய்யும் ஓசைகள். சமையலறையில் மனைவி பாத்திரங்களை நகர்த்தும் சத்தம். நீ தூங்கவும் இல்லை, விழிக்கவும் இல்லை. எந்த ஒலியும் கேட்காத அளவிற்கு நீ உறக்கத்தில் இல்லை. அதேசமயம் ஒலிகளைப் பிரித்தறியும் அளவிற்கு நீ இன்னமும் விழிக்கவுமில்லை. ஆன்மிக உலகில் உனது நிலை இப்படித்தான்

உள்ளது. இந்த அரைத் தூக்க நிலையில் நீ ஞானிகளை எப்படி அடையாளம் கண்டுகொள்வாய்?

ஞானியைப் பற்றிய அடையாளங்களில் ஒன்றிரண்டு உறுதிப்பட்டாலும் நீ நம்பலாம். நீ எதிர்பார்க்கும் எல்லா லட்சணங்களும் உள்ளனவா என்று அறிந்த பிறகே ஒருவரை ஞானியாக ஏற்பேன், அவரை வணங்குவேன் என்று நீ முடிவு செய்தால் அது பைத்தியக்காரத்தனமாகும். அல்லது அரசாங்கம் யார்-யார் ஞானி என அறிவித்துச் சான்றிதழ் வழங்கும் என்று காத்திருக்க வேண்டாம்.

வினோபா பாவேயை இந்திய அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்ற ஞானி என்று வேடிக்கையாகச் சொல்வார்கள். போப் ஆண்டவர்களும் ஏதோ தேர்வுபோல் வைத்துச் சிலரைப் புனிதர்களென அறிவிக்கிறார்கள். சங்கராச்சாரியார்கள் சாஸ்திர ஞான அடிப்படையில் வாரிசுகளை நியமிக்கிறார்கள். இவை சமுதாயத்தில் மேற்கொள்ளப்படும் சம்பிரதாயமான நடவடிக்கைகளே தவிர, இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுபவர்களை ஞானிகள் என்று கூறமுடியாது.

நீ ஞானி என்பவரை முழுமையாக அடையாளம் காண முடியும் என நினைக்க வேண்டாம். அவ்வாறு ஒருவேளை ஞானியின் முழு லட்சணங்களும் உனக்குத் தெரியவரும்போது நீயே ஞானியாக மாறியிருப்பாய்! சந்திரனின் ஒரு துண்டு (பிறை) கிடைத்ததுபோல் ஞானியின் லட்சணங்கள் ஒன்றிரண்டு உனக்குத் தெரியவருகின்றன. அவற்றைப் பிடித்துக்கொண்டு முன்னேறு. ஒருநாள் முழுநிலவை அடைவாய். அதாவது, நீயே பூரண சந்திரனாக மாறியிருப்பாய்.

ஞானிகள் சோகமாக இருக்கமாட்டார்கள். நீ கோயில் களிலும் மடங்களிலும் பார்க்கும் சாமியார்கள் கம்பீரமாக, அதாவது இறுக்கமாகத் தெரிகிறார்கள். முகத்தைத் தொங்கப் போட்டபடி இருக்கிறார்கள். ஞானி அப்படி இருக்கமாட்டான். அவர்கள் மலர்ச்சியுடன் காணப்படுவார்கள். உதடுகளில் புன்சிரிப்புத் தவழும். அதைக் காணும்போது உன் மனத்தில் திருவிழாபோல் உணர்வாய். இப்படிப்பட்டவர்களை விடாதே.

அவர்களின் திருவடிகளைப் பற்றிக்கொள். இதன் மூலம் நீ முக்திபெற்று சுதந்திரமான ஆன்ம ஆகாயத்தில் சிறகடித்துப் பறப்பாய். உன் வாழ்வின் இலையுதிர்காலம் முடிந்து நிரந்தரமான வசந்தகாலம் தொடங்கிவிடும்.

நீ ஞானியை சிரத்தையுடன் நெருங்கியதுமே சுற்றுச்சுழல் புதுமையாக மாறிவிட்டதுபோல் தோன்றும். இதுவரை உன்னைச் சுற்றியிருந்த பழைய அமைப்புகள், இடிந்த சுவர்கள், துர்நாற்ற மடித்த குப்பை கூளங்கள் காணாமல் போய்விடும். ஒவ்வோர் இலையிலும் புதிய பனித்துளி விழும். உனது மனமென்னும் குடம் தூய அன்பால் நிரம்பி வழியும். அது பிறரையும் சென்றடையும்.

### நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! சுதந்திரமாவது பற்றி [முக்தி பற்றி] சுருக்கமாகச் சொல்லுங்கள்.**

நீ சுதந்திரமாக ஆக வேண்டியதில்லை. நீ ஏற்கெனவே சுதந்திரமானவன்தான். நீ புதிதாக எதுவும் செய்ய வேண்டாம். முயற்சி, பயிற்சி, சாதகம் என்று எதுவும் தேவையில்லை. சுதந்திரமாக இருப்பது உனது சுபாவம். நீ வாழ ஆரம்பி. சுதந்திரமானவன் என்னும் உணர்வுடன் வாழ்க்கை நடத்து. பிறகு நாள்தோறும் உன் சுதந்திரம் வளர்ச்சியடைவது தெரியவரும். இதுவரை பலன்களுக்கு அடிமையாக வாழ்ந்த உன் பைத்தியக்காரத்தனத்தை நொந்துகொள்வாய். நீ சுதந்திரத்தை அடைய வேண்டியதில்லை. வெளிப்படுத்துவதுதான் பாக்கி உள்ளது. விதையில் மரம் மறைந்திருப்பதுபோல் சுதந்திரம் உனக்குள் மறைந்துள்ளது. அது வெளிப்பட்டுவளரவேண்டும். இந்த விஷயம் உன் இதயத்துள் இறங்கட்டும்.

### ஐந்தாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் வாழ்க்கையைப் பல கோணங்களிலிருந்து ஆராய்ந்து அந்த முகப்புகளை எமக்கு அறிமுகப்படுத்தி வருகிறீர்கள். ஆனாலும் வாழ்க்கையின்**

**ரகசியங்கள் பிடிபடவில்லை. வாழ்க்கை தினமும் புதிய ஆச்சரியங்களைக் கிளப்புகிறது. இதைச் சற்று விளக்குங்களேன்.**

**வா**ழ்க்கையே ஒரு ரகசியம்தான். அதை அறிய-அறிய அது மேலும் ரகசியம் நிறைந்ததாகிறது. வாழ்க்கையை அறிந்துகொண்டால் அதன் ரகசியமும் முடிவுபெறும் என்று நினைக்காதே. ஒன்றை அறிந்தால் அதன் ரகசியம் நீங்கியது என்று மக்கள் நினைக்கிறார்கள். ஏனெனில் விஞ்ஞானம் அவ்வாறுதான் கூறுகிறது. விஞ்ஞானம் ரகசியத்தின் எதிரி. அதன் காரணமாகவே உலகில் ஆச்சரிய உணர்வு இழக்கப்பட்டுவிட்டது. இப்போதெல்லாம் மக்கள் எதைக் கண்டும்-கேட்டும் வியப் படைவதில்லை.

உலகில் அன்றாடம் நடைபெறும் நிகழ்ச்சிகளிலும் ஆச்சரியப்படுத்தும் அம்சமுள்ளதை ஜடமனிதர்களாகிய நாம் கவனிப்பதில்லை. விதையிலிருந்து முளை தலைநீட்டுவது ஆச்சரியமில்லையா? மரத்தில் புதிய இலை துளிர்ப்பது ஆச்சரியமில்லையா? பெண்ணின் கர்ப்பத்திலிருந்து குழந்தை பிறப்பது மகா ஆச்சரியமில்லையா? தினமும் இரவில் மலர்கள்போல் ஏராளமான நட்சத்திரங்கள் தவறாமல் தோன்றுவது ஆச்சரியமில்லையா?

நீ மட்டும் கவனமாகப் பார்த்தால் வாழ்க்கை நாற்புறமும் ஆச்சரியங்களை அள்ளிவீசுகிறது; ரகசியங்கள் நிறைந்ததாக உள்ளது. விஞ்ஞானம் ரகசியத்திற்கு எதிரி. ரகசியம்தான் ஆச்சரியத்தை ஏற்படுத்துகிறது. விஞ்ஞானம் ரகசியத்தை உடைப்பதால் வாழ்க்கையின் சுவாரசியம் நீங்கிவிடுகிறது. வாழ்க்கை என்னும் காவியம் சுவை இழந்து நீர்த்துப்போகிறது. வாழ்க்கையில் அர்த்தம் மிஞ்சுவதில்லை. அது சாதாரணக் கதையாகிவிடுகிறது. முட்டாள் சொல்லும் கதை. அதில் ஆர்ப்பாட்டமும் ஆவேசமும்தான் மிகுதி.* அதுவெத்துவேட்டு.

---

* .................. it is a tale
Told by an idiot, full of sound and fury
signifying nothing. *(Shakespeare, Macbeth)*

ஆன்மிகத்தில் ஆழ்ந்து செல்லச் செல்ல ரகசியத் தன்மை முடிவடைவதில்லை. அந்த ரகசியத்தின் சுவை அதிகரித்தபடி செல்கிறது. விஞ்ஞானம் ரகசியத்தை அழிக்கிறது. ஆன்மிகம் ரகசியத்தின் மீது படிந்துள்ள தூசியை அகற்றி ரகசியம் புதுப் பொலிவுடன் விளங்கச் செய்கிறது.

நீ தொடர்ந்து தேடு. தேடும் அளவிற்கு நீ பெறுவாய். ஆகவே தேடுதல் தொடரட்டும்; முடிவில்லாமல் தொடரட்டும். நான் பயணம் கற்பிக்கிறேன். சேருமிடம் ஒன்று இருப்பதாக நான் சொல்வது பாசாங்கு. ஆனால் அப்படிச் சொன்னால்தான் நீ ஓடுவதைத் தொடர்வாய். ஆனந்தம் பயணிப்பதில்தான் உள்ளது. பயணமே சேருமிடமும் ஆகும்.

ஆகவே ரகசியத்தைக் குறைக்கும் முயற்சியில் ஈடுபடாதே. ரகசியத்தை மகாரகசியமாக்கு. அது என்றும் தீர்வுகாண முடியாத ரகசியமாக விளங்கட்டும். ரகசியத் தன்மை நீங்கினால் அது ஆன்மிக ரகசியமாக இருக்காது. முடிவு பெறும் விஷயம் எதுவும் பரம சத்தியமாக இருக்காது.

ஆன்மிகத்தில் ஒரு சிகரத்தில் ஏறிவிடுகிறாய். சேருமிடம் வந்தாகிவிட்டதென நினைக்கிறாய். அப்போது முன்பைவிடப் பெரிய சிகரம் ஒன்றைக் காண்பாய். இப்படி அடுக்கடுக்காக சிகரங்கள் வந்த வண்ணமாக இருக்கும். கதவுகள் ஒன்றுக்குள் ஒன்றாகத் திறந்துகொண்டே செல்லும். ரகசியத்தை அடுத்துப் பெரிய ரகசியம் என்று வரிசையாக வரும். இதற்கெல்லாம் முடிவே இல்லை. இதனால்தான் நாம் கடவுளை அனந்தன் (அந்தம் அல்லது முடிவு அல்லது எல்லையற்றவன்) என்கிறோம்.

இங்கே உன்னை மதநம்பிக்கையுள்ளவனாக ஆக்க நான் முயலவில்லை. உன்னை ஆன்மிகவாதியாக்கவும் நான் முயலவில்லை. நான் உனக்குச் செம்மையான வாழ்க்கையை அமைத்துத் தரவே விரும்புகிறேன். உயிரோட்டத்துடன் இருத்தலைத்தான் நான் ஆன்மிகம் என்கிறேன். இங்கு நான் உன்னைக் குறிப்பிட்ட வகையிலான சித்தாந்தங்களையும் குறிப்பிட்ட சாஸ்திரங்களையும் ஏற்றுக் கொள்பவனாக ஆக்க நான் ஆர்வம் கொள்ளவில்லை. உன்னைக் குறிப்பிட்ட மதத்தவனாக

ஆக்குவது என் நோக்கமன்று. நீ ஏற்கெனவே இப்படி ஏதாவது ஒன்றைப் பற்றிக்கொண்டதால்தான் உன்னால் முன்னேற முடியவில்லை. இதனால் உன் மனத்தின் சுமை அதிகரித்து விட்டது. நான் உன்னிடமுள்ள பழைய விழுமியங்களையெல்லாம் பிடுங்கி எறிய விரும்புகிறேன்.

நீயாகவே சில கோட்பாடுகளை முடிவு செய்து கொண்டாய். இதனால் நீ மேன்மேலும் பயணிப்பதை நிறுத்திவிட்டாய். வழியில் ஒரு கூடாரம் அமைத்து அதிலேயே தங்கிவிட்டாய். அதுவே வீடு (சேருமிடம்) என நினைத்துவிட்டாய். என்னுடன் சேர்ந்து பயணித்தால் ஆங்காங்கே முகாம்கள் உண்டே தவிர, சேருமிடம் என்பது கிடையாது. இதையே புத்தர் 'நட, நடந்துகொண்டே இரு' என்று சொன்னார் ('சரைவேதி, சரைவேதி'). ஒவ்வொரு ரகசியத்தையும் கண்டுபிடித்தபடி செல். இதுவே கடவுளை அறிதல் என்பதன் பொருளாகும்.

உன் பிரச்சினை எனக்குப் புரிகிறது. நீ சேருமிடம் குறித்து ஆர்வமாக இருக்கிறாய். நான் பயணிப்பதிலேயே லயிக்கிறேன். தற்சமயம் நமக்குள் ஒற்றுமை இல்லை. நீ சீக்கிரமே சேருமிடத்தை அடைய வேண்டும் என்றும், அதற்கு இன்னும் எவ்வளவு நேரம் பிடிக்குமோ என்று கவலைப்படுகிறாய். நானோ, நீ பயணிப்பதில் இன்பம் காண வேண்டும் என்றும், சேருமிடத்தை அடையும் ஈடுபாட்டைக் கைவிட வேண்டும் என்றும் எதிர்பார்க்கிறேன். நீ எப்பொழுது சேருமிடத்தை அடைந்து நிம்மதியாகப் படுத்துத் தூங்கலாம் என்பதில் ஆர்வம் காட்டுகிறாய். நானோ, நீ அவ்வாறு சென்றடையாமல் எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்றும், தொடர்ந்து நடைபோட்டபடி இருக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கிறேன்.

கடவுள் தினமும் வருகிறார். பலவித முறைகளில் வருகிறார். குயிலின் குரலில், மரங்களின் ஊடே செல்லும் காற்றின் ஒலியில் வருகிறார். துண்டு மேகத்தில் வானத்தை நீந்திவருகிறார். சூரியக் கதிர்களில், கடல் அலைகளில், பெண்ணின் அழகிய கண்ணில், குழந்தையின் புன்சிரிப்பில், மனிதனின் ஆண்மையில், யோகியின் சாந்தத்தில், வீரனின் சினத்தில், பிரிந்தவர்களின்

சோகத்தில் என்றெல்லாம் எல்லையற்ற விதங்களில் அவர் வருகிறார்.* இதை உணர, அனுபவிக்க, ரசிக்க நீ வாழ்க்கையில் ஆச்சரிய உணர்வை இழக்காது இருக்க வேண்டும்.

இந்த ஆச்சரிய உணர்வு உன்னிடம் நீடித்திருக்க வைக்க முடியுமானால் என் முயற்சியில் நான் வெற்றி பெற்றதாகக் கருதுவேன். அஷ்டாவக்ரர் ஞானி குழந்தையின் இயல்பு கொண்டிருப்பான் என்று அடிக்கடி கூறுவது இந்த நிலையைத் தான். குழந்தைக்கு எந்த ஒலியும், எந்தக் காட்சியும் ஆச்சரிய மயமானது. குழந்தை தான் பார்க்கும் ஒவ்வொன்றையும் ரகசியம் போல் நினைத்து ஆராய்கிறது. உனக்கு சாதாரணமானவைகூட குழந்தைக்கு ஆச்சரியம்தான். ஆகவே அது எதைக் கண்டாலும் உதைத்து முன்னேறி, கையால் பிடித்து, வாயால் கடித்து எப்பொருளையும் ஆராய்கிறது. குழந்தை வளர-வளர, குடும்பம், சமூகம், கல்வித் திட்டம் முதலியவை அதன் ரகசிய ஆர்வத்தை அழித்துவிடுகின்றன.

## ஆறாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! ஞானிகள் உலகம் எப்படியோ அவ்வண்ணமே ஏற்கிறார்கள் என்று சொன்னீர்கள். உலகம் மாற வேண்டும் அல்லது அதை மாற்ற வேண்டுமென்று அவர்கள் நினைப்பதில்லை. பிறகு அவர்கள் மக்களுக்கு ஏன் விதவிதமான உபதேசங்கள் செய்கிறார்கள்? மற்றவர்களும் தங்களுக்குப் பிடித்த விதத்தில் உலகை மதிப்பிட்டுக் கொள்வதை ஞானிகள் ஏன் தடுக்கிறார்கள்?**

**உ**ன் கேள்வியில் தவறுள்ளது. ஞானிகள் உபதேசம் செய்வதாக நீ நினைக்கிறாய். அவர்களிடமிருந்து உபதேசம் தானாக வெளிப்படுகிறதே தவிர, அவர்கள் வரிந்துகட்டிக் கொண்டு உபதேசம் செய்வதில்லை. உபதேசம் தருபவர்கள் அதை மற்றவர்கள் பின்பற்ற வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள்.

---

* பாரதியாரின் 'வெள்ளைத் தாமரை' 'நந்தலாலா' பாடல்கள் இங்கு நினைவுகூரத் தக்கவை.

அவர்கள் சொல்கின்றபடி செய்தால் உனக்கு இன்பம் விளையும் என்றும், உபதேசத்தைப் பின்பற்றாவிடில் உனக்குக் கெடுதல் விளையும் என்றும் உபதேசிப்பவர்கள் நினைக்கிறார்கள்.

ஞானிகள் உபதேசம் செய்வதில்லை. மகாவீரர் உபதேசம் செய்தார் என்று ஜைனர்கள் கூறுவதில்லை. அவரிடமிருந்து உபதேசங்கள் உதிர்ந்தன என்பார்கள். அதை மரத்திலிருந்து விழும் பூக்களுடன், பூக்களிலிருந்து நறுமணம் பரவுவதுடன், மேகத்திலிருந்து மழைத்துளிகள் விழுவதுடன் ஒப்பிடலாம்.

உபதேசியார்கள் வேறு, ஞானிகள் வேறு. ஞானிகள் தாங்கள் இயல்பாகக் கூறுவதை மக்கள் உபதேசமாகக் கொள்கிறார்கள் என்பதைக்கூட அறிந்திருப்பதில்லை. மேஹர் பாபா என்ற ஞானி தமது வாழ்நாள் முழுதும் பேசியதில்லை. ஞானிகள் பேசத் தோன்றினால் பேசுவார்கள். மௌனமாக இருக்கத் தோன்றினால் அப்படியே இருந்துவிடுவார்கள்.

மேலும், ஞானிகள் நீ எப்படி உள்ளாயோ அப்படியே அங்கீகரிப்பார்கள். அவர்கள் உன்னை மாற்ற முயலுவதில்லை. அவர்களின் உள்ளே நிகழ்ந்தது வெளியே தெரிகிறது. அதனால் நீ மாறினால் அதற்கு அவர்கள் பொறுப்பில்லை. நீ அவர்களால் பாதிக்கப்படாமல் போனால் அதில் அவர்களுக்கு அக்கறை யில்லை.

ஆகவே ஒரு சாது அல்லது புனிதர் உனக்கு உபதேசித்து உன்னை மாற்றுவதில் ஆர்வம் காட்டினால் அவர் இன்னமும் முழு ஞானியாகவில்லை என்பதைப் புரிந்துகொள். ஆனால் உன்னை மாற்றுவதில் ஆர்வம் காட்டாவிடிலும் எவரது அருகிலிருந்தால் உன்னிடம் நல்ல மாற்றம் தெரிந்தால் அவரை உனக்கேற்ற ஞானியென்று கருதலாம்.

சூரியன் உதித்தபின் ஒவ்வொரு பூவையும் மலரும்படி கிரணங்களின் மூலம் செய்தி அனுப்புவதில்லை. ஒவ்வொரு பூவையும் கிரணக்கையால் பிடித்துத் திறந்துவைப்பதில்லை. சில பூக்கள் மலராவிட்டால் வருந்துவதில்லை. சூரியனின் முன்னிலையில் பூக்கள் மலர்கின்றனவே தவிர, சூரியன் தானாக

அவற்றைப் பூக்கவைப்பதில்லை. தன்னால் எத்தனை பூக்கள் மலர்ந்தன என்று சூரியன் கணக்குப் பார்ப்பதில்லை. சில நாள்களில் பூக்கள் மலர்வது குறைந்தால் என்ன காரணம் என்று சூரியன் ஆராய்வதில்லை. சூரியன் இல்லாமல் அவை மலர்வதில்லை என்பது உண்மை. சூரியன் முன்னால்தான் அவை மலர்வதும் உண்மை. ஆனாலும் சூரியன் சுயமாக அவற்றை மலர்விப்பதில்லை. அது கிரியா ஊக்கி (இயைபு இயக்க ஊக்கி) மட்டுமே.

நீ மாறுவதற்கு ஆர்வம் கொண்டிருந்தால்தான் ஞானிகள் பேசும்போது உன்னை மாற்றுவதற்காக பேசுவதுபோல் தோன்றும். அவர்கள் உன்னை மாறும்படி சொல்வதில்லை. அவர்களுக்குள் நிகழ்ந்த ஏதோ ஒன்று அவர்களை அறியாமல் வெளிப்படுகிறது.

நீயோ எது பேசினாலும் அது பாதிப்பை உண்டாக்க வேண்டுமென எதிர்பார்க்கிறாய். ஒருவரை மாற்ற நீயே முயல் கிறாய்; ஆலோசனை கூறுகிறாய். அதைப் பிறர் ஏற்காவிடில் உனக்கு கோபம் வருகிறது. உன் அகங்காரத்திற்கு அடி விழுகிறது. உன் ஆலோசனை ஏற்கப்பட்டால் உன் அகங்காரம் திருப்திகொள்கிறது. ஞானிகளோ தங்கள் பேச்சு பிறர்மீது எத்தகைய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதைக் கவனிப்ப தில்லை.

புத்தர் ஒருபொழுதும் பேசியதே இல்லை என ஜென் சம்பிரதாயத் துறவிகள் கூறுவது வழக்கம். ஆனால் புத்தர் 40 ஆண்டுகள் பேசினார், உபதேசித்தார். ஆகவே சில துறவிகள் தலைமைத் துறவி ரின்ஜாயி என்பவரிடம், “இது விசித்திரமான கருத்தாக இருக்கிறதே. புத்தருடைய வசனங்களைத் திரட்டி சாஸ்திரமாக்கி நமது மடத்தில்கூட வைத்திருக்கிறோமே. நீங்களும் அந்த சாஸ்திரத்தை ஓதுகிறீர்கள், வணங்குகிறீர்கள். அதே சமயம் புத்தர் பேசியதே இல்லை என்கிறீர்களே என்று கேட்டனர்.

அதற்குத் துறவி ரின்ஜாயி, “பேசினார்-பேசவில்லை என்னும் இரண்டுமே உண்மை. நம்மைப் பொறுத்தவரையில் அவர் பேசினார், உபதேசித்தார். மற்றவர்களைப் பொறுத்த

வரையில் அவர் பேசவில்லை. நாம் அவர் பேசியதைக் கேட்டோம். ஆகவே அதை சாஸ்திரமாகத் தொகுத்தோம்,'' என்று விளக்கினார்.

இதனால்தான் ஞானிகள் எதையும் எழுதிவைப்பதில்லை.

நான் தினமும் உன்னுடன் பேசுகிறேன், அதேசமயம் நான் பேசியதாக ஒருபோதும் நினைக்காதே. நீ காதால் கேட்டாய் என்பது உண்மைதான். நான் பேசவில்லை என்பதால் நீ மாறவேண்டும் என்பதில் எனக்கு ஆர்வமில்லை என்பது தெளிவு. எனது அணுகுமுறை வேறு.

மக்கள் மகாத்மாக்களிடம் அவர்கள் தங்களை மாற்ற வேண்டும் என்றும், அதற்கான வழிமுறைகளைச் சொல்ல வேண்டும் என்றும் எதிர்பார்க்கிறார்கள். மகாத்மாக்களும் மக்களைச் சும்மா விடுவதில்லை. காபி, டீ குடிக்கலாமா, கூடாதா என்பதற்குக்கூட அவர் கட்டளையிடுகிறார். துறவியான அவர் இல்லறத்தானாகிய நீ எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்று சட்டதிட்டங்கள் வகுத்துக் கூறுவது முரண்பாடாக மட்டுமில்லை, விரோதமாகவும் தெரிகிறது.

என்னிடம் வருவோரும் .மற்ற குருக்களைப்போல் என்ன சாப்பிடலாம், விலக்கப்பட வேண்டிய உணவுகள் எவை, என்ன பானங்கள் பருகலாம், எங்கே எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்றெல்லாம் என்னிடம் ஆலோசனை கேட்கிறார்கள். நான் இவை பற்றி எதுவும் சொல்வதில்லையே என்று புகார் கூறுகிறார்கள்.

உண்மைதான். நான் நேரடியாக உபதேசிப்பதில்லை. எனக்குள் என்ன நிகழ்ந்ததோ அது வெளிப்படுகிறது. அதிலிருந்து ஏதாவது கற்க விரும்பினால் கற்றுக்கொள்ளுங்கள் புரியாமல் போனால் விட்டுவிடுங்கள். நான் பொருட்படுத்தமாட்டேன். நீங்கள் கற்றால் புகழவும் மாட்டேன். எதுவும் கற்காவிடில் நிந்திக்கவும் மாட்டேன். நீ மாறினால் மாறு, மாறாவிட்டால் போ, உன் இஷ்டம். உன் முடிவுடன் எனக்குக் கொடுக்கல்-வாங்கல் இல்லை.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! உலகத் தளையிலிருந்து எப்போது விடுதலை கிடைக்கும்? எத்தனை காலம் எதிர்பார்த்திருக்க வேண்டும்?**

**உ**னது அவசரம்தான் உனக்குத் தடையாக உள்ளது. நீ அவசரப்படும் அளவிற்கு அதே விகிதத்தில் பலன் கிடைப்பது தாமதப்படும். உலகத்தளை (கட்டு) என்பதை நீ இன்னமும் அறிந்திருக்கவில்லையே. அறிந்திருந்தால் நீ அதிலிருந்து விடுபட்டிருப்பாய். இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது.

ஒருவன் ஒரு தூணைப் பிடித்தபடி நிற்கிறான். அதே சமயம் அவன், 'கடவுளே, எனக்கு இந்தத் தூணிலிருந்து விடுதலை எப்போது கிடைக்கும்? அதற்கு எத்தனை காலம் பிடிக்கும்?' என்று கேட்டால், பார்க்கிறவர்கள் சிரிப்பார்கள். இதே போல்தான் நம்மை உலகம் கட்டிப்போட்டிருப்பதாக நினைப்பதும் நகைப்பிற்கிடமானது.

உனக்கு முன்னாலும் கம்பத்தைப் பிடித்துக்கொண்டவர்கள் எத்தனையோ பேர் உனக்குப் பிறகும் அதைப் பிடித்துக்கொண்டு உளறப் போகிறவர்கள் எத்தனையோ பேர்.

நீ பணப்பெட்டியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுள் ளாய். உனக்கு முன்னால் வேறொருவரின் பிடியில் அது இருந்தது. நீ செல்வத்தைப் பிடித்துக்கொண்டுள்ளாய். உனக்கு முன்னால் அது வேறு ஒருவரின் பிடியிலிருந்தது. உன்னிடமுள்ள ரூபாய் நோட்டுகள் எத்தனையோ பேரின் கைகளில் பட்டு உன்னிடம் வந்துள்ளன. ஆகவே அதற்கு கரன்சி (currency) என்று சரியான பெயர் தந்துள்ளனர். அது கரன்ட் (current) போல், மின்னோட்டம் போல், எங்காவது போனபடி இருக்கும். அது எங்கும் நிற்பதில்லை. ஆகவே கரன்சி நோட்டைவிட அசுத்தமான பொருள் உலகில் வேறெதுவும் இருக்க முடியாது. எனினும் நீ அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுள்ளாய். உனக்கு முன்னாலும் பலர் அதைக் கெட்டியாகப் பிடித்திருந்தனர். ஆனால் நீங்கள் எல்லோருமாகப் பணம் உங்களைக் கெட்டியாகப்

பிடித்துக்கொண்டுள்ளதாகப் புலம்புகிறீர்கள். நீங்கள் தூணைப் பற்றி புகார் செய்கிறீர்கள். எதையும் பிடித்துக்கொண்டிருக்கும் நீங்கள் பிடிக்கப்பட்டவராக பிரமை கொண்டுள்ளீர்கள்.

நீ இதுவரை செய்த ஆர்ப்பாட்டமான நடவடிக்கைகள் வீணானவை. நீ மணலிலிருந்து எண்ணெயை வடிகட்ட முயலு கிறாய். பொய்யை மெய்யாக்க முயலுகிறாய். இதையெல்லாம் அறிந்த உடனே உன் கைகள் தளர்ந்துவிடும். பிறகு நீ உலகத்தைப் பிடித்துக்கொள்ள மாட்டாய். உலகம் உன்னைப் பிடித்துக் கொண்டிருப்பதாக நினைப்பதைக் கைவிடுவாய்.

பற்றுகளிலிருந்து விடுபட நீ அவசரப்பட்டால் நீ இன்னும் பக்குவமடையவில்லை என்று பொருள். கண்களை நன்கு திறந்துபார். பற்றுகளால், பாசங்களால் நீ உருவாக்கிய உலகம் கடைசியில் வீண் முயற்சி என்று தெரியவருகிறது. இதை நீ எவ்வளவு சீக்கிரம் உன் வாழ்க்கையில் உணருகிறாயோ அந்த அளவிற்கு சீக்கிரமாக நீ உலகத்தளைகளிலிருந்து விடுபடுவாய். உலகின் அர்த்தமற்ற தன்மையை நீயே உணராவிடில், 'கடவுளே, என்னை எப்பொழுது உலகத் தளையிலிருந்து விடுவிப்பாய்?' என்று நிரந்தரமாகப் புலம்பிக்கொண்டே இருக்கும்படியாக ஆகிவிடும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

நிர்மம: ஷோபதே தீர: ஸம லோஷ்டாஷ்ம காஞ்சன: |
ஸுபின்ன ஹ்ருதய க்ரந்திர் விநிர் தூத ரஜஸ்தம: || 264
ஸர்வத்ரான வ தாநஸ்ய ந கிஞ்சித் வாஸனா ஹ்ருதி |
முக்த ஆத்மனோ விஸ்த்ருப்தஸ்ய துலனா கேன ஜாயதே || 265

ஜானன்னாபி ந ஜானாதி பஸ்யன்னபி ந பஸ் யதி |
ப்ருவன்னபி ந ச ப்ருதே கோஅனேயோ நிர்வாஸனாத்ருதே|| 266
பிக்ஷுர்வா பூபதிர்வாபி யோ நிஷ்காம ஸ ஷோபதே |
பரவேஷு கலிதா யஸ்ய ஷோபன அஷோபனா மதி || 267
க்வ ஸ்வாச் சந்த்ய க்வ ஸங்கோச: க்வ வா தத்த்வ விநிஸ்சய: |
நிர்வ்யாஜ அர்ஜவ பூதஸ்ய சரிதார்த்தஸ்ய யோகின: || 268
ஆத்ம விஸ்ராந்தி த்ருப்தேன நிராஷேன கதார்தினா |
அந்தர்ய தனு பூயேத தத்கதம் கஸ்ய கத்யதே || 269

'பற்று-பாசங்களை விட்டவன், மண்-கல்-பொன்னை சமமாக நினைப்பவன், இதய முடிச்சு அவிழ்ந்தவன், ரஜோ-தமோ குணங்கள் கழுவப்பட்டதுபோல் நீங்கியவன், அந்த ஆன்மிக வீரன் பொலிவுடன் விளங்குகிறான்.' **(சுலோகம் 264)**

இதய முடிச்சு என்பது ராமனும் காமனும் ஒன்றாகக் கட்டப்பட்டுள்ளதைக் குறிக்கிறது. இந்த முடிச்சு அவிழ்ந்தால்தான் ராமனும் காமனும் தனித்தனியாகப் பிரிய முடியும். இந்த முடிச்சில் உலகமும் நிர்வாணமும் (சூனியமும்) பிணைந்துள்ளன. முடிச்சு நீங்கினால்தான் அவை பிரிய முடியும். முடிச்சு எப்போதுமே சிக்கலானது. மன (இதய) முடிச்சோ அவிழ்ப்பதற்கு மிகவும் சிக்கலானது. ஆகவே மனவியலார் அதை காம்ப்ளக்ஸ் (complex) என்கிறார்கள்.

மனித உடலில் ராமன்-காமன், பிரம்மம்-மாயை, இருள்-ஒளி இயற்கை-கடவுள் முதலியவை ஒன்றுடனொன்று கைகுலுக்குகின்றன. இதய முடிச்சு அறுந்து வீழ்ந்தால்தான் முக்திக்கு வாய்ப்புள்ளது.

இதய முடிச்சு யோக சாஸ்திரத்துடன் சம்பந்தமுள்ளது. இதுவே அநாகத சக்கரம் எனப்படுகிறது. இதற்குக் கீழே மூன்று சக்கரங்கள் (நிலைகள்) உள்ளன. கீழே இறங்கினால் கடைசியில் மூலாதார சக்கரம். இது காமத்தின் இருண்ட மையம். இது சுயநினைவை இழக்க வைக்கும் இடம். காமமும் ஒருவகையான போதையில் மனிதனை ஆழ்த்துகிறது. எனினும் போதையும் ஒருநாள் தெளிந்துதானே ஆகவேண்டும். ஒருகட்டத்தில் நாம் எல்லோருமே காமம் தற்காலிகமானது என்பதை உணர்கிறோம்.

காமத்தில் ஈடுபடும் சமயம் நாம் நம்மை, உலகத்தை மறந்துவிடுகிறோம். கவலைகளை மறக்கிறோம். மனத்திலுள்ள சிக்கல் நினைவில்லை. பிரச்சினை, துன்பம் எதுவும் ஞாபகத்தில் இருப்பதில்லை. மறத்தல் என்பது மாறுதல் அல்ல. காமம் ஓய்ந்ததும் மீண்டும் மனிதன் தன் துன்ப உலகிற்குத் திரும்புகிறான்.

இதயமுடிச்சுக்கு மேலே, அநாகத சக்கரத்திற்கு மேலே, பயணித்தால் கடைசியில் ஸஹஸ்ரார (ஆயிரம் ஆரமுள்ள) சக்கரத்தை அடைவோம். இதுவே தலைமையிடம், ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை (கமலம்) போன்ற இடம். அங்கே ஆத்மாவெனும் பூ மலர்ச்சி அடைகிறது. இங்கே வந்து சேர்ந்து மனிதன் கடவுள் நிலையை அடைகிறான். மூலாதாரத்தில் (கீழே

கடைசி சக்கரத்தில்) விழும் மனிதன் மிருகம் ஆவதுபோல், ஸஹஸ்ரார சக்கரத்தில் ஏறிவிடும் மனிதன் தேவனாகிறான்.

மனிதன் முழுமையாக மிருக நிலையிலும் இல்லாததால், தேவநிலையையும் அடையாததால், நடுவிலுள்ள இதயசக்கரத்தில் நின்றுவிடுகிறான். முடிச்சு போடப்பட்டதுபோல் உள்ளான்.

மனிதனாகப் பிறந்த எவனும் சுகமாக இருக்க முடியாது. ஏனெனில் எது இன்பம், எது துன்பம் என்பதை உடலாலும் மனத்தாலும் அவன் உணர முடிகிறது. விலங்குகள் இரையை உண்ணும்போது மகிழ்ச்சியும் அடிபட்டால் வலியும் அறிந்துள்ளன. ஆனால் அவை எவையெவை இன்பம்-துன்பம் என்று ஆராய்ந்து பார்க்கும் அறிவு பெற்றிருக்கவில்லை.

இதய முடிச்சு என்பது நாற்சந்தி போன்றது. அங்கிருந்து கீழேயும் இறங்க முடியும், மேலேயும் போக முடியும். ஆகவே இதயத்தினால்தான் மனிதன் மேலே செல்கிறான் அல்லது கீழே வீழ்கிறான். இதயம் உடலன்பால் நிரம்பினால் கீழ்நோக்கிய பயணம் தொடங்குகிறது. இதயம் பிரார்த்தனை போன்ற புனித அன்பால் நிரம்பினால் பயணம் மேல் நோக்கி அமைகிறது. இதயமே நமது நண்பன்; இதயமே நம் பகைவன் (மித்ர-சத்ரு). இதயம் ஏணி போன்றது. ஒரே ஏணிதானே இறங்கவும் ஏறவும் பயன்படுவது வழக்கம். ஏணி ஒன்று. நீ முடிவு செய்யக்கூடிய திசைகள் இரண்டு.

பிரார்த்தனை என்னும் போது கண்கள் உயர்ந்து மேலே நோக்குகின்றன. ஆகவேதான் பிரார்த்தனை என்றதும் மனிதன் கைகளையும் கண்களையும் ஆகாயத்தை நோக்கி உயர்த்து கிறான். உடலாசை என்னும்போது கண்கள் கீழே நோக்குகின்றன. கூச்சமும் உண்டாகிறது. இதேபோல் உள்ளேயும் நிகழ்கிறது. ஆசை என்பது கீழ்நோக்கிய பயணம். இது எளிது. ஏனெனில் இது நமக்குப் பழக்கமானது. தியானம், மேல் நோக்கிய பயணம், ஸஹஸ்ர தள கமலம் நோக்கிய பயணம். இது பழக்கமில்லை. ஆகவே மிகவும் கடினமாகத் தோன்றும்.

மேலும், கீழ்நோக்கிய பயணப் பாதையில் உன்னோடு சேர்ந்து மக்கள் திரளாக வருகிறார்கள். உலகமும் உன்னுடைய சகபயணியாக விளங்குகிறது. நீ பிரார்த்தனை (தியானப்) பாதையில் செல்லும்போது தனியொருவனாகப் பயணிக்க வேண்டியுள்ளது.

காமத்தில்கூட உனக்குத் துணையாக, ஜோடியாக, ஒரு பெண்ணோ-ஆணோ, மனைவியோ-கணவனோ உண்டு. ஆகவே உணர்வுகளைப் பகிர்ந்துகொள்ள முடிகிறது. ஆனால் தியான நிலையில் நீ மட்டுமே இருக்க முடியும். அந்தத் தனிமை உனக்கு பயமூட்டுகிறது.

மேலே ஏறும்போது கீழே விழுந்துவிடுவோமோ என்ற பயம் உண்டாகிறது. கீழ் நோக்கிய பயணத்தில் இந்த பயம் கிடையாது. அங்கே விழுகின்ற பிரச்சினையே இல்லை. பள்ளத்தாக்கில் வசிப்பவர்கள் விழுவதில்லை. சிகரங்களில் வாழ்பவர்கள்தான் கீழே விழக்கூடும். யோகத்திலிருந்து சரிகின்ற அபாயமுண்டென்பதைக் காட்ட யோகபிரஷ்ட்ட என்னும் சொல் உள்ளது. போகமோ பெருஞ்சரிவு என்பதால் போகபிரஷ்ட்ட என்னும் சொல் கிடையாது. சிகரத்தில் துளி சறுக்கினால் உயிர் போய்விடும். பள்ளத்திலோ அதிகபட்சம் சுளுக்குதான் உண்டாகும்.

நான் அன்பைப் பற்றி அடிக்கடி பேசுகிறேன். அன்பு என்னும் சொல்லைப் பயன்படுத்துவது நெருப்புடன் விளையாடுவது போலாகும். ஏனெனில் அன்பிற்கு நீ வேறுவிதமாகப் பொருள் கொள்வாய். நான் சொல்லும் அன்பு பிரார்த்தனையுடன் (தியானத்துடன்) சம்பந்தப்பட்டது. உன் அன்பு உடல் சார்ந்தது. இதனால் மோட்சம் கிடைக்கவில்லை. உலகம்தான் கிடைத்தது. ஆகவேதான் நீ உயர்தரமான அன்பு ஒன்றிருக்கும் என ஊகித்து அதை அடையும் வழியை அறிய என்னிடம் வந்துள்ளாய்.

நீ என் சொற்பொழிவை உன் அகராதியின் மொழியின் அடிப்படையில் அர்த்தம் எடுத்துக்கொள்ளக் கூடாது. இதய முடிச்சிலிருந்து கீழ்நோக்கிச் செல்கையில் 'அங்கும் அன்பு உண்டு. அது விலங்கு வகை அன்பு. உடலளவிலான அன்பு. ஒருவர் உடலை இன்னொருவரின் உடல் ஆக்கிரமிக்கும். அவ்வுணர்வை

அன்பு என்றுகூட சொல்ல முடியாது. அது தன்னை மறப்பதற்கான உபாயம் மட்டுமே. அது ஒரு மயக்கம், போதை.

இதய முடிச்சுக்கு மேற்புறப் பாதையில் உள்ள அன்பு மென்மையானது. அது மகரந்தம் போன்றது. அது நறுமணம்போல் நம் ஆளுமையில் பரவுகிறது. அங்கே உனக்கு உடல் நினைவு எழுவதில்லை. அங்கே உடலுக்கு வேலையுமில்லை. உடலிலிருந்து மனத்துக்கும், பிறகு மனத்தைக் கடந்து அதற்கு அப்பாலும் இந்த மேல்நோக்கிய பயணம் தொடர்கிறது.

உடல்களெல்லாம் தனித்தனியாக இருக்கின்றன. மனங்கள் அந்த அளவிற்குத் தனித்தனியாக இருப்பதில்லை. ஆத்ம அளவிலோ மொத்தமாக இருப்பதே ஓர் ஆத்மாதான்.

பற்றுகளை விட்ட ஞானி மண், கல், பொன்னை சமமாகக் கருதுவான்.* இதைத் தவறாகப் புரிந்துகொள்ளக் கூடாது. ஞானியின் கண் முன்னால் தங்கக் கட்டியை வைத்தால் அது அவனுக்கு மண்ணாக, கல்லாகத் தெரியும் என்று நினைக்கக் கூடாது. ஞானியின் கண்களும் நம் கண்களைப் போன்றவையே. நமக்கு ஒரு பொருள் எப்படித் தெரிகிறதோ அப்படித்தான் ஞானிக்கும் தெரியும். எது மண், எது கல், எது பொன் என்று ஞானிக்கும் தெரியும். ஆனால் அவன் அவை எல்லாம் சமமான மதிப்புடையவை என்றே கருதுவான்; ஒரே விலை கொடுப்பான். சராசரி மனிதர்கள்தாம் ஒவ்வொரு பொருளுக்கும் வெவ்வேறு மதிப்புத் தருகிறார்கள். மனிதர்கள் இல்லாத அல்லது நடமாடாத இடத்தில் மண்-கல்-பொன் ஆகியவை கிடந்தால் அவற்றின் மதிப்பு ஒன்றுதானே. ஞானிக்கும் பொருட்களின் குணம்-சிறப்பு தெரியும். ஆனால் பொன்னில் அவனுக்கு நாட்டமில்லை என்பதால் அதற்கு அவன் மண்-கல்லைவிட அதிக மதிப்புத் தருவதில்லை.

ஞானி பொன்னை மண்-கல்லைவிட மட்டமாக நினைப்பதில்லை. அவை எல்லாவற்றின் மதிப்பும் சமம் என்பது தான் அவனது கண்ணோட்டம். அடிப்படையில், ஆழத்தில்

* யோகீ ஸம லோஷ்டாஷ்ம காஞ்சன: மண்ணையும், கல்லையும், பொன்னையும் யோகி சமமாகக் கருதுவான் என்று பகவத்கீதையிலும் (6:8) வருகிறது.

எல்லாம் ஒன்றுதான் என்று கருதினாலும், ஒவ்வொரு பொருளும் அன்றாட யதார்த்த வாழ்க்கையில் வெவ்வேறு மதிப்புடையது என்பது ஞானிக்கும் தெரியும். ஞானியும் பசி வந்தால் உணவுதான் உண்பானே தவிர மண்ணைத் தின்னமாட்டான். அடிப்படை அர்த்தத்தில்தான் உணவும் மண்ணும் சமம். உணவு மண்ணிலிருந்து உண்டாகிறது. மீண்டும் அது பிறகு மண்ணாகிறது.

நீ மண்ணில் விதை நட்டாய். முளை வெளியே வந்தது. அறுவடை செய்தாய். நீ கோதுமை என்று கூறுவது மண்ணின் உருவ மாற்றம்தான். நீ சாப்பிடுவது அரிசியோ, திராட்சையோ, ஆரஞ்சோ எதுவாயினும் அடிப்படையில் நீ வாயில் போட்டுக் கொள்வது மண்ணைத்தான்!

பொன்னும் மண்ணின் ஓர் உருவம்தான். வெள்ளியும் மண்ணின் ஓர் வடிவம்தான். வைரமோ நிலக்கரியின் ஒரு ரூபம். நிலக்கரிதான் பல்லாயிரம் ஆண்டுகள் பூமியில் அழுந்திக் கிடந்து வைரமாகிறது. இதற்காக எவரும் நிலக்கரித் துண்டைக் கழுத்தில் கட்டிக்கொண்டு அலையமாட்டார்கள். அறிவியல் கண்ணோட்டப் படி நிலக்கரிக்கும் வைரத்திற்கும் அடிப்படையில் வித்தியாசம் இல்லை. வித்தியாசம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளின் இடைவெளி என்பது மட்டும்தான். மண்ணிலேயே நீடித்து. மண்ணின் அழுத்தத்தால் ரசாயன மாற்றங்கள் பெற்று கரித்துண்டு வைரமாகிறது. அன்றாட யதார்த்த வாழ்வில் நாம் வைரத்தைத்தான் அணிந்துகொள்ள முடியும்.

பற்று-பாசங்களை விட்டொழித்தவன் ஆன்மவீரன் ஆகிறான். தூய அன்பைப் பாசம் கீழ்நோக்கி இழுக்கிறது. பாசங்களைக் களைந்தவனின் அன்பு மேலே எழும்புகிறது. பாசம் வைப்பது அன்பின் கழுத்தில் பாறாங்கல்லைக் கட்டுவது போன்றது. பாசம் என்றால் 'என்னுடையது, என்னுடையவர் (கணவன்-மனைவி-மகன்-மகள் போன்றவர்கள்)' என்பதால் நேசிக்கிறேன்' என்று பொருள்படும். இந்த 'என்னுடைய' என்பதை நீ கைவிட்டால் பிறகு நீ எதற்காக நேசிக்கிறாய் என்று காரணம் கூறமுடியாது. 'என் உள்ளத்தில் அன்பு பொங்குகிறது' என்று பொதுவாக மட்டும் சொல்ல முடியும்.

பாசம் என்பது அன்பை ஓர் உறவுடன் தொடர்புப் படுத்துகிறது. 'என்னுடையது. ஆகவே அன்பு செலுத்துகிறேன்' என்று பொருள் தருகிறது. இங்கே 'என்னுடைய' என்பது முக்கியத்துவம் பெறுகிறது. 'அன்பு' என்பதற்கு மதிப்பில்லாது போகிறது. ஒருவரை உன்னுடையவராக, உனக்கு வேண்டியவராக இல்லாவிட்டால் அவரை நீ கொல்லவும் தயங்கமாட்டாய். அவரிடம் உனக்குப் பாசம் இல்லை. 'என்னுடைய' மனைவி என்று நீ பாசம் காட்டியவள் வேறொருவனுடன் வாழச் சென்றுவிட்டால், நீ அவளைக் கொல்லவும் முயலுவாய். இந்த 'என்னுடைய' என்பது உன் அகங்காரத்தின் விஸ்தரிப்புதான். ஆகவே ஓர் உபநிடதத்தில் 'கணவன் மனைவியிடம் அன்பு செலுத்தும் சாக்கில் தன் மீதுதான் அன்பைச் செலுத்துகிறான். தந்தை மகன் மீது அன்பு காட்டும் சாக்கில் தன்னைத்தான் நேசித்துக்கொள்கிறான்' என்று வருகிறது.

நீ நிலைக் கண்ணாடி முன்னால் நின்று உன்னை அதில் பார்க்கிறாய். ஒரு பேச்சுக்காக மக்கள் 'கண்ணாடி பார்க்கிறோம்' என்பார்கள். எத்தனை கலைநயமுடைய கண்ணாடியாக இருந்தாலும் அதில் அவர்கள் பார்ப்பது தங்களைத்தாம். கண்ணாடி என்பது ஒரு சாக்குதான் (pretext).

நீ உன்னுடையவர்கள் என்பதால் அன்பு செலுத்துவதாகக் கூறுகிறாய். ஆனால் அவர்களிடம் உனக்கு அன்பு கிடையாது. நீ அவர்களுடைய கண்களில் உன்னைத்தான் பார்த்துக்கொள்கிறாய். உன்னை ஒரு பெண் அழகானவன், பலசாலி என்று புகழ்ந்தால் நீ சந்தோஷப்பட்டு அப்பெண்ணை நேசிக்கிறாய். ஏனெனில் அவள் கண்களில் நீ விரும்பிய விதமாகவே உன் பிரதிபிம்பம் தெரிந்திருக்கிறது.

இதேபோல் நீ ஒரு பெண்ணைப் பேரழகி என்று புகழ்ந்தால் மெய்சிலிர்க்கிறாள். உன் அன்பு அவளுக்கு ஆனந்தமளிப்பதாகக் கூறுகிறாள். ஆனால் உண்மையில் நடந்தது புகழ்ச்சியை எதிர்பார்த்த அவளது அகங்காரம் திருப்தியடைந்தது என்பதுதான். அதை அவளுக்குச் சொல்லத் தெரியவில்லை.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு பெண்ணைக் காதலித்தார். ஒருமுறை அவர் பேச்சுவாக்கில், "உன்னைவிட அழகான பெண் உலகில் கிடையாது. முற்காலத்திலும் உன்னைப்போல் அழகி இருந்ததில்லை. எதிர்காலத்திலும் இருக்கப்போவதில்லை," என்றார்.

பரவசமடைந்த அப்பெண், "உண்மையாகவே சொல் கிறீர்களா, நஸ்ருத்தீன்?" என்று கேட்டாள்.

இப்போது நஸ்ருத்தீனுக்கு சங்கடமாகிவிட்டது. அவர் மனசாட்சிக்குக் கொஞ்சம் பயந்தவர். முடிந்தவரையிலும் நேர்மையானவர். அவர் சொன்னார். "கண்ணே, என்னை மன்னித்துவிடு. உன்னைப்போல் பேரழகி கிடையாது என்று உன்னிடம் சொன்னதைப்போல் வேறு சில பெண்களிடமும் இதற்கு முன் நான் சொன்னது உண்டு. எதிர்காலத்தில் எந்தப் பெண்ணையும் இதேபோல் புகழமாட்டேன் என்று உறுதியாகக் கூறமுடியாது," என்றார்!

நாம் ஒருவர் மற்றொருவரின் கண்ணில் நம் படத்தைத்தான் காண்கிறோம். எவர் நம் உருவத்தைக் கவர்ச்சிகரமாக, வண்ணமயமாகத் தனது கண்ணில் காட்டுகிறாரோ அவரை நாம் நேசிக்கிறோம். எவரால் நமது அகங்காரம் திருப்தி கொள்கிறதோ அவரை நாம் நேசிக்கிறோம். அகங்காரத்துக்குத் தொண்டுசெய்யும் இந்த அன்பு பொய்யானது.

ஞானி ரஜோ, தமோ குணங்களிலிருந்து விடுபட்டவன் என்றும் இந்த சுலோகம் தெரிவிக்கிறது. ரஜோ குணம் என்பது செயல் புரியும் வெறி. தமோ குணம் என்பது அசதி, மறதி, சோம்பேறித்தனம். சிலரால் சும்மா உட்கார்ந்திருக்கவே முடியாது. எப்போதும் ஏதாவது செய்தபடி இருக்க வேண்டும். அவர்களுக்கும் சாந்தத்துக்கும் வெகுதூரம். இது ஒருவகை நோய் (workaholic). விடுமுறையையும் அவர்களால் அனுபவிக்க இயலாது. அன்றும் ஏதாவது வேலையை இழுத்துப்போட்டுக் கொள்வார்கள் ஓய்வெடுப்பதும் ஒரு கலை. அது எல்லோருக்கும் வருவதில்லை. சிலருக்கு செயல்வெறியெனில் சிலருக்குச் சோம்பல் வெறி. சிலரால் சிறிதும் உட்கார முடியாது. சிலரால்

சிறிதும் எழுந்திருக்க முடியாது. இரு தரப்பினரும் வெவ்வேறு வகையில் ஊனமுள்ளவர்கள்.

சத்துவ குணம் அமைந்தவர்கள் தேவைப்படும்போது உழைப்பார்கள்; தேவைப்படாதபோது ஓய்வாக இருப்பார்கள். வேலை இல்லாதபோது பரபரப்பாக இருக்கமாட்டார்கள். வேலை உள்ளபோது கொட்டாவி விட்டபடி இருக்கமாட்டார்கள்.

சத்வகுணமுள்ளவன கட்டுப்பாடான வாழ்க்கை நடத்தி வருவான். அவனது வாழ்க்கையில் மிகை என்பது இருக்காது. அவன் தடுமாறாமல் நடுநிலையில் இருப்பான். வேலை செய்ய வேண்டுமாயின் அதில் முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொள்வான். ஓய்வுவேளை எனில் முழுமையாக ஓய்வெடுப்பான்.

சிலர் ஓய்வாகத் தூங்குவதும் இல்லை. அப்போதும் வேலை பார்ப்பதுபோல் அவர்கள் கை-காலை வீசுகிறார்கள்; உளறு கிறார்கள்; போர்வையைத் தாறுமாறாக இழுக்கிறார்கள்;

நான் ஒரு மருத்துவ நூலில் விசித்திரமான செய்தி படித்தேன். ஒருவன் பகலில் உழைப்பில் எத்தனை கலோரி செலவிடுகிறானோ, அதில் பாதியளவு இரவில் தூங்குகையிலும் செலவழிக்கிறான் என்று தெரியவந்தது. பரபரப்பு கனவுலகிலும் தொடர்கிறது. கனவிலும் மனிதன் அலைகிறான், ஓடுகிறான், உழைக்கிறான். இங்கே கட்ட முடியாத மாளிகையைக் கனவில் நிர்மாணிக்கிறான். இங்கே தோண்ட முடியாத பள்ளத்தைக் கனவில் தோண்டுகிறான். நீ நூற்றுக் கணக்கில் கனவுகள் இருப்பதாக நினைக்கலாம். அடிப்படையில் அவை இரண்டு வகைதாம்: ரஜோ குணக் கனவுகள், தமோ குணக் கனவுகள்.

ஒரு மரம். கிளை மேல் ஒரு பூனையும், மரத்தடியில் ஒரு நாயும் அரைத் தூக்கத்தில் இருந்தன. நடுவில் விழித்த நாயைத் தன் குரலால் எழுப்பி, "நான் ஒரு அருமையான கனவு கண்டேன். மழை பெய்கிறது. ஆனால் தண்ணீருக்குப் பதிலாக எலிகளாகக் கொட்டியது. பூனைகளின் சாஸ்திரத்தில் எலிகள்தான் மழை சமயம் மேலேயிருந்தும் கொட்டும் என்று எழுதியிருப்பது சரியாகத்தான் உள்ளது," என்றது பூனை.

நாய் மறுத்தது. நானும் இப்போது கனவுலகில்தான் இருந்தேன். என் கனவிலும் மழை பெய்தது. அப்போது நாய் சாஸ்திரத்தில் எழுதியிருக்கிறபடி எலும்புத் துண்டுகளாகக் கொட்டியது,'' என்றது.

கதை கேட்டு நீ சிரிப்பாய். ஏனெனில் நீ பூனையோ, நாயோ இல்லை. ஆனால் அடிப்படையில் உன் கதையும் இதுதான். உனக்கும் சாஸ்திரம் வைத்திருக்கிறாய். அதன்படி உன் கனவுகள் அமைகின்றன. உன் கனவுகளை அறிந்தால் அந்த நாயும் பூனையும் சிரித்திருக்கும். உன் கனவுகள் இரண்டு வகை: ரஜோ வகைக் கனவுகளில், நீ பகலில் செய்யாத அல்லது முடிக்காத வேலைகளில் தொடர்ந்து ஈடுபடுவாய். தமோ வகைக் கனவுகளில், பகலில் உனக்குக் கிடைக்காத ஓய்வையும் சோம்பேறித்தனத்தின் சுகத்தையும் அனுபவிப்பாய். இவற்றைச் சுறுசுறுப்பான கனவுகள், ஓய்வான கனவுகள் என்றும் கூறலாம்.

இதயத்தின் முடிச்சு அவிழ்ந்தவன் மேல் நோக்கிப் பயணிப்பவனிடம் ரஜோ-தமோ குணங்கள் நீங்கியிருக்கும். அவன் படபடப்பு-சோம்பல் இரண்டையும் கடந்திருப்பான். அவனிடம் வெளிநோக்கு, உள்நோக்கு என்றெல்லாம் இல்லாமல் நடுநோக்கு இருக்கும். பிறகு எதை அவன் செய்வது அவசியமோ அதை அவன் செய்வான். ஒன்றைச் செய்ய வேண்டிய நேரத்தில் சாக்குப்போக்குச் சொல்லித் தவிர்க்கமாட்டான். அவசியம் இல்லாத வேலையை டம்பத்துக்காக இழுத்துப்போட்டுக் கொண்டு செய்யமாட்டான்.

**து**றவி குர்ஜியேஃப் சீடர்களுக்குப் பல அறிவுரைகள் கூறியிருக்கிறார்.அவற்றுள் ஒன்று 'அவசியமில்லாத பேச்சைப் பேசாதீர்கள்' என்பது. இதில் என்ன சிறப்பு இருக்கிறது என்று சீடர்கள் யோசித்தனர். துறவி தொடர்ந்தார்: "நான் மக்கள் பேசுவதை நன்கு கவனித்திருக்கிறேன். அவற்றில் நூற்றில் தொண்ணூற்று ஒன்பது பேச்சு அவசியமில்லாதது, அர்த்த மில்லாதது. அவசியமானதை மட்டும் பேசுவதும், அளந்து பேசுவதும் மக்களிடம் காணப்படவில்லை."

நீ பரிசோதனை செய்துபார். ஒரு நாளில் நீ பேசியதில் எத்தனை விஷயங்கள் அவசியமானவை என்றும், எவற்றைப் பேசாதிருந்தால் ஒரு பாதகமும் இல்லை என்றோ ஆராய்ந்து பார். வடிகட்டிப் பார்த்தால் நீ பெரும்பாலும் மவுனமாக இருந்திருக்கலாம் என்னும் முடிவிற்கு வருவாய். அதிகபட்ச மவுனத்தால் உன் உடல்நலமும் மனநலமும் பாதுகாக்கப்படும். பிறகுடன் சண்டை-சச்சரவுகள்-சங்கடங்கள் ஏற்படாமலிருக்கும். நீ தேர்ந்தெடுத்துப் பேசுவதால் மக்கள் உன் பேச்சை மதிப்பார்கள். உன் பேச்சு பொருள் பொதிந்ததாக இருக்கும். உன் வாழ்வில் அமைதி நிலவும்.

ஒருவரது முகம் உனக்கு அழகாகத் தோன்றினால் அந்த முகத்தின் நீள-அகலம், கண்-மூக்கு முதலியவை சரியான அளவில் அமைந்திருக்கும். ஒருவரது உடல் அழகாகத் தோன்றினால் எல்லா உறுப்புகளும் அளந்து வைத்ததுபோல் பொருத்தமான முறையிலிருக்கும் (proportionate). ஒரு கை குட்டையாக, ஒரு கண் சிறியதாக, மூக்கு சற்று திரும்பியதாக என்பதுபோல் இருந்தால் அழகு குறைகிறது.

அழகு என்பது உறுப்புகளின் ஒத்திசைவு. இது உடம்பு சம்பந்தப்பட்டது. மனத்தின் அழகு என்றும் ஒன்று உண்டு. மனம் கொந்தளிப்பின்றி, சமநிலையில் விளங்கும்போது மனம் அழகு பெறுகிறது. அதை நாம் காண முடியாவிடிலும் உணரலாம். அப்போது நாம் சலனமற்ற நீர்ப்பரப்புப் போல் அமைதியாக விளங்குவோம். கடைசியில், ஆத்மாவின் சௌந்தர்யம் என்றும் உண்டு. அது மிகவும் நுணுக்கமானது. உணர்வதுகூட இயலாது. மனம் தூய்மையாக, சலனமின்றி விளங்கும்போது ஆத்மாவின் அழகு மெருகேறும் என்று ஊகிக்க மட்டும் முடியும். எல்லாம் சமமாக இருப்பதாக உணரும்போது ஏற்படும் சமாதிநிலையில் அழகான ஆத்மாவின் சாயல் தெரியும்.

சமம் என்பது சமாதி நிலை. நீ செய்ய வேண்டியதைச் செய்கிறாய். மேற்கொண்டு எதுவும் செய்வதில்லை. எவ்வளவு செய்ய வேண்டுமோ அவ்வளவே செய்கிறாய். மேற்கொண்டு அந்த அளவை மீறுவதில்லை. எதைச் செய்ய வேண்டியதில்

லையோ அதை நீ செய்வதில்லை. தேவையான அளவு உழைப்பைத் தருகிறாய். தேவையான அளவு ஓய்வெடுக்கிறாய். உன்னிடம் எல்லாம் சமமாக விளங்குவதால் உன்னிடம் மிஞ்சியிருப்பது சத்துவ குணம் மட்டுமே.

'ஞானி எதிலும் பட்டும் படாதவனாக இருக்கிறான். அவனது மனத்தில் சிறிதளவும் ஆசை கிடையாது. அவன் திருப்தியுடன் விளங்குகிறான். சுதந்திர ஆத்மாவாக இருக்கிறான். அவனை யாருடன் ஒப்பிடுவது? அவனுக்கு சமமாக யார் உள்ளனர்?' **(ஸ்லோகம் 265)**

ஆம். அவன் ஒப்பீட்டைக் கடந்தவன். இணையற்றவன். அபூர்வமானவன். அலெக்சாந்தர், நெப்போலியன் முதலிய சக்கரவர்த்திகளையும் அவனுடன் ஒப்பிட முடியாது. குட்டை-குளங்களைக் கடலுடன் ஒப்பிட முடியுமா?

உதாசீனம் என்பதற்கு நாம் அலட்சியம் என்று அர்த்தம் கொள்கிறோம். அதை 'உத-ஆஸீன' எனப் பிரிக்க வேண்டும். இதன் பொருள் தனக்குள் உட்காருதல் என்பது. எனவே இதுவும் உபவாசம் என்னும் சொல்லும் ஒரே பொருள் தருகின்றன எனினும் நுணுக்கமான வேறுபாடு உண்டு. உபவாசம் என்றால் ஒருவன் தன்னையே நெருங்கிவருதலாகும். உதாசீனம் என்றால் தன்னில் நிலைபெற்றவன் என்று பொருள்படும். உபவாசம், உதாசீனத்திற்கு இட்டுச்செல்லும் படிக்கட்டு. தன்னருகில் உட்கார்ந்தால் உபவாசம். தன்னிலேயே உட்கார்ந்துவிட்டால் உதாசீனம். அவன் தான் உட்கார தனக்குள்ளேயே ஆசனம் போட்டுக் கொள்கிறான்.

மக்கள் இந்தப் பொருளை மறந்துவிட்டு, உதாசீனன் என்றால் எதிலும் ஆர்வமோ, அக்கறையோ இல்லாதவன் என்று எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் ஒரு திசையில் நாம் பார்க்கும்போது அங்குள்ளதுதான் தெரியும். மற்ற திசைகளில் உள்ளவை கண்ணில் படுவதில்லை. அதற்காக அவை புறக்கணிக்கப்பட்டவையாகாது. உள்ளே ஆசனம் போட்டு உட்கார்ந்து விட்டதால் வெளியிலுள்ள பொருள்கள் அவன்

கண்ணில் படுவதில்லை. இதனால் அவன் அவற்றை அலட்சியம் செய்கிறான் என்று கூறலாகாது.

குறிப்பிட்ட ஓர் உணவைச் சுவைத்துக் கொண்டிருக்கும் போது இன்னொரு உணவின் சுவையை அறிய முடியாது. உதாசீனன் உள்ளே ஆத்ம ரசத்தின் சுவையில் லயித்திருக்கும் போது, உலக விஷயங்களின் சுவையில் அவனது கவனம் செல்லாது. நேற்றுவரை வாழ்க்கையில் பதவிக்காக, பணத்திற்காக, புகழுக்காக ஆர்ப்பாட்டம் செய்தவன் உதாசீனன் ஆனதும் பெட்டிப் பாம்பாய் அடங்கிவிடுகிறான்.

உதாசீனனுக்கு ஆத்ம வைரம், ஆத்ம ரத்தினம் கிடைத்துவிட்டது. இனி அவன் உலக விஷயங்களாகிய கூழாங் கற்களை ஏறெடுத்துப் பார்க்க வேண்டியதில்லை. அவன் இதுவரை தனது வீடு எதுவென்று தெரியாமல் அலைந்துகொண்டிருந்தான். இப்போது சொந்த வீட்டில் தன்னை இருத்திக்கொண்ட பிறகு வெளியே எங்கே போகவேண்டும், ஏன் போக வேண்டும்?

உண்ணாவிரதமும் உபவாமும் வெவ்வேறானவை. இரண்டின் போதும் உணவு உண்ணப்படுவதில்லை. மகாவீரர் மேற்கொண்டது உபவாசம். அரசியல்-சமூக காரணங்களுக்காக உண்ணாமல் போராட்டம் நடத்துவது உண்ணாவிரதம். மகாவீரர் தியான சமயம் அதில் ஆழ்ந்துவிடுவார். தியானம் தொடர்ந்து பலநாள் நிகழும் அவருக்கு உணவின் நினைவு வராது. காரணம், அப்போது அவர் உடலை, உடலின் தேவைகளை மறந்து போயிருப்பார். பசி உடலுடன் மட்டும்தானே சம்பந்தப்பட்டது. இப்படி உணவின் நினைவே எழாமல் இருப்பது உண்மையான உண்ணாவிரதம்.

ஆனால் மதச் சடங்காகவும் சமூகத்திற்காகவும் மேற்கொள்ளப்படும் உண்ணாவிரதம் போலியானது. ஏனெனில் எந்தக் காரணத்துக்காக உண்ணாமல் இருக்கிறோம் என்பதை மறந்துவிட்டு, விரதம் முடிந்து எப்பொழுது, என்னென்ன சாப்பிடப்போகிறோம் என்ற நினைவே போலி உண்ணாவிரத சமயம் மேலோங்குகிறது. மதச் சடங்காகக் கோயிலில் உண்ணாவிரதம் இருந்தாலும், மனம் கோயிலில் இல்லாமல்

ஹோட்டலில் அல்லது இனிப்பு விற்கும் கடைகளில் அலையும். ஒரு நாளைக்கு மேல் உண்ணாவிரதம் இருந்தால், முதல் நாள் இரவே அறுசுவை விருந்து சாப்பிடுவதுபோல் கனவு வரும்! விரத நாட்களைவிட சாதாரண நாட்களே மேல். மற்ற நாட்களில் நமக்கு உணவின் ஞாபகம் வருவதில்லை. கடிகாரம் காட்டும் மணியைப் பொறுத்து நாம் சாப்பிட எழுகிறோமே தவிர, பசியினால் தூண்டப்பட்டு அல்ல.

மகாவீரர் போன்றோர் உபவாசமிருந்ததை அறிந்து, நாமும் உண்ணாமலிருந்தால் அவரைப்போல் ஆகிவிடலாம் என நினைப்பது முட்டாள்தனம். வெளியே உள்ளதைக் கைவிடுவதால் உள்ளே (ஆத்மாவில்) மாறுதல் ஏற்பட்டுவிடாது. இது செயற்கை யான, தலைகீழான முயற்சி. உள்ளே உள்ளத்தால் (ஆத்மாவில்) லயித்தால், வெளியே இருப்பவை தாமாக நீங்கிவிடும். இவ்வாறு வெளியுலகப் பிடிப்பு நீங்குதல் இயற்கையானது, நிரந்தரமானது. எதையும் வலிந்து பிடுங்குவது பயன் தராது. கனிந்து தானாக மடியில் விழுவது நிலைக்கும்.

உதாசீனம் என்பது ஒன்றின் மீது தியானம் செய்வதுபோல் அதிகமாகக் கவனம் செலுத்தாமலிருப்பதைக் குறிக்கிறது. வெளி யுலக வாழ்க்கையில் கவனம் செலுத்துவதிலிருந்து விடுபடுவதைக் குறிக்கிறது. கவனம் என்பது மனத்தை ஒருமுகப்படுத்துதலாகும் (concentration). ஆசை காரணமாகத்தான் எதன் மீதும் உன் கவனம் பதியும்.

தெருவில் செல்லும் ஒரு பெண்ணின் மீது உன் கவனம் பதிகிறது. மனம் பிறகு வேறு எப்பக்கமும் திரும்புவதில்லை. அவளிடமே கட்டுண்டு கிடக்கிறது. வேறு எங்கோ சென்றபடி இருந்த நீ அவளைப் பின் தொடர்கிறாய். அவள் ஒரு கடைக்குள் நுழைந்தால், நீயும் அங்கே போய் உனக்குத் தேவையில்லாத பொருளாயினும் ஏதோ ஒன்றை வாங்குவாய்.

கோபத்திலும் இப்படித்தான் நிகழ்கிறது. அப்போது நீ சுற்றுப் புறத்தை மறந்து விடுகிறாய். ஓர் எதிரியைக் கொலையாவது செய்து வீழ்த்துவது என்று கோபப்படும்போது பின்விளைவுகள் நினைவிற்கு வருவதில்லை.

துக்க சமயமும் கவனம் அதில் பதிகிறது. ஒருவர் இறந்து போனால் சுற்றிலுமுள்ளவர்கள் நெஞ்சிலடித்துக் கொண்டு அழுகிறார்கள். அவர்களின் முழுக் கவனமும் இறந்தவர் மீதே குவிந்துள்ளது.

உதாசீனமாக இருப்பவன் எந்த உணர்ச்சியிலும் மிகையாகக் கவனம் செலுத்துவதில்லை. அவன் எதிலும் மிதமாக இருப்பதாலோ, உணர்ச்சிகளை வெளிக்காட்டாமல் இருப்பதாலோ மக்கள் அவனை மந்தமானவன் (dull), ஆர்வமற்றவன் (cold) என்று நினைத்து விடுகின்றனர். அவனது கவனம் முழுமையாக உள்புறம் திரும்பியிருப்பதை அவர்கள் அறிந்திலர். எதில் கவனம் என்பதைவிட எந்த அளவிற்குக் கவனம் என்பது அதிகம் முக்கியமானது.

ஒரு நாய் அக்கம் பக்கத்து நாய்களிடம் தன்னைவிட வேறு எந்த நாயும் வேகமாக ஓட முடியாது என்று திமிராகப் பேசியது. அப்போது ஒரு முயல் அப்பக்கமாக ஓடியது. மற்ற நாய்கள் தூண்டிவிட, திமிராகப் பேசிய நாய் முயலைத் துரத்தியது. எவ்வளவு முயன்றும் முயலைப் பிடிக்க முடியவில்லை. முயல் எங்கோ ஓடி மறைந்தது. மற்ற நாய்கள் கேலி செய்தன.

திமிர் பிடித்த நாய் சற்று யோசித்தபின் கூறியது: "கவனத்தின் அளவுதான் அதன் வெற்றிக்கும் என் தோல்விக்கும் காரணம். அது எனக்கு உணவாக வேண்டும் என்பதில் மட்டும் என் கவனம் இருந்தது. அப்படி உணவாகக் கிடைக்காவிட்டாலும் பாதகமில்லை என்ற அலட்சியமும் இருந்தது. முயலுக்கோ உயிருக்கே அபாயம் ஏற்பட்டுவிட்ட நிலையில் அதன் முழுக் கவனமும் வெறியாக மாறி உயிர் தப்புவதிலேயே குவிந்ததால் இந்த ஓட்டப் பந்தயத்தில் முயல் வென்றது.

ஒன்றில் ஆசை உள்ளவரையிலும் அதில் கவனமும் இருக்கும். முயலுக்கு உயிரைக் காப்பாற்றிக் கொள்வதில் ஆசை, கவனம். நாய்க்கு உணவின் மீது ஆசை, அதில் கவனம். ஆசைகள் நீங்கினால் குறிப்பாக ஒன்றில் கவனம் செலுத்தி வேண்டியிராது. இதுவே உதாசீன நிலை.

ஆங்கிலத்தில் இரண்டு சொற்கள் concentraiton, centering. இவை மனத்தை ஒன்றில் குவித்தல், ஒன்றின் மையத்தில் நிலைபெறுதல் என்று பொருள் தருகின்றன. நீ ஒன்றின் மீது மனத்தைக் குவிக்கிறாயெனில் அப்பொருள் உனக்கு வெளியே இருக்க வேண்டும். இது வெளிமுகமானது.

உன் மனம் வெளியே எங்கும் போய்வராமல் மையத்தி லேயே நிலைபெற்றால் உன் கவனம் முழுமையாக உள்நோக்கித் திரும்பியிருக்கும். இதுவே வெளிப்புற வாழ்வில் உதாசீனமாக இருத்தல் என்பதாகும்.

இத்தகைய உதாசீன நிலையை அடைந்தவனை எவனுடன் ஒப்பிடுவது? எப்படி ஒப்பிடுவது? இது ஒப்பிட முடியாத நிலை ஆயிற்றே.

உலகத்திற்கு மதிப்புக் கொடுத்து, அதிலேயே ஈடுபட்டுள்ள நீ இதைப் பெறுதல், அதைப் பெறுதல் என்று புறவாழ்க்கையில் போராடுகிறாய். கையில் கிடைப்பது எதுவுமில்லை. ஏனெனில் உலகம் என்பது பாலைவனம். அதில் தெரிவதெல்லாம் கானல் நீர்.

நீ இதுவரை உன் வீட்டிலேயே வாடகைக்கு வசிப்பவனைப் போல் வாழ்ந்தாய். நீதான் உன் வீட்டிற்கு, உனக்கு, எஜமானன். இதில் உன் கவனம் செல்லவில்லை. உன் கவனம் வெளியுலகில் திரிந்தபடி இருந்தது. உன் கவனம் ஒரு பறவைபோல் நாற் திசையிலும் பறக்கிறது. உள்ளே மட்டும் வருவதில்லை. அப்படி உள்ளே வந்துவிட்டால், நீ மனத்தைக் கடந்தவனாகிவிடுவாய். இதுவே முக்திநிலை.

'ஆசைகள்-பற்றுகள் நீங்கியவன் அறிந்தும் அறியாதவன் போலிருப்பான். பார்த்தும் பாராதவனாக இருப்பான். பேசினாலும் மவுனிபோலிருப்பான்.' **(சுலோகம் 266).**

**ப**ற்றுகளற்றவனுக்கு உலகில் இனிப் பெறவேண்டியதென்று எதுவுமில்லை. அவன் எதிர்காலத்தை தியாகம் செய்தவனாகிறான். இப்போது இங்கேயே அவன் திருப்தியுடன் உள்ளான். அவனுக்குக் குறிப்பாக எதையும் பார்க்கும் ஆசையில்லை. எதையும் கேட்டறியும் ஆர்வமும் இல்லை. தொட்டாலும்

உணர்ச்சிவசப்படுவதில்லை. அவன் எதிரில் ஓர் அழகி சென்றால் அவன் கண்ணுக்குத் தெரிவாள். ஆனால் தெரியவில்லைபோல் பாதிப்படையாமல் இருப்பான்.

உடனே நீ சொல்வாய், "நானும் எத்தனையோ முறை அழகிய பெண்களைப் பார்த்தும் பாராதவனாக இருந்திருக் கிறேன்," என்று. அது உண்மையில்லை. மற்றவர்கள் உன்னைக் கவனிக்கவில்லையெனில் நீ அவளைக் கட்டாயம் பார்ப்பாய். மனத்தை அடக்கிக்கொள்ள முயன்றாலும் கடைக்கண்ணாலாவது பார்த்துவிடுவாய்.

மேலும் அவள் உன்னைக் கடந்த சென்ற பிறகும் ஒன்றிரண்டு முறை திரும்பிப் பார்ப்பாய். ஞானி அவ்வாறு செய்யமாட்டான். அவன் வேண்டுமென்றும் பார்க்கமாட்டான். பெண்ணைக் கண்டால் கண்ணை மூடிக்கொள்ள மாட்டான். ஓரக்கண்ணாலும் பார்க்கமாட்டான. அவனுடைய கண்கள் சூனியமானவை. அவை நிலைக்கண்ணாடி போன்றவை. கண்ணாடி எதிரில் எவராவது வந்தால் கண்ணாடியில் பிரதிபிம்பம் தெரியும். ஆனால் அது பாதிப்படைவதில்லை. ஞானியின் பார்வையிலும் எல்லாப் பொருளும் தெரியும். அவன் கிளர்ச்சியடைவதில்லை.

பேசும் விஷயத்திலும் இப்படியே. புத்தர் 40 ஆண்டுகள் பேசினார் என்றும் சொல்வர். ஆனாலும் அவர் எதுவும் பேசவில்லை என்றும் சொல்வர். ஜைனர்களில் இரு பிரிவினர் உள்ளனர்: திகம்பார், ஸ்வேதாம்பரர்.* மகாவீரர் எதுவும் பேசவோ, உபதேசிக்கவோ இல்லை என்பது திகம்பரர்களின் முடிவு. ஆகவே அவர்களிடம் சமய சாஸ்திர நூல் எதுவும் கிடையாது.

சாஸ்திரங்கள் ஸ்வேதாம்பரர்களிடமே உள்ளன. அவற்றை ஆதாரமென திகம்பரர்கள் கொள்வதில்லை. ஏனெனில் அவர்களின் பார்வையில் மகாவீரர் மௌனமே கடைப்பிடித்தார். எனினும் ஸ்வேதாம்பரர்கள் இயற்றிய சாஸ்திரங்கள் பொய்யல்ல

---

* திகம்பரப் பிரிவுத் துறவிகள் தங்களிடம் எப்பொருளும் இருக்கக்கூடாதென்றும், ஆடைகளும் கூடாதென்றும் கூறுவர். ஸ்வேதாம்பரத் துறவிகள் வெள்ளாடை (ஸ்வேத+அம்பர்) மட்டும் அணிவர்.

என்பதே என் கருத்து. ஏனெனில் அஷ்டாவக்ரர் இந்த சுலோகத்தில் கூறியபடி ஞானி பேசாமலே பேசுகிறான்.

அன்றாட வாழ்வில் பேசுகிறான், மவுனமாய் இருக்கிறான் என்பதற்கு அப்படியே பொருள் கொள்கிறோம். ஆன்மிக் மொழியில் எதிர்மறையான அர்த்தம் வரும். ஆன்மிகத்தில், ஞானி பேசினாலும் பேசுவதில்லை; பேசாவிடிலும் எப்படியோ பேசுகிறான் என்று அர்த்தம் எடுத்துக் கொள்ளப்படும். சொற்களை உபயோகித்தும் அது பேச்சில்லை என்று கருதப்படும். சில சமயம் மவுனம் மூலம் பேசுவதாகக் கருதப்படும்.

'ஒருவன் பிச்சையெடுப்பவனாகவோ, அரசனாகவோ இருக்கலாம். அவன் எல்லா உணர்வு நிலைகளிலும் மங்கள மானது, அசுபமானது என்று பிரிக்காத புத்தி உடையவனாகவும், ஆசைகளற்றவனாகவும் இருப்பின், அவன் பொலிவுடன் திகழ்வான்.' **(சுலோகம் 267)**

**ஞா**ன நிலையில் உள்ளவனுக்கு எதுவும் மங்களமோ, அமங்களமோ இல்லை. எதுவும் பண்புடையது அல்லது பண்பற்றது என்று இல்லை. சுபம்-அசுபம் என்று எதுவும் இல்லை. நல்லது-கெட்டது, செய்யத் தகுந்தது-செய்யக் கூடாதது என்பது போன்ற இரட்டைகளும் அவனுக்கில்லை. இரட்டைகளின் உணர்வு இல்லாத நிலையில் செய்யப்படும் தியானமே தலைசிறந்த தியானமாகும்.

பெண்களின் முன்னிலையில் ஆண்கள் நாகரிகமாகப் பேசுகிறார்கள். அடக்கி வாசிப்பார்கள். பெண்கள் அகன்றபின் ஆண்கள் சுதந்திரமாகக் கெட்ட வார்த்தைகளையும் உபயோகித்துப் பேசுவார்கள். மகன் எதிரில் தந்தை கண்ணியமான சொற்களைப் பேசுவார். அவரே தன் நண்பர்களுடன் மட்டும் இருக்கையில் செல்லமாக பலருடன் கெட்ட வார்த்தைகள் பேசுவார்கள். நண்பர்கள் வேடிக்கையாக ஒருவரை ஒருவர் திட்டிக்கொள்வார்கள்.

ஞானியிடம் இரட்டை வேடம் கிடையாது. ஏனெனில் அவன் எதையும் பிரித்து வகைப்படுத்திப் பார்ப்பதில்லை.

உலகில் எல்லாவற்றையும் இரண்டாகப் பிரித்துப் பெயர் சூட்டும் வழக்கம் உள்ளது. இந்தியா மட்டும்தான் இந்த இரண்டையும் கடந்த மூன்றாவது நிலையையும் அறிமுகப்படுத்தி யுள்ளது. உலகம் சுவர்க்கம்-நரகம் என்று பிரித்தது. இந்தியா மோட்சத்தைச் சேர்த்தது. உலகம் சுகம்-துக்கம் என்று பிரித்தது. இந்தியா ஆனந்தத்தைச் சேர்த்தது. உலகம் நல்லவர்-கெட்டவர் என்று பிரித்தது. இந்தியா ஜீவன் முக்தரைச் சேர்த்தது. உலகம் சாது-சாதுக்கள் அல்லாதவர் (அசாது) என்று பிரித்தது (ascetic & non-ascetic).

இந்தியா புனிதரைச் சேர்த்தது (saint).

உலகம் கூறுபவை ஒன்றுக்கொன்று எதிரானவை. இந்தியா அவற்றிற்கு அப்பாற்பட்ட நிலையைக் கூறுகிறது. உதாரணமாக, ஹிந்துக்கள் நாம் இறந்தபின் நமது புண்ணியம்-பாவத்தின் அளவிற்கு ஏற்ப, முதலில் சுவர்க்கம், பிறகு நரகம் அல்லது முதலில் நரகம், பிறகு சுவர்க்கம் என்னும் நிலையை அடைவோம். ஒன்றிலிருந்து இன்னொன்றிற்குப் போகிறோம். எனவே இரண்டும் உண்டு. ஆனால் இந்தியா இவற்றைக் கடந்து மோட்ச நிலையைக் குறிப்பிடுகிறது. அங்கே போவதும் வருவதும், எழுவதும் வீழ்வதும் கிடையாது. பயணம் முடிந்துபோனது.

உலக சமயங்களின் கண்ணோட்டம் இரண்டிற்கப்பால் சென்றதில்லை. மற்ற மதங்கள் சுவர்க்கம்-நரகம் பற்றியே பேசுகின்றன. அவை மோட்சம் என்னும் நிலையை அறிந்திருக்க வில்லை. உலகம்-கடவுள் பற்றி பேசும் அவை அனைத்திற்கும் மேலான பிரம்மம் பற்றிக் கூறுவதில்லை. இந்தியாவின் கண்டுபிடிப்பு அபூர்வமானது. இரட்டைகள் உள்ள இடத்தில் இந்தியா மூன்றாவதாக ஒன்றையும் நிலைநாட்டியுள்ளது.

'உண்மையான யோகி கபடமற்றவனாக, எளிமையான வனாக, திருப்தியுள்ளவனாக இருப்பான். அவன் சுதந்திர உணர்வு, கூச்ச உணர்வு இரண்டையும் கடந்திருப்பான். தனது தத்துவத்தில் (சித்தாந்தத்தில்) உறுதியாக இருப்பான்.' **(சுலோகம் 268)**

இது யோகி அடையும் கடைசி நிலை. அப்போது அவன் நல்லது-கெட்டதைக்கூட பிரித்துப் பார்க்காத அளவு களங்கமற்ற, சுத்தமான மனமுள்ளவனாக இருப்பான். சுபம்-அசுபம் என்றும் பிரிக்கமாட்டான். அவனது மனமென்னும் வானத்தில் கறுப்பு மேகங்கள் மட்டுமல்ல, வெள்ளை மேகங்களும் தோன்றுவதில்லை. அவன் கைகளில் இரும்பாலான விலங்குகள் கிடையாது என்பதுடன் பொன் விலங்கும் கிடையாது.

ஞானி சுதந்திர உணர்வைக் கடந்திருப்பான். சுதந்திரம் என்று சொல்லும்போது அடிமைத்தனமும் சேர்ந்தே வருகிறது. இதற்கு இரண்டு பேர் தேவை. ஞானி தன்னையும் மற்றவர்களையும் பிரித்துப் பார்ப்பதில்லை. ஆகவே அவன் யாருக்கும் அடிமையாகாமல் சுதந்திரமாக உணர்கிறான்.

ஒருவன் மலையேற முயலுகிறான். கையில் தனித் தனியான இரண்டு நீண்ட கம்புகள் வைத்திருக்கிறான். அவற்றைத் தரையில் ஊன்றி அவன் எழும்ப முயல்கிறான். ஆனால் முடிய வில்லை. இதைப் பார்த்து ஒருவர் சிரிக்கிறார். அவரிடம் தன இயலாமையைக் கூறி அவன் புலம்புகிறான்.

அவர் அவனது தவற்றைச் சுட்டிக்காட்டுகிறார். "இரண்டு கோல்கள் மட்டும் இருந்தால் போதாது. சிறு-சிறு சட்டங்கள் மூலம் அவற்றை இணைக்கவும் வேண்டும். இப்படிப் படிக்கட்டுகள் அமைத்து ஏணிபோல் தயாரித்தால் மேலே ஏறலாம்," என்றார்.

சாஸ்திர அறிவு கோல்கள் போன்றது. சாஸ்திர அறிவால் மட்டும் ஆன்மிகத்தின் உச்சத்தை அடைய முடியாது. அவற்றை நடத்தையுடன் இணைக்க வேண்டும். சாஸ்திரத்தை நீ கேட்கிறாய், அறிகிறாய், புரிந்துகொள்கிறாய். ஆனால் வாழ்ந்துகாட்டுவதில்லை. வாழ்ந்து பார்த்தால்தான் படிக்கட்டு அமையும். எண்ணம் எழுந்தால் போதாது (abstract). அதற்கு திடமான உருவமும் தரவேண்டும். (concrete). வெளித்தோற்றம் மட்டும் துறவியினு டையதாக இருந்தால் போதாது. அந்தத் துறவு மனப்பான்மை அவரது ஒவ்வொரு செயலிலும் வெளிப்பட வேண்டும்.

**நா**ன் ஒரு முறை ரயிலில் பிரயாணம் செய்தபோது ஒரு ஸ்டேஷனில் பலத்த கூட்டம். நிறைய மக்கள் ஒரு சாமியாருக்கு விடைகொடுத்து அனுப்ப வந்திருந்தனர். அவர் ஒரு நாலு முழ வேஷ்டி மட்டுமே அணிந்திருந்தார். கையிலிருந்த பையில் இன்னொரு வேஷ்டி தெரிந்தது. அவ்வளவு எளிமை. மக்கள் ஒரு கூடையில் பழங்கள் நிரப்பிக் காணிக்கையாக அளித்தனர். அவர் நானிருந்த பெட்டியில் ஏறி அமர்ந்தார். மக்கள் கூடையை உள்ளே கொண்டுவைத்தனர்.

பெட்டியில் நாங்கள் இருவர் மட்டுமே இருந்தோம். நான் படுத்துத் தூங்கத் தொடங்கினேன். நடுவில் தரதரவென சத்தம் கேட்டு லேசாகக் கண்களைத் திறந்தேன். சாமியார் கூடையை இழுத்துப் பழங்களை எண்ணத் தொடங்கினார். இதென்ன சாதாரண மனிதனைப்போல் இவரும் அன்பளிப்பாக வந்த பழங்களைக்கூட எண்ணிப் பார்க்கிறாரே என வியந்தேன்.

அடுத்து அவர் பழங்களின் கீழே பக்தர்களால் வைக்கப் பட்டிருந்த ரூபாய் நோட்டுகளை எடுத்து எண்ணத் தொடங்கினார். எனக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. சாமியாரான அவர் ரூபாய் நோட்டுகளை மறைத்தே தரும்படி ஏற்பாடு செய்திருக்கிறார் என்றும், வசூல் திருப்திகரமா என்று பார்க்கிறார் என்பதைப் புரிந்து கொண்டேன். நான் சட்டென்று எழுந்து உட்கார்ந்தேன். அவர் உடனே பணத்தை மறைத்துவிட்டார்.

நான் மறுபடியும் படுத்துக் கண்களை மூடியதும் அவர் பணத்தை எடுத்து எண்ணுவதைத் தொடர்ந்தார். நான் மீண்டும் எழுந்து உட்கார்ந்தேன். நான் கவனித்துவிட்டேன் என்று தெரிந்ததும் அவரது முகத்தில் வியர்வை அரும்பியது. நான் அவரைத் தேற்றினேன். "சாமி, ஏன் சங்கடப்படுகிறீர்கள்? பணத்தை எண்ணிப் பார்ப்பது ஒன்றும் பாவச் செயல் இல்லையே. மேலும், நீங்கள் எண்ணிப் பார்ப்பது உங்களிடமுள்ள பணத்தையே தவிர என்னுடையதல்லவே. நான் பார்த்ததும் இதை மறைக்க வேண்டிய அவசியம்தான் என்ன?" என்று கேட்டேன்.

நான் விசாரித்ததில் அவர் போபாலுக்குப் போகிறார் என்று தெரிந்தது. அவர் எத்தனை மணிக்கு வண்டி போபாலை

அடையும், தூங்கிவிட்டால் என்ன ஆகும் என்று கவலையுடன் கேட்டார். நான் அவரை அமைதிப்படுத்தினேன். "சாமி, காலை 6 மணிக்குத் தான் போபாலுக்கு ரயில் போகும். ஆகவே நிம்மதி யாகத் தூங்கலாம். கூடுதலாகத் தூங்கினாலும் கவலையில்லை. இந்தப் பெட்டியை அங்கே கழற்றித் தனியாக நிறுத்தி விடுவார்கள்." என்றேன். அவருக்கு இந்தத் தகவலை ஏற்கெனவே பக்தர்கள் சொல்லியிருப்பார்கள். மேலும் நம்பிக்கையூட்ட நான் அவரிடம், "உங்களுக்கு எந்தக் கவலையும் வேண்டாம். நானும் போபாலில்தான் இறங்க வேண்டும். அப்போது நீங்கள் உறக்கத்தில் இருந்தால் நான் எழுப்புகிறேன்." என்றேன்.

இவ்வளவிற்குப் பிறகும் அவரால் சரியாகத் தூங்க முடியவில்லை. சில பெரிய நிலையங்களில் ரயில் நின்றபோது அவா கண்ணில் பட்டவர்களை அழைத்த அது என்ன ஸ்டேஷன் என்றும், போபாலைச் சென்றடைய இன்னும் எவ்வளவு மணியாகும் என்று விசாரித்தபடியே இருந்தார். இதனால் என் தூக்கமும் கலைந்தது இதிலிருந்து அவர் என்னை நம்பவில்லை யென்று தெரிந்தது. நான் அவரிடமிருந்த பணத்தைப் பார்த்து விட்டதால் அதை அபகரிப்பதற்காக நான் அவரைத் தூங்கச் சொல்வதாக நினைத்துவிட்டார்.

அதிகாலை 3 மணிக்கு அவர் வண்டி நின்ற ஸ்டேஷனில் யாரையோ விசாரித்தபோது, நான் பொறுக்க முடியாமல், "இதோ பாருங்க, நீங்க சாமியாரா இருந்தும் இந்த அளவுக்குப் பதறுகிறீங்களே. எல்லாரும் போபாலை அடைய 6 மணியாகும்னு ஒரே பதிலைத்தானே சொல்றாங்க. நீங்க இறங்கி பெட்டியில் மாட்டியிருக்கிற பலகையைப் பார்த்துட்டு வாங்க. போபால் வரைதான் இந்தப் பெட்டி போகும்னு தெரிஞ்சுக்குவீங்க." என்றேன்.

அப்படியும் அவர் 5 மணிக்கே எழுந்து போபாலில் இறங்கத் தயாரிப்பை ஆரம்பித்துவிட்டார். வேஷ்டியை உதறி மறுபடியும் கட்டிக் கொண்டார். பையில் வேஷ்டி உள்ளதா என்று எடுத்துப் பார்த்தார். பழக்கூடையை கதவுப் புறமாக நகர்த்தினார். ஜன்னல் வழியே தலையை நீட்டி ரயில் கடந்து செல்லும் நிலையங்களின் பெயரை எச்சரிக்கையுடன் படித்தார்!

உடையால் மட்டும் எளிமை வந்துவிடாது. உடைமைகளைத் துறப்பதால் மட்டும் எளிமை வந்துவிடாது. உள்ளத்துத் துறவுதான் உண்மைத் துறவு. என் சக பயணி துறவியாயிருந்தும் பணத்தை எண்ணிப் பார்க்கும் பழக்கத்தை நிறுத்தவில்லை. பலர் போபாலுக்கு வண்டி போய்ச் சேரும் நேரம் சொல்லியும் அவர் பதற்றமாகவே இருந்தார். ஊரை அடைய நிறைய நேரம் இருக்கும்போதே சம்சாரியைப் போல இறங்குவதற்கான தயாரிப்புகளைத் தொடங்கிவிட்டார். போபாலில் இறங்காமல் தவறுதலாக முன்-பின் நிலையத்தில் இறங்கிவிட்டால் சம்சாரிதான் கவலைப்படுவானே தவிர, துறவிக்கு ஏன் பதற்றம்! வேறு ஊரில் இறங்க நேர்ந்தால் அவருக்கு என்ன இழப்பு? துறவிக்கு சொந்த ஊர் உண்டா? யாதும் ஊரே என்பதுதானே அவரது கொள்கை.

'ஞானி ஆத்மாவில் ஓய்வாக இருந்து திருப்தி அடைகிறான். பற்றற்றவனாக இருக்கிறான். அவன் சோகப்படுவதில்லை. அவன் தன் மன ஆழத்தில் பெறும் அனுபவத்தை எப்படி, யாரிடம் சொல்வான்?' **(சுலோகம் 269)**

ஞானி தனது ஆத்மாவில் ஓய்வெடுக்கும் பேறு பெறுகிறான். அவன் தனக்குள் போய்ச் சேர்ந்துவிட்டான். ஆகவே அவன் திருப்தியுடன் விளங்குவான். இனி அவனுக்கு வெளியுலகில் பற்றுகள் இருக்காது. அவன் தனக்குள் புதிய (ஆன்மிக) அனுபவங்கள் பெறுவான். அவற்றை வெளியிடலாம் என்றால் தகுந்த மனிதர் கிடைக்கமாட்டார்கள். அவற்றைத் தெளிவாகச் சொல்வதும் கடினம்.

ஒரு ஞானிக்குத் தன் உள்ளுலக அனுபவத்தைச் சொல்ல இன்னொருவன் கிடைத்துவிட்டான் என்றால், அவனால் அதைப் புரிந்துகொள்ள முடியும் என்றால் அந்த இன்னொருவனும் ஞானியாகத்தானே இருப்பான். அப்படியானால் அதைச் சொல்ல வேண்டிய தேவையில்லாதபடி அவனும் ஏற்கெனவே அறிந்திருப்பான். இரண்டு ஞானிகள் சந்தித்தால் வாய்ச் சொற்களுக்குப் பயனில்லை. ஏனெனில் இருவரின். அனுபவமும் ஒரேமாதிரி இருக்கும்.

ஞானி தன் அனுபவத்தை சராசரி மனிதனிடம் சொல்வதில் நியாயமுண்டு. சராசரி மனிதன் அந்த அனுபவம் பெற்றிருக்க மாட்டான். அதைப் பெற்றால்தான் அவனும் ஆன்மிகப் பயணம் தொடங்க முடியும். ஆனால் ஞானி பெற்ற அனுபவம் சொற்களுக்கு அப்பாற்பட்டது. அவன் உள்ளே மேன்மேலும் ஆழத்தில் சென்று பெற்ற அனுபவம் அது. உள்ளே அறியப்பட்டதை வெளியே கொண்டுவர உபாயம் இல்லை. கொண்டு வந்தாலும் கேட்பவனுக்குக் குழப்பம்தான் மிஞ்சும். சூனியத்தில் அறிந்ததைச் சொற்களில் கொண்டுவர முடியாது.

அறிந்ததைச் சொல்ல முடியாது. சொல்வதைப் புரிந்து கொள்ள முடியாது என்பது ஆன்மிக உலகின் விசித்திரம்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் எனக்குள் சாட்சி மனப்பான்மையை உருவாக்கிக் கொள்ள விரும்புகிறேன். அதற்காக நான் என்னைப் பற்றிய ஆராய்ச்சியில், சுய பரிசோதனையில் ஈடுபட்டுள்ளேன். இது சரியான அணுகு முறையா?**

**சு**யபரிசோதனை எண்ணங்களைச் சார்ந்தது. சாட்சி மனப்பான்மை எண்ணங்களே இல்லாத நிலை. எண்ணங்களின் மூலமாக எண்ணமற்ற நிலையை அடையப் பாதை எதுவுமில்லை. எண்ணங்களைக் கைவிட்டால்தான் எண்ணமற்ற நிலை தோன்றும்.

சாட்சி மனப்பான்மை பெற ஆத்மபரிசோதனை ஒருபோதும் உதவாது.

பரிசோதனை யோசிப்பதை அடிப்படையாகக் கொண்டது. சாட்சி என்றால் யோசனை ஏதும் செய்யாமல் பார்ப்பது மட்டுமாகும். மனத்தில் ஓர் எண்ணம் உதித்தால் உடனே அது நல்லதா-கெட்டதா; அதைச் செயல்படுத்தலாமா, கூடாதா என்றெல்லாம் எண்ணங்கள் வலையாக விரியும். இதனால் நீ சாட்சி மனப்பான்மையைப் பெறுவது மேன்மேலும் சிரமமாகும். இவ்வாறு ஓர் எண்ணமேகூட உன்னை வழிதவறச் செய்துவிடும்.

ஐரோப்பிய நாடுகளில் சுயபரிசோதனைக்கு (introspectionக்கு) மதிப்புத் தரப்படுவதால் அங்கெல்லாம் சாட்சி மனப்பான்மை அறியப்பட்டிருக்கவில்லை. சுயபரிசோதனையில் தீர்ப்புப்போல் முடிவெடுக்கப்படுகிறது. சாட்சி மனப்பான்மையில் எந்த மதிப்பீடும் செய்யப்படுவதில்லை. நல்லது-கெட்டது, சுபம்-

அசுபம் என்றெல்லாம் சாட்சி முடிவுசெய்வதில்லை. நடப்பவை நிகழ்ச்சிகள் மட்டுமே; அவற்றிற்குப் பெயர் கிடையாது என்பது சாட்சி மனப்பான்மை. அது போகத்தையும் (அனுபவித்தலையும்) யோகத்தையும் (துறப்பதையும்) கடந்த நிலை.

சுயபரிசோதனைக்குப் பதிலாக வேறொரு பரிசோதனை செய். கண்களை மூடிக்கொண்டு நீ மனத்திடம், "உன்னிடம் தோன்றும் எண்ணங்களையெல்லாம் அவிழ்த்துவிடு. நல்லது-கெட்டது, ஆபாசமானது, அழகானது என்றெல்லாம் எந்த எண்ணமாயினும் தோன்றட்டும். நான் அவற்றை கடற்கரையில் உட்கார்ந்து அலைகளைப் பார்ப்பதுபோல் பார்க்கப்போகிறேன்," என்று அறிவுப்புச்செய்.

அப்போது ஒரு அதிசயம் நிகழும். முதலில் மனத்தில் எண்ணங்கள் பொங்குவதுபோல் தோன்றினாலும் அவை விரைவில் வடிந்துவிடும். சிறிது நேரம் கழித்து மனத்தில் எண்ணங்களே இருக்காது! இந்த இடைவெளி ஒரு நிமிடம்தான் என்றாலும் இதையே தொடக்கமாகக் கொண்டு மனம் அதிக நேரம் காலியாக இருக்குமாறு பயிற்சி செய்யலாம். மயக்கத்தில் மனிதன் எதுவும் நினைப்பதில்லை. மனத்தில் எண்ணங்கள் தோன்றா நிலையே அதன் மயக்கநிலை.

மனம் தூங்கினால் சாட்சி விழிக்கும். ஒரு சமயத்தில் இந்த இரண்டில் ஒன்றுதான் இருக்க முடியும். இருட்டும் வெளிச்சமும் ஒன்றாக இருக்க முடியாது.

முல்லா நஸ்ருத்தீன் ஒருவரது வீட்டில் வேலைக்காரராக இருந்தார். ஒருநாள் இரவு எஜமானர் அவரைக் கூப்பிட்டு வீட்டினுள்ளே இருட்டாக இருக்கிறதா என்று பார்க்கச் சொன்னார். நஸ்ருத்தீன் அப்படியே உள்ளே சென்று எட்டிப் பார்க்காமல் ஹரிக்கேன் விளக்கு ஏற்றிக்கொண்டு சென்றார். விரைவிலேயே அவர் திரும்பிவந்து, "எஜமான், உள்ளே இருட்டு துளிக்கூட இல்லை. இந்த விளக்கு வெளிச்சத்துல மூலை-முடுக்கெல்லாம் தேடிப்பார்த்துட்டேன்," என்றார்!

மனத்தில் எண்ணங்கள் பரவியிருப்பது இருட்டு சூழ்ந் திருப்பதுபோன்ற நிலைமை. தியானத்தில் ஈடுபடும்போது

உள்ளொளி தோன்றும். அப்போது எண்ணங்கள் காணாமல் போய்விடும்.

ஐரோப்பிய நாடுகளில் தியானம் என்ற பெயரால் நடைபெறுவது சிந்தனையைக் குவிப்பதைக் குறிப்பிடுகிறது (contemplation). ஆகவே அவர்களை தியானம் செய்யச் சொன்னால், எதன் மீது அல்லது எதைப் பற்றி என்று திருப்பிக் கேட்கிறார்கள். தியானம் செய்ய அவர்களுக்கு ஒரு விஷயம் தேவைப்படுகிறது. தியானத்தில் எந்த விஷயத்திற்கும் இடமில்லை என்பதை அவர்களுக்குப் புரியவைப்பது கடினம். எதை அடிப்படையாகக் கொண்டு தியானம் செய்வது என்னும் கேள்வியே தவறானது. மனத்தில் ஏதாவது மிஞ்சியிருக்கும்வரை நீ செய்வது தியானமாகாது. சூனியமான மனமே தியான மேடை.

முல்லா நஸ்ருத்தீன் மகனை அழைத்து, "நீ எங்கு வேண்டுமானாலும் போ. சினிமாவிற்கு மட்டும் போய்விடாதே. இப்போதெல்லாம் ஆபாசப் படங்கள்தாம் நிறைய வருகின்றன," என்று எச்சரித்தார். மகனுக்குத் திரைப்படம் பார்ப்பதில் ஆர்வம் இல்லை. ஆனால் தந்தையின் எச்சரிக்கை அவனுக்குத் தூண்டு கோல் போல் அமைந்தது. அவன் திரைப்படக் கொட்டகைக்குப் போய்விட்டான்!

படம் முடிவடைந்து அவன் வெளிவந்தபோது நஸ்ருத்தீனும் படம் பார்த்து வெளியே வரும் கூட்டத்தில் தெரிந்தார். மகன் தைரியமாக அவரிடம் சென்று, "நீங்க எப்படி இங்கே? படம் எப்படி இருந்திச்சுது? நீங்க எவ்வாறு உணர்கிறீர்கள்?" என்று கேட்டான்.

நஸ்ருத்தீன் ஆடிப்போய்விட்டார். பிறகு சமாளித்துக் கொண்டு, "உன்னை மாதிரி பசங்க இந்த சினிமாவைப் பார்க்கலாமா என்று முடிவுபண்றதுக்காகத் தான். அதுக்குள்ள அவசரக்குடுக்கையா இந்த படம் பார்க்க வந்திட்டியே," என்று மகனைக் கண்டித்தார்.

ஆராய்ச்சி என்ற பெயரில் நீ என்ன செய்கிறாய்? உதாரணமாக, ஆபாசத் திரைப்படம் பார்க்கிறாய். காரணம்

கேட்டால், மற்றவர்கள் இந்தப் படம் பார்க்கலாமா, கூடாதா என்று ஆலோசனை கூறவே பார்க்கிறேன் என்பாய். ஆனால் நீ உன் காம உணர்வுக்குத்தான் உண்மையில் தீனி போடுகிறாய். எதைப் பற்றி நீ அதிகம் நினைக்கிறாயோ அந்த உணர்வுதான் உனக்குள் அதிகமாக நுழையும். சிரங்கைச் சொரிந்தால் அது அதிகமாகும். அது அதிகமானால் அதிகமாகச் சொரிவாய். அது போன்றது இந்த ஆராய்ச்சி வெறி. எண்ணங்களை ஆராய்வதால் பயனில்லை என அறிந்துகொள்வது தியானத்தின் முதற்படி.

மனம் சம்பந்தமான ஆராய்ச்சி நூற்றாண்டுகளாக நடைபெறினும் பெரிய அளவில் முன்னேற்றமில்லை. ‘நார்மல்’ என்னும் நிலைக்கு அப்பாற்பட்டவர்களுக்கு சிகிச்சை தரப்படு கிறது. அதிலும் முழு குணம் ஏற்படுவதில்லை. சில அறிகுறிகள் தான் விடுபடுகின்றன.

குடிகாரனாயிருந்த ஒருவனை அந்தப் பழக்கத்திலிருந்து மீட்க மனநோய் மருத்துவர்களால் சிகிச்சை தரப்பட்டது. மூன்றாண்டுகள் சிகிச்சைக்குப்பின் மருத்துவர்கள் அவனிடம் எந்த அளவிற்கு சிகிச்சை அவனுக்குப் பயனளித்தது, குடிப்பழக்கம் நீங்கிவிட்டதா என்று கேட்டனர்.

அவன் சொன்னான்: “குடிப்பழக்கம் நீங்கவில்லை. ஆனால் ஒரு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. முன்பெல்லாம் குடித்தால், நான் குற்றவாளிபோல் உணர்வேன். இப்போது அந்தக் குற்ற உணர்வு நீங்கிவிட்டது. அடுத்து, முன்பெல்லாம் கள்ளுக் கடைக்கு விடுமுறையாக இருந்தாலும் என் கால்கள் என்னை அங்கே இழுத்துச் சென்றுவிடும். இப்போதெல்லாம் கடை திறந்திருக்கும் நாள்களில் மட்டுமே அங்கே போகிறேன். அந்த அளவிற்கு மனத்தெளிவு ஏற்பட்டுவிட்டது!”

ஜென் புத்தமத ஆசிரமங்களில் மூளைக்கோளாறு உள்ளவர் சிகிச்சை கேட்டு வந்தால், அவரை ஆசிரம மூலையில் ஒரு குடிசை அல்லது அறையில் தங்கச்செய்வார்கள். யாரும் அவருடன் பேசமாட்டார்கள். உணவு அனுப்புவார்கள். தேவைப் பட்டால் மருந்து கொடுப்பார்கள். அதற்குமேல் அதிகமாகக் கவனம் செலுத்தமாட்டார்கள். ஏனெனில் பைத்தியம் பிடித்தவர்

களை மற்றவர்கள் கவனித்தால் அவர்களின் வெறி அதிகமாகிறது. தாங்கள் கவனிக்கப்படுகிறோம் என்பது அவர்களுக்கு சந்தோஷம் தருகிறது. தான் கவனிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே சிலர் பைத்தியம்போல் நடந்துகொள்ளலாம். கவனிக்கப் படுவதற்காகவே சிலர் அரசியலில் ஈடுபடுகிறார்கள். வேறு சிலர் பணக்காரர் ஆவதையே லட்சியமாகக் கொள்கிறார்கள். உடலை அடக்குவதாகக் கூறி, அதைப் பலவகையில் கொடுமைப்படுத்திச் சிலர் அதிசய சாமியார்களாகக் கருதப்படுகிறார்கள். பெண் களாயின் தங்கள் அழகின் மூலம் பிறரது கவனத்தை ஈர்க்க அதிக நேரம் கண்ணாடியின் முன் செலவிடுகிறார்கள்.

முல்லா நஸ்ருத்தீன் ஒருமுறை ஈக்களை அடித்துக் கொன்று கொண்டிருந்தார். திடீரென அவர், "இரண்டு ஆண் ஈக்களையும், இரண்டு பெண் ஈக்களையும் கொன்றுவிட்டேன்," என்று கூவினார். அதைக் கேட்டு மனைவி, "அதெப்படி ஆண் ஈ-பெண் ஈ என்று பிரித்துக் கண்டுபிடித்துச் சொல்கிறீர்கள்?" என்று விசாரித்தாள்.

"ஆண் ஈக்கள் என்று நான் கூறியவை செய்தித்தாளின்மீது உட்கார்ந்திருந்தன. நான் பெண் ஈக்கள் என்று கண்டுபிடித்தவை கண்ணாடியின் மேல் உட்கார்ந்திருந்தன. இந்தப் பெண் ஈக்கள் ஒரு மணி நேரமாகக் கண்ணாடியைவிட்டு நகரவில்லை!" என்று நஸ்ருத்தீன் விளக்கினார்.

ராபர்ட் ரிப்ளே என்பவர் அமெரிக்காவில் புகழ்பெற்றவர். அவர் புகழ் பெறுவதற்காகத் தனது தலையின் பாதி பாகத்தை, வகிடை இரண்டாகப் பிரித்து ஒரு பாகத்தை, முழுமையாகச் சவரம் செய்துகொண்டார்! மூன்றே நாள்களில் அவரது பெயர் நாடெங்கும் பரவியது. செய்தித்தாள்களில் அரை மொட்டையாக அவரது படமும் வெளிவந்தது. நிருபர்கள் அவரிடம் அரை மொட்டையடித்ததன் ரகசியமென்ன என்று விசாரித்தார்கள்.

அதற்கு அவர், "ரகசியம் ஒன்றுமில்லை. மிகக் குறுகிய காலத்தில், மிகவும் எளிய முறையில் நாடு முழுவதும் என் பெயரும் படமும் பரவ வேண்டுமென விரும்பினேன். அதற்காகவே இப்படிக் குறுக்கு வழி கண்டுபிடித்தேன். இப்போது

அமெரிக்காவில் என் பெயர் கேள்விப்பட்டிராதவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள்,'' என்றார்.

உண்மைதான். துறவியான எனக்கும் (ஓஷோவுக்கும்) இந்த மனிதர் பெயர் தெரிந்திருக்கிறது அல்லவா? இவர் வேறு எந்த சாதனையும் செய்ததில்லை. மக்களின் கவனத்தைக் கவர சிலர் அறிவுபூர்வமாகத் திட்டமிட்டும், சிலர் கோமாளித்தனமாகவும் என்னென்னவோ செய்கிறார்கள்.

ஒருவர் தன் உடலுக்கு முன்னால் ஒருபெரிய கண்ணாடியைக் கட்டிக்கொண்டார். அதில் பார்த்துப் பார்த்து, பின்புறமாகவே நடந்து அமெரிக்கா முழுவதும் பயணம் செய்தார்.

இன்னொருவர் நிருபர்களை அழைத்து, தான் இறந்து விட்டதாகச் செய்தி வெளியிடுமாறு கேட்டுக்கொண்டார். நிருபர்கள் ஆச்சரியப்பட்டபோது அவர், "நான் ஏற்கெனவே நோயாளி. டாக்டர்கள் நான் 24 மணி நேரம்தான் உயிருடன் என்று அறிவித்துள்ளனர். நான் இறந்தால் எந்தச் செய்தித்தாள் அதை எப்படிச் சொல்கிறது; சமூகத்திலுள்ள பிரபலங்களில் யார் எனக்கு எப்படி அஞ்சலி செலுத்துகிறார்கள்; என்னை யாராவது நிந்திக்கிறார்களா; எந்தச் செய்தித்தாளாவது என்னைப் பற்றி தலையங்கம் எழுதுமா என்றெல்லாம் அறிய ஆவலாக உள்ளேன்,'' என்றார்.

நிருபர்களும் வேடிக்கைக்காக அவர் இறந்துவிட்டதாக அறிவித்தனர். இது பற்றிய செய்திகளைப் படித்துக் கொண் டிருக்கும்போதே அந்த மனிதர் உண்மையிலேயே இறந்து விட்டார்! செய்தித்தாள்கள் புதிய செய்தியாக, 'நேற்று இறந்ததாக வருத்தத்துடன் அறிவிக்கப்பட்ட திரு.... இன்றுதான், தனது மரணச் செய்தியைப் படித்தபின்தான், இறந்தார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்' என்று வெளியிட்டன.

ஆங்கில நாடகாசிரியர் பெர்னார்டு ஷாவிற்கு இலக்கியத் திற்கான நோபல் பரிசு (1925) அறிவிக்கப்பட்டது. அச்செய்தி உலகமெங்கும் பரவியது. ஆனால் ஷா அதை ஏற்க மறுத்து விட்டார். செய்தித்தாள்களில் இச்செய்தியும் வந்து பரபரப்பை

ஏற்படுத்தியது. உலகில் முதல் முறையாக நோபல் பரிசை ஏற்க மறுத்த சம்பவம் இதுதான் என்று பத்திரிகைகள் கூறின.

ஷா ஓர் அறிக்கையில், 'எனக்கு 70 வயதாகி விட்டதால் இந்தப் பரிசு கிடைத்ததில் எனக்கு மகிழ்ச்சியில்லை. இளமையில் கிடைத்திருந்தால் அதை அனுபவித்திருப்பேன். வாழ்க்கையில் பரிசுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் கட்டத்தை நான் கடந்துவிட்டேன். இளைஞர்களுக்கே பரிசு கொடுங்கள்' என்று தெரிவித்தார். செய்தித்தாள்கள் இதை வெளியிட்டு அவரைப் பாராட்டின.

பிறகு புதிய செய்தியொன்று கிளம்பியது. இது நோபல் பரிசை வழங்கும் சுவீடன் நாட்டு அரசரை அவமதிப்பதாகும் என்றும், இச்செயல் இங்கிலாந்திற்கும் சுவீடனுக்குமான அரசியல் உறவைப் பாதிக்கும் என்றும் ஒரு கருத்துப் பரவியது. ஆகவே இங்கிலாந்து மன்னரும் ஆங்கிலேயே அரசியல் தலைவர்களும் நோபல் பரிசை ஏற்குமாறு ஷாவை வற்புறுத்தினர். பரிசை ஏற்றுக்கொண்டபின் அதை தானமாகக் கொடுத்துவிடலாம் என்று ஆலோசனை கூறினர்.

வேறு வழியின்றி ஷா பரிசை ஏற்க சம்மதம் தெரிவித்தார். இந்தச் செய்தியும் உலகெங்கும் பரவியது. அவருக்குத் தரப்பட்ட ஆலோசனைப்படி அவர் பரிசைப் பெற்றுக்கொண்டபின் விரைவிலேயே மொத்தத் தொகையையும் (அக்காலத்து பத்து லட்சம் ரூபாய்) ஒரு நிறுவனத்திற்கு நன்கொடையாக அளித்துவிட்டார். செய்தித்தாள்கள் அவரைக் கொடைவள்ளல் என்று பாராட்டின. பிறகுதான் ஒரு விஷயம் தெரியவந்தது. அந்த நிறுவனம் ஷா நடத்திவந்த நிறுவனம்தான்!

ஒரு வழியாக இந்தக் கூத்து முடிவுக்கு வந்தது. ஒரு பேட்டியில் நிருபர்கள், "ஏன் இப்படியெல்லாம் செய்தீர்கள்?" என்று கேட்டனர். அதற்கு அவர், "நான் பரிசு அறிவிக்கப் பட்டதுமே சம்மதம் தெரிவித்திருந்தால் அது ஒருநாள் செய்தியாக முடிந்திருக்கும். இப்படியெல்லாம் நான் செய்ததால் போன பத்து நாள்களாக என் பெயரேதான் செய்தித்தாள்களில் முக்கியத்துவம்

பெற்றது.'' என்றார். இந்தப் பேட்டிச் செய்தியும் உலகெங்கும் பரவியது!

சுற்றிலுமுள்ள சமூகம் தன்னைக் கவனிக்க வேண்டும் என்று ஒவ்வொருவனும் ஏங்குகிறான். இதற்காகச் சிலர் பைத்தியம் பிடித்தவர்களாக மாறவும் தயாராக உள்ளனர். ஜென் சம்பிரதாயக் கண்ணோட்டப்படி இவர்களைக் கண்டுகொள்ளாமல் மூன்று வாரம் அலட்சியம் செய்தால் போதும். உண்மையிலேயே மனக்கோளாறு உள்ளவர்களைத் தவிர, மற்றவர்களின் கவனத்தை இழுப்பதற்காக 'நார்மல்' நிலையிலிருந்து விலகுபவர்கள் தங்களை யாரும் கவனிக்காவிடில், தங்களைப் பற்றி யாரும் ஆர்வம் காட்டாவிடில், விரைவில் சாதாரண நிலைக்குத் திரும்பிவிடுவார்கள்.

குழந்தைகள் முதல் முறை காய்ச்சல் சமயம் தந்தை கட்டிலருகே உட்கார்ந்திருப்பதையும், தாயார் தலை-உடம்பைப் பிடித்துவிடுவதையும் கவனிக்கின்றனர். சுரம் குணமானதும் பெற்றோர் குழந்தைகளைத் தொடுவதுகூட இல்லை. இந்த வித்தியாசம் குழந்தைகளின் மனத்தில் பதிகிறது. பெற்றோர் தங்களைக் கவனிக்க வேண்டுமானால் தாங்கள் பொய்யாகவாவது நோய்வாய்ப்பட வேண்டும் என்று குழந்தைகள் புரிந்து கொள் கிறார்கள். ஆகவே அடிக்கடி அவர்கள் தலைவலி, வயிற்றுவலி போன்ற பரிசோதனைக்கு உட்படாத வலிகள் வந்ததாகக் கூறிப் பெற்றோரின் கவனத்தைப் பெறுகின்றனர். நன்கு வளர்ந்த பிறகும் கணவன்-மனைவியிடமும் இப்போக்கைக் காணலாம். நோய் சிறிதளவே இருந்தாலும் தாங்கள் கவனிக்கப்பட வேண்டும் என்பதற்காகக் கணவர்-மனைவி உடல்வலியை மிகைப்படுத்திக் கூறுவதுண்டு.

மனைவி வீட்டில் ரேடியோவில் பாட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிறாள். தனக்கு ஸ்வெட்டரும் பின்னியபடி இருக்கிறாள். வாசலில் கணவனின் ஸ்கூட்டர் வந்து நிற்கும் சத்தம் கேட்டதுமே, அவள் ரேடியோவை மூடிவிட்டு, ஸ்வெட்டரை மூலையில் வைத்துவிட்டுப் படுக்கையில் படுத்துவிடுகிறாள். கணவன் உள்ளே வந்ததும் அவள் தலைவலி என்கிறாள். கணவன் அப்போதுதான் தன்னிடம் அனுதாபம் காட்டித் தலையைப்

பிடித்துவிடுவான் என்று மனைவிக்குத் தெரியும். இல்லாவிடில் கணவன் அவளைத் திரும்பியும் பாராமல் உள்ளே உடைமாற்றிக் கொள்ளச் செல்வான். திருமணமான புதிதில் கவனம் இயற்கை யாகவே இருக்கும். நடுத்தர வயதைத் தொடும்போது தம்பதிகளி டையே வேலைப்பளு காரணமாக நெருக்கம் குறைவதால், ஒருவர் மற்றவரது கவனத்தைக் கவர இப்படி நடிக்கிறார்கள். இது பழக்கமாகிவிட்டால் அவர்கள் சாதாரண வலியையும் மிகைப்படுத்தி மீண்டும் கவனத்தை ஈர்க்கிறார்கள்.

பெற்றோர் கவலைப்படுவது தனது நோய்க்காக அல்ல, தனது ஆரோக்கியத்திற்காக என்பதைக் குழந்தைகள் புரிந்து கொண்டால், நோய் வந்ததுபோல் போலியாக நடிக்க மாட்டார்கள். கணவன் தன்னிடம் அனுதாபம் காட்டுவது நோய் நீடிப்பதற்காக அல்ல என்றும், முன்புபோல் எழுந்து நடமாட என்றும் புரிந்துகொள்ள வேண்டும். அவள் போலியான அல்லது நிஜமான நோயை பிறரைத் தன் வழிக்குக் கொண்டுவரும் ஆயுதமாகப் பயன்படுத்தக்கூடாது. நோயை வெறுப்பதுபோல் காண்பித்து, உண்மையில் அதை ரசித்து ஆயுதமாகப் பயன்படுத்தினால, நோயாளி மனப்பான்மை நிரந்தரமாகிவிடும்; நோயும் அதிகரிக்கத் தொடங்கும்.

மனத்தில் தோன்றியபடி இருக்கும் எண்ணங்களில் நீ அதிகம் கவனம் செலுத்தினால், அவை உயிர்பெற்றுவிடும், வலுவடைந்துவிடும். வீட்டில் குழந்தைகள் அமைதியாக உட்கார்ந்து பாடம் படிக்கிறார்கள். நீ அவர்களிடம் சென்று ஒரு விருந்தாளி வரப்போவதால் எல்லோரும் அமைதியாக இருக்க வேண்டும் என்று சொல்லிப்பார். விருந்தாளி வந்ததுமே குழந்தைகள் எழுந்து ஆட்டம் போடுவார்கள். அவர் சாப்பிட என்ன கொண்டு வந்திருக்கிறார் என்று ஆராய்வார்கள். ஒரு குழந்தை பெற்றோரிடம் பசிக்கிறது என்று கூறும். இன்னொரு குழந்தை தலைவலி என்று அழும். இதென்ன திடீர் மாறுதல் என்று ஆச்சரியப்படுவாய். இந்த மாறுதலுக்கு காரணம் உண்டு. உன் கவனம் அவர்களிடமிருந்து விலகி விருந்தாளிக்குப் போய்விட்டதை அவர்கள் ரசிக்கவில்லை.

எதன்மீது நீ கவனம் செலுத்துகிறாயோ அது வலுப் பெறுகிறது. உன் கவனம் விலகினால் அது வலுவிழக்கிறது.

நான் உன்னை ஆத்மபரிசோதனை செய்துகொள்ளச் சொல்லவில்லை. ஆத்ம விழிப்புப் பெறச் சொல்கிறேன். எண்ணங்களின் மீது கவனம் செலுத்தாதே. இதனால் பாதிப்பு உண்டாகும். நீ காமம் பற்றி அதிகம் ஆராய்ந்தால், நீயே ஒரு காமுகனாகிவிடுவாய்; நீ கோபம் பற்றிய பரிசோதனையில் அதிகம் ஈடுபட்டால், நீயே ஒரு முன்கோபியாகிவிடுவாய். ஆனால் நீ எண்ணங்களுக்கு மதிப்புத் தராவிட்டால் அவை படிப்படியாக நீங்கிவிடும்.

ஒரு பொதுக்கூட்டத்தில் அரசியல்வாதி ஒருவர் சொற்பொழிவு நிகழ்த்தினார். நீண்ட நேரம் அவர் பேசியதால், மக்கள் ஒவ்வொருவராகக் கலைந்து சென்றுவிட்டனர். முல்லா நஸ்ருத்தீன் மட்டுமே பொறுமையாக உட்கார்ந்திருந்தார். அப்படியும் அந்த அரசியல்வாதி தான் சொல்ல விரும்பியதை எல்லாம் கூறி முடித்தபிறகே அவர் மேடையைவிட்டு இறங்கினார்.

அவர் நஸ்ருத்தீனிடம் சென்று கைகுலுக்கி, "நன்றி, நஸ்ருத்தீன். உனக்கு என்னை இந்த அளவிற்குப் பிடிக்கும் என்றோ, என் பேச்சை இந்த அளவிற்கு ரசித்துக் கேட்பாய் என்றோ இதுவரை நான் யோசித்ததில்லை. இதே ஊரில் வாழ்ந்தும் நான் உன்னை இதுவரை பொருட்படுத்தாமலிருந்தது தவறுதான்," என்று நெகிழ்ந்து கூறினார்.

அதற்கு நஸ்ருத்தீன், "ஐயா, உளறாதீங்க. உங்களுக்கு அடுத்தபடியாக நான் பேச வேண்டும். அதனாலதான் உட்கார்ந் திருக்கேன்," என்றார்.

தலைவருக்குப் புரியவில்லை. "எனக்கப்புறம் நீ எப்படிப் பேச முடியும்?" என்று கேட்டார்.

"ஏன் முடியாது? நான்தான் கூட்ட முடிவில நன்றி சொல்றவன். அற்புதமாகச் சொற்பொழிவாற்றிய உங்களுக்கும், இங்கு கடல்போல திரண்டுள்ள மக்களுக்கும் நான் தெரிவித்துப்

பேசிய பிறகுதான் வீட்டுக்குப் போகமுடியும். ஆகவே நன்றி கூறி முடிக்கும்வரை நீங்கள் உட்கார்ந்து கேட்டாக வேண்டும்," என்று விளக்கினார் நஸ்ருத்தீன்.

சொற்பொழிவின் பாதியிலேயே எல்லோரும் எழுந்து சென்றுவிட்டால், பிறகு அந்தப் பேச்சினால் பயனில்லை. மனத்தில் கொந்தளிக்கும் எண்ணங்களைக் கலைந்து போகவிடு. மைதானம் காலியாகிவிட்டால், மனம் வெற்றிடமாகிவிட்டால், நீ உன் ஆத்மாவை உணருவாய்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் பிராமணன். அதனால்தானோ என்னவோ என்னால் சமர்ப்பண உணர்வை வரவழைத்துக் கொள்ள முடியவில்லை. எனக்கு வளைந்து கொடுக்கும் பழக்கம் இருந்ததில்லை. இது என் ஆன்மிக முன்னேற்றத்துக்குத் தடையாக உள்ளது. இதைப் போக்க நீங்கள் ஏதாவது செய்ய இயலுமா?**

மரணம் நீ பிராமணனா, வேறு ஜாதிக்காரனா, இந்துவா, முஸ்லீமா, ஏழையா, செல்வந்தனா, சுருக்கமாக நீ யார் என்றே அக்கறை கொள்ளாது. சாவின் முன்னிலையில் சகலரும் சமம். மரணத்தை நினைவில் கொண்டால் நீ பிராமணன் என்பதை மறந்து போவாய்.

**என்னைப் புதைக்கும்போது
இவரை இப்போதுதான் நீராட்டியதால்
இவர் மேல் மண்ணை எறியாதீர்
என்று எவரும் சொல்லவில்லை**

புதைக்கும் முன் சவத்தைக் குளிப்பாட்டுவது வழக்கம். அதனாலென்ன தயக்கம்? மிகவும் தூய்மையான உடலும்கூட கல்லறையில் அழுகத்தான் போகிறது.

நீ பிராமணன், தூய்மையாக இருப்பவன், உயர்ந்த குலத்தவன் என்பதெல்லாம் சாவின் முன் செல்லுபடியாகாது. அந்தக் கண்ணோட்டம் உன் அகங்காரத்தின் விளைவாகும்.

இந்திய சமூகத்தில் ஒரு விசித்திரத்தைக் காணலாம். சமூகத்தில் நிலவும் நால்வகை வருணங்களுக்கும் (சாதிமுறை) அப்பாற்பட்ட நிலையில்தான் சந்நியாசி வைத்தெண்ணப்படுகிறான். துறவறம் பூண்டதும் அவன் தனது சாதியில் நீடிப்பதில்லை. பிராமணனும் துறவியானால் தன்னைத் துறவிகளுள் உயர்ந்த வனாக கருத முடியாது. தன்னை பிராமணன் என்று மறக்காத துறவி ஒருபோதும் பிரம்மத்தை உணர முடியாது.

உபநிஷதத்திலுள்ள ஒரு வர்ணனையில் உத்தாலகர் தன் மகன் சுவேதகேதுவிடம், "நீ பிறப்பினால் மட்டும் பிராமணன் என்று அழைக்கப்படுபவனாக இருந்துவிடக் கூடாது. நமது குடும்பத்தில் எவரும் அத்துடன் நிறுத்திக் கொண்டது இல்லை. எல்லோரும் பிரம்மத்தை அறிந்த பிறகுதான் பிராமண நிலைக்குத் தங்களை உயர்த்திக் கொண்டனர்" என்பதை நினைவூட்டினார்.

இது உண்மைதான். பிராமணப் பெற்றோருக்குப் பிறந்ததால் மட்டுமே ஒருவன் தன்னை பிராமணன் என்று கூறிக்கொள்ள அதுபோதும் என்று நினைக்கக் கூடாது. அத்தகைய பிராமணத் துவம் மலிவானது, தற்செயலானது. ஒரு தவற்றின் காரணமாக மருத்துவமனையில் பிராமணக் குழந்தையும் வேறு சாதிக் குழந்தையும் இடம் மாற்றி வைக்கப்பட்டால், மாறிப்போன பெற்றோர்களின் சாதியினராகத்தான் அக்குழந்தைகள் எண்ணப் படுவார்கள்.

**வி**சுவாமித்திர முனிவர் பிறப்பால் க்ஷத்திரியர். அவர் தன்னை பிரம்மரிஷி என்று எல்லோரும் அழைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் வசிஷ்டர் அவரை பிரம்மரிஷி என்று அறிவித்து ஒப்புக்கொண்டால்தான் மற்றவர்களும் அதை ஏற்பார்கள். வசிஷ்டரோ அவரை ராஜரிஷி என்று மட்டுமே அழைத்து வந்தார்.

விசுவாமித்திரரின் கோபம் வளர்ந்தது. ஓர் இரவு அவர் கையில் வாளுடன் வசிஷ்டரின் ஆசிரமத்திற்குச் சென்றார். வசிஷ்டர் அவரை பிரம்மரிஷி என்று உடனடியாக ஏற்காவிடில் அவரது கழுத்தை வெட்டிவிட விசுவாமித்திரர் முடிவெடுத்தார்! பிறப்பால் க்ஷத்திரியர் என்பதால் எதற்கும் வாள் மூலம் தீர்வு காணும் புத்தி அவரைவிட்டு நீங்கவில்லை.

வசிஷ்டர் சீடர்களுக்கு உபதேசித்துக்கொண்டிருந்தார். அருகே ஒரு புதரின் பின்னால் விசுவாமித்திரர் மறைந்திருந்து கவனித்தார். ஒரு சீடன் "விசுவாமித்திரர் பிரம்மரிஷி ஆக கடுமையாக முயல்கிறார். இது தங்கள் கையில் உள்ளது. அவரை பிரம்மரிஷி என்றழைக்க ஏன் தயக்கம்? ஏன் அவரை வேதனைக்குள்ளாக்குகிறீர்கள்?" என்று வினவினார்.

அதற்கு வசிஷ்டர், "விசுவாமித்திரர் அபூர்வமான மனிதர். ஆற்றல் மிகுந்தவர். அவருக்கு சமம் எவருமில்லை. அவர் நிச்சயமாக பிரம்மரிஷியாக ஆகிவிடுவார். அதை நான் இப்போதே வாயால் சொன்னால், காரியம் கெட்டுவிடும். அவரிடம் க்ஷத்திரியத் திமிர் சிறிய அளவில் இன்னமும் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அவருக்கு இன்னமும் வாளின் மீது நம்பிக்கையுள்ளது. அது நீங்கினால், நான் உடனே அவரை பிரம்மரிஷி என்று அழைப்பேன். அதற்கு அவர் பொருத்த மானவர்தாம். அப்படித்தான் அவர் ஆகப்போகிறார். இது உறுதி. சரியான வேளை வருவதற்காகக் காத்திருக்கிறேன். கடைசி நிமிடத்தில் ஏதேனும் வரக்கூடாதென்பதற்காக நான் அமைதியாக இருக்கிறேன். நான் அவருக்கு விரோதியில்லை," என்று முடித்தார்.

புதரில் மறைந்திருந்த விசுவாமித்திரரால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. வசிஷ்டருக்குத் தன் மீது இவ்வளவு அன்பா என்று அவர் வியந்தார். புதரிலேயே வாளைப் போட்டுவிட்டு, ஓடிச்சென்று, வசிஷ்டரின் கால் தொட்டு வணங்கினார். வசிஷ்டர் அவரைத் தூக்கி, "பிரம்மரிஷியே, எழுந்திரும்," என்றழைக்கிறார்.

விசுவாமித்திரர், "நான் அப்படி அழைக்கப்படத் தகுதி யற்றவன். நான் இங்கே எதற்காக வந்தேன் என்று உங்களுக்குத் தெரியாது," என்று குற்றவுணர்வுடன் கூறினார்.

வசிஷ்டர் சமாதானப்படுத்தினார். "நீங்கள் எந்த நோக்கத்துடன் வந்திருந்தாலும் அதைப் பற்றிய கவலையை விடுங்கள். நீங்கள் க்ஷத்திரியன் உணர்வு கொண்டிருக்கும்வரை குனிந்து எவர் காலையும் தொடமாட்டீர்கள் என்று தெரியும். என் காலைத் தொட்டதும் உங்கள் திமிர் நீங்கிவிட்டதை உணர்ந்தேன்.

அதன்பின் உங்களை பிரம்மரிஷி என்றழைப்பதில் தடையேதும் இருக்கவில்லை,'' என்றார்.

கேள்வி கேட்டவர் தான் பிராமணர் என்றும், சமர்ப்பண உணர்வு வரவில்லை என்று கூறினார். பிறப்பினாலும் சாதியினாலும் மட்டுமின்றி ஒருவன் உண்மையான பிராமண னாயிருந்தான் அவன் அடக்கமாக இருப்பான். மற்றவர்களுக்கு மரியாதை காட்டி வளைந்து கொடுப்பான். சமர்ப்பணமாவது அவனது சுபாவமாக இருக்கும். அவனிடம் சிறிதளவும் திமிர் இருக்காது. திமிர் இருந்தால் நீ சாதியினால் மட்டும் பிராமணன் என்று அர்த்தம். ஆனால் சாதியால் மட்டும் பிராமணனா யிருப்பதில் என்ன பெருமை? உன் ஆளுமையில் உண்மையான பிராமணத்துவம் இருக்க வேண்டும்.

நீ சாதியில் பிராமணன் என்னும் உயர்வு மனப்பான்மையை சாவு எப்படியும் பறித்துக்கொண்டுவிடும். நீ அதற்கு முன்பாக உன் உயர்வு மனப்பான்மையைக் கைவிடுவது நலம். நீ உண்மையான பிராமணனாயின், அதாவது, நீ பிரம்மத்தை அறிந்தவனா யிருந்தால், உனக்குச் சாவு கிடையாது. உடல் இறக்கும்; மனம் இறக்கும்; நீ இறக்கமாட்டாய். நீ பிரம்மத்தில் கலந்து நிரந்தர வாழ்வு பெற்றிடுவாய்.

சாவு எதைப் பிடுங்குமோ அதை நீ விரும்பியே, முன்கூட்டியே கொடுத்துவிடு. எது உன்னைவிட்டு நீங்கத்தான் வேண்டுமோ, அதை நீயாகவே போகவிடுவது சிறந்தது. ஒன்றைக் கொடுத்துத்தான் ஆகவேண்டுமாயின் அதை தானமாகக் கொடுத்து விடுவது சிறந்தது. சாவு பிடுங்காததை, பிடுங்க முடியாததை மட்டும் காப்பாற்றிக் கொள்வதே பொருத்தமானதாகும்.

தங்கத்தை உரைத்துப் பார்க்கும் கல்லைப்போல் நீ சாவை உரைகல்லாகக் கொள். சாவு உன்னிடமிருந்து பிடுங்க முடியாதது பாதுகாக்கத் தக்கது. அது எதைப் பிடுங்க முடியுமோ அது முன்கூட்டியே கைவிடத் தக்கது. கடைசியில் நீ துறவு நிலை, தியானம், சாட்சி மனப்பான்மை இவை மூன்றுதான் சாவால் பாதிக்கப்படாதவை என்று தெரிந்து கொள்வாய்.

நீ உன்னை உடலுடனும் மனத்துடனும் இணைத்துப் பார்க்கும் வழக்கம் உள்ளவனாயின் நீ முழுமையாக இறந்து போனதாக அந்த சமயம் உணர்வாய். நீ உடலையும் மனத்தையும் கடந்து சாட்சிபோல் பார்ப்பவனாயின், மூச்சு நின்றுபோனாலும், உனக்குள்ளே மறைந்திருந்த ஒன்று சாவினால் சேதப்படாமல் விடுதலை பெற்றதுபோல் தோன்றும். இந்த நிலையில் சாவு மோட்சமாக வந்துநிற்கிறது.

சாவைப் புரிந்துகொள்ள சந்நியாசம் உதவுகிறது. சந்நியாசம் (ஸம்யக் ந்யாஸ்) என்பதற்கு சரியான முறையிலான தியாகம் என்று பொருள். சாவு பிடுங்கிக்கொள்ளக் கூடியவற்றை தியாகம் செய்தல் சந்நியாசம் ஆகும். சாவு எதையெல்லாம் பிடுங்கிக் கொள்ளும் என்று பட்டியல் தயாரி. அது ஏறத்தாழ உன்னிடமுள்ள எல்லாவற்றையுமே அபகரித்துவிடும். ஆத்மா மட்டுமே மிஞ்சும். சாவு என்பது நீ உனது சொந்த வீட்டுக்கு வருதலாகும்.

சந்நியாசம் என்பது உரிய காலத்திற்கு முன்பே, தானே விரும்பியே, மரணத்தைத் தழுவியதுபோன்ற நிலையாகும். எனவே முற்காலத்தில், துறவறச் சடங்கின்போது தலையை மழித்துவிடுவர். நீராட்டி வேறு ஆடை மாற்றுவர். பெயரை நீக்குவர். ஓர் அடையாளமாகச் சிதையில் படுக்கச் சொல்வர். அதன்பின் அவன் எழுந்து ஊர் பக்கம் திரும்பிப் பார்க்காமல் வேறு திசையில் சென்றுவிடுவான்.

பிராமணர்கள் ஏதோ சில சாஸ்திர நூல்களைப் படித்துவிட்டு எல்லாம் அறிந்தவர்போல் காட்டிக்கொள்கிறார்கள். எனக்கு ஒரு நண்பர். குடும்பப் பெயர் திரிவேதி (மூன்று வேதம் அறிந்தவர்). அவரது கடிதத்திற்கு நான் பதில் எழுதுகையில் துவேதி (த்விவேதி என்றால் இரு வேதம் அறிந்தவர்) என்று மறந்துபோய் குறிப்பிட்டுவிட்டேன். அவருக்குக் கோபம் வந்துவிட்டது. அவர் தமது கடிதத்தில் 'ஒரு வேதத்தை ஏன் குறைத்தீர்கள்?' என்று கண்டித்திருந்தார். நான் பதிலில் சதுர்வேதி (நாலு வேதமும் அறிந்தவர்) என்று அழைத்திருந்தேன். 'ஏன் அப்படித் தப்பாக எழுதினீர்கள்?' என்று கடிதம் போட்டார். சென்ற முறை தவறுதலாகக் குறைத்துவிட்ட ஒரு வேதத்தை இப்போது

சேர்த்துள்ளேன்' என்று பதிலெழுதினேன். உண்மையில் அவர் மற்ற பெரும்பான்மையான பிராமணர்களைப்போல ஒரு வேதமும் அறிந்திருக்கவில்லை.

தனக்கு எல்லாம் தெரியும் என்பது பிராமணர்களிடம் பரவலாகக் காணப்படும் உளவியல் உண்மை (psychology). ஆனால் சாஸ்திரங்களும் மந்திரங்களும் ஞானமாகாது. அவற்றை மறந்தபிறகே ஞானம் தோன்றுகிறது. வேதங்கள், கீதை முதலிய புனித நூல்களும் விடை பெற்றுக்கொண்ட பிறகு மவுனம், எண்ணங்களின்மை, சொற்களின்மை மிஞ்சியிருக்கும் நிலையே ஞானம். நீ சேகரித்த தகவல்களின் வழியான அறிவும் நீங்கிய நிலையே ஞானம்.

மோஸார்ட்* என்பவர் ஐரோப்பிய சங்கீத மேதை. அவரிடம் இசை கற்க வருபவர்களிடம், "இதற்குமுன் சங்கீதம் கற்றுக்கொண்டது உண்டா?" என்று கேட்பார். 'ஆம்' என்றால், இரண்டு மடங்குக் கட்டணம் வசூலிப்பார். 'இல்லை' என்றால் பாதிக் கட்டணம்தான். இதைப் பற்றி அவரைக் கேட்டபோது, "ஏற்கெனவே இசைப் பயிற்சி செய்பவர்கள் அந்த இசையை மறப்பதற்காக நான் கடுமையாக உழைக்க வேண்டியுள்ளது. ஆகவே கூடுதல் கட்டணம். எதுவுமே தெரியாமல் எழுதாத சிலேட்டுப் பலகைபோல் வருபவர்களுக்குக் கற்பிப்பது சுலபம். ஆகவே அவர்கள் பாதிக் கட்டணம் செலுத்தினால் போதும்," என்று விளக்கினார்.

என்னிடம் சீடராக வேண்டுமென்று வருபவர்களிடமும் இதே பிரச்சினைய்யைச் சந்தித்திருக்கிறேன். ஆன்மிகம் பற்றி எதுவும் அறியாதவர்கள் தியானப் பயிற்சியில் விரைவில் முன்னேற்றம் காண்கிறார்கள். ஏற்கெனவே சாஸ்திரங்கள், சித்தாந்தங்கள், கொள்கைகள் அறிந்தபின் என்னிடம் வருபவர்களுக்கு அவர்கள் பெற்றிருக்கும் அறிவே முட்டுக்கட்டையாகி விடுகிறது. நான் கூறும் அறிவுரைகளுக்கு அவர்கள் பழைய சாஸ்திர அறிவின் அடிப்படையில் அர்த்தம் செய்து கொள்

* Mozart (1756-1791) ஆஸ்திரிய இசை நிபுணர். ஐந்து வயதிலேயே பாடல் புனைந்து, இசையமைத்து, மேடையேறியவர். தமது 35ஆம் வயதிலேயே காலமானார்.

கின்றனர். என்னுடைய சொற்பொழிவுகளை மொழிபெயர்ப் பவர்கள் தங்களது பின்னணி, எதிரிலுள்ள சூழ்நிலைக்கேற்ப அர்த்தம் கூறுகின்றனர்.

அப்படி ஒரு சம்பவம் ராஜா மகேந்திர பிரதாப் என்பவரின் வாழ்வில் நடந்தது. இதை அவரது வாழ்க்கை வரலாற்றில் படித்தேன். அவர் பல நாடுகளுக்குச் சென்று சொற்பொழிவு செய்தவர். அவர் ரஷ்யாவில் ஒருமுறை பிரசங்கம் செய்தபோது அவரது பேச்சு மொழிபெயர்க்கப்பட்டது. இடையிடையே மக்கள் கைதட்டி ஆரவாரம் செய்தனர். குறிப்பாக அவர் 'மதத்தின் உதவியின்றி மனிதன் உயிர்வாழ முடியாது. மனிதனுக்கு மதம் கட்டாயமாகத் தேவை' என்பது போன்ற கருத்துகளைச் சொன்னபோது மக்கள் கரவொலி எழுப்பினர். 'ரஷியாவில் மதம் வெறுக்கப்படும் விஷயமாயிற்றே. அதற்கு ஏன் இவ்வளவு வரவேற்பு? என்று குழம்பிய அவர் மொழிபெயர்ப்பாளரை விளக்கம் கேட்டார்.

மொழிபெயர்ப்பாளர் விளக்கினார்: "எங்களுக்கு மேலிடத்திலிருந்து ஓர் உத்தரவு கிடைத்துள்ளது. இந்தியாவிலிருந்து வருபவர்கள் மதம் பற்றி கட்டாயம் பேசுவார்கள். அவர்கள் மதம் என்று சொல்லும்போதெல்லாம் அதை கம்யூனிசம் என்று மொழிபெயர்க்க வேண்டும் என்று உத்தரவாகியுள்ளது. ஆகவே நான் 'கம்யூனிசத்தின் உதவியின்றி மனிதன் உயிர்வாழ முடியாது. மனிதனுக்கு கம்யூனிசம் கட்டாயம் தேவை' என்று மொழிபெயர்த்தேன். இதனால்தான மக்கள் கைதட்டினார்கள்."

நான் பேசும்போதும் அம்மொழியை நீ அறிந்திருந்தும் உன் மனம் தன் இஷ்டப்படி அர்த்தம் எடுத்துக்கொள்கிறது. நம் இருவருக்கும் இடையில் உன் மனம் உட்கார்ந்திருக்கிறது. அது தான் ஏற்கெனவே படித்ததுடன் என் கருத்து ஒத்துப்போகிறதா என்று பார்க்கிறது. ஒத்துப்போனால் அதைச் சரியென்று ஏற்கிறது. உன் தலை அசைந்து ஆமோதிக்கிறது.

என் பேச்சைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமானால், நீ உன் மனத்தை ஒதுக்கிவைத்துவிட்டுப் பேச்சைக் கேள். பிராமணர்கள் வேதம், ராமாயணம், பகவத்கீதை முதலியவை

படித்து விசாலமான அறிவைப் பெறுகிறார்கள். இத்தகைய அறிவே என் பேச்சைப் புரிந்துகொள்வதிலும், சத்தியத்தைத் தேடுவதிலும் தடையாக அமைகிறது.

கேள்வி கேட்டவர் சமர்ப்பண உணர்வை, வளைந்து கொடுக்கும் உணர்வை வளர்த்துக் கொள்வது எப்படி என்று கேட்டுள்ளார். சிறிது-சிறிதாக முயன்று பணிவை வளர்த்துக் கொள்ள முடியும். முதலில் நீந்தத் தெரியாதவன் ஆழமற்ற நீர்நிலையில் பயிலத் தொடங்கி, கொஞ்சம் கொஞ்சமாக ஆழமான ஆறுகளிலும் நீந்தும் திறமை பெறுகிறான்.

நம் நாட்டில் பணிவை வளர்ப்பதற்கென்றே சில வழக்கங்கள் உள்ளன. மகன் தந்தை தாயின் காலைத் தொட்டு வணங்குகிறான். மாணவன் குனிந்து குருவின் காலைத் தொடுகிறான். அவர் பள்ளிக்கூட ஆசிரியராகக்கூட இருக்கலாம். இந்தப் பயிற்சி யெல்லாம் உனக்குப் பிற்காலத்தில் உதவும். உனக்குப் பொருத்த மான ஆன்மிக வழிகாட்டியை நீ அடையாளம் காணும்போது, உன் தலை தானாகவே கவிழ்ந்து, கைகள் அவருடைய பாதங்களைத் தீண்டி வணங்கும்.

எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் வளைந்து வணங்கு. பயிற்சிக்காக, ஆரம்பத்தில் மரத்தை வணங்கு, நதியை வணங்கு. உன் முதுகெலும்பு வளைந்து பழகட்டும். பிறகு மனிதர்களை வணங்குவது எளிதாகிவிடும். மரத்தையோ, நதியையோ, மனிதர்களையோ நீ வணங்கும்போது உன் மனத்தில் அமைதி பரவும்.

சிலர் என்னிடம், “நாங்கள் வணங்குவது சத்குருவையா அல்லது போலிச் சாமியாரையா என்று எப்படிப் பிரித்தறிவது?” என்று கேட்கிறார்கள். நான் உனக்குச் சொல்வேன், “அந்தக் கவலையை விடுங்கள். இதனால் உனக்கு ஒரு கேடும் வராது. வணங்குவதில், பெரியவர்களுக்கு மரியாதை காட்டுவதில் கிடைக்கும் ஆனந்தத்தை அனுபவி. வணங்குதல்தான் முக்கியமே தவிர, எதை, யாரை என்பது முக்கியமன்று. கோயிலில் உள்ள கற்சிலைகளை மக்கள் வணங்குவது இதனால்தான். சிறப்பு நீ வணங்கியதில்தான் உள்ளதே தவிர, சிலையில் இல்லை.

அப்போது உன் மனத்தில் அகங்காரம் இருக்காது என்பதால் மனம் இலேசாகிவிடும். இதனால் மனத்தில் அமைதி பிறக்கும். பிறகு நீ நேராக நின்றாலும் உள்ளத்திற்குள் நீ பணிவுடன் வளைந்தே இருப்பாய்.

ஆன்மிகத்தில் முன்னேறத் தடையாக இருப்பது உனக்கு உலகின் மீதுள்ள பிடிப்புதான். உலகம் உனக்கு சலிக்கவில்லை. உலகத்தின் சுவை குறையவில்லை. தியானம் செய்ய விரும்பு கிறாய். எண்ணங்களுக்கும் மதிப்புக் கொடுக்கிறாய். மனத்தில் சிரத்தையை (பூரண நம்பிக்கையை) எழுப்ப விரும்புகிறாய். அதே சமயம் தர்க்க புத்தியை, காரண-காரியக் கண்ணோட் டத்தைக் கைவிட நீ தயாரில்லை.

எனினும் நீ அவசரப்படாதே. நீ வாழ்க்கையில் எந்த இடத்தில் உள்ளாயோ அங்கேயே தொடர்ந்து இரு. வாழ்க்கை கசப்பானது என்பது தெரிய சிறிது காலதாமதமாகும். ஒருநாள் வாழ்க்கையின் மீது உன் கைப்பிடி தளர்ந்து விழும்போது சந்நியாசம் கைகூடும். பிறகும் நீ உன் வாழ்க்கையைவிட்டு ஓடவேண்டியதில்லை. புரட்சி உள்முகமானது. அது போதும். நீ இருக்குமிடத்திலேயே இரு. வழக்கம்போலவே இரு. ஆனால் புதிய விழிப்புடன் இரு.

### கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் எப்பொழுதும் உங்களை எதிர்த்து வந்திருக்கிறேன்; உங்கள் அருகிலேயே இருக்கத் தொடங் கியதும் எனக்கு என்ன ஆனதென்று புரியவில்லை. உங்களின் தாக்கத்திலிருந்து இனி தப்ப முடியாது என்று தோன்றுகிறது.**

தொலைவிலிருந்து விரோதியாக இருப்பது சுலபம். பரிச்சயம் ஏற்பட்ட பிறகு எதிரியாக நீடிப்பது கடினம். ஆகவே எதிரி பெரும்பாலும் நெருங்காமலே இருப்பான். அருகில் வந்தால் பகைமை மறைந்துபோய் நட்பு உண்டாகிவிட்டால் ஆபத்தாயிற்றே என்று அவன் நினைப்பான்.

புத்திசாலியான மனிதன் தொலைவிலிருந்து அறிக்கை வெளியிடமாட்டான். சார்பாகவோ, எதிர்ப்பாகவோ கருத்துக் கூறமாட்டான். மற்றவர்கள் சொல்வதை வைத்து முடிவிற்கு வரமாட்டான். அவன் தன் கண்ணாலேயே பார்ப்பான். தன் காதுகளால் கேட்பான். சுயமான அனுபவம் பெறுவான். பிறகுதான் தன் கருத்தை வெளியிடுவான். ஆகவே அவனது கருத்து மதிப்பு வாய்ந்ததாக இருக்கும்.

இந்த வளாகத்தில் நீ எப்படியாவது கடவுளில் ஆழ்ந்துவிட வேண்டும் என்பதற்காக முயற்சி நடைபெறுகிறது. இங்கே நான் புதிய சித்தாந்தம் (ஆன்மிகக் கோட்பாடு) எதுவும் கற்பிப்பதில்லை. இங்கே சத்தியத்தைத் தேடி அடைகிறோம். எனவே மனவுறுதி உள்ளவர்களை மட்டுமே இங்கே நான் அழைக்கிறேன். பலகீனமான மனம் உள்ளவர்களுக்கும், கோழைகளுக்கும் இங்கே இடமில்லை. ஆன்மீகம் என்பதை மேலோட்டமாக எடுத்துக் கொள்வோருக்கும் இங்கே இடமில்லை. ஆன்மிகத்தை உயிரோட்டமுள்ள அழைப்பாகவும், ஒரு சவாலாகவும் கருதுபவர்கள் மட்டுமே இங்கு வருக.

உலகில் சாவு என்பது தினமும் வருகிறது. எல்லோரும் எல்லாமும் போகத்தான் வேண்டும். எவரும் எதுவும் மிஞ்சி யிருக்கப் போவதில்லை. நீ எல்லாவற்றையும் உன்னையும் சாவிடம் ஒப்படைப்பதற்குப் பதிலாகக் கடவுளின் திருவடிகளில் ஒப்படைத்துவிட்டால், அதைவிட பெரிய அதிர்ஷ்டம் கிடையாது. இவ்வளவு நாள் இவ்வாறு செய்யாமல் தாமதித்தோமே என்றுகூட நீ வருந்துவாய்.

எல்லா வகையான அன்பும் பைத்தியத்தின் ஒருவகைதாம். கடவுள்மீது அன்போ அதிகபட்ச பைத்தியக்காரத்தனம். பணவெறி பிடித்தவனாவது நிறையச் சம்பாதித்து என்றாவது ஒருநாள் திருப்திகொள்ளலாம். கடவுள் பித்து பிடித்தவனுக்குத் தீர்வே கிடையாது. கடவுள்மீதான அன்பு அதிகரித்தபடி செல்வதுதான் காரணம்.

உலக வாழ்க்கையில் சாமர்த்தியசாலிகளாயும் கெட்டிக்காரர் களாயும் உள்ளவர்கள் அன்பு பிரச்சினையில் மாட்டிக்கொள்வ

தில்லை. கடவுள் மீதான அன்பு சிரமமென்றாலும், சாதாரண அன்பெனும் வலையில்கூட அவர்கள் அகப்பட்டுக்கொள்ள விரும்புவதில்லை. அவர்கள் காதலிப்பதில்லை, நட்புக்கொள்வ தில்லை. காதலிப்பதற்குப் பதிலாக நேரடியாகத் திருமணக் கட்டத்துக்குப் போய்விடுகிறார்கள். காதலிப்பது ஆபத்தான விஷயம் என்று அவர்களுக்குத் தெரியும். கடவுளைக் காதலிப்பது என்பதோ மிகப்பெரிய ஆபத்து. எனினும் நீ அவர்களைப் பின்பற்றாமல், உன் வாழ்க்கைக் கடிவாளத்தை அவர் கையில் கொடு. அவர் உனக்கு சாரதியாக அமையட்டும். நீ செயல் புரிபவனாக (கர்த்தாவாக) உன்னை நினைத்துக் கொள்ளாதே.

நெருங்கிவரத் துணிச்சல் கொள். என் மீதுள்ள உன் விரோத மனப்பான்மை நீங்கிவிடும். மேலும் நெருங்கு. உன் பயம் விலகிவிடும். சில சாஸ்திரங்கள் குருவை யமன் என்கின்றன (ஆச்சார்யோ ம்ருத்யு:)! குருவின் அருகில் வந்ததும் சீடனின் தனித்தன்மை அழிந்துவிடுகிறது. நீ புதிய பிறவி எடுக்கிறாய்.

ஒரு பிறப்பு உன் தாயார் தந்தாள். பெரும்பான்மையான குழந்தைகளின் பிறப்பின்போது தலை முதலில் வரும். அப்போது தாங்கிப் பிடித்துக்கொள்ள நர்ஸ் (செவிலியர்) இல்லாவிடில், தலை எதிலாவது பட்டுக் காயம் உண்டாகும். சில சமயம் பிறப்பின்போது கால் முதலில் வரும். பல்லாயிரக் கணக்கான பிறப்புகளில் இப்படி ஒன்று எப்போதாவது நிகழும்.

இதுபோலவே மிக அரிதாக குருவின் தேவையின்றி இவ்வாழ்க்கையிலேயே மறுபிறப்புப் பெற முயல்வார்கள். இவர்கள் சாஸ்திர நூல்களில் கூறப்படும் விதிகளைப் பின்பற்றி ஞானம் பெற முயல்வார்கள். குருவின் வழிகாட்டுதலின்றி ஆன்மிகப் பயிற்சிகள் செய்வது அபாயகரமானது.

இந்த வாழ்க்கையில் என்ன சாரமிருக்கிறது? நீ எதை இழந்துவிடுவோம் என்று அஞ்சுகிறாய்? நீ ஆர்வத்துடன் பாதுகாப்பாக வைத்துக்கொள்ள உன்னிடம் என்ன மிஞ்சியிருக்கிறது?

வாழ்க்கையில் மரணம் கட்டாயம் நிகழ்கிறது. அப்படியும் வாழ்க்கையின் மீது உன் பிடிப்பு குறையவில்லை. சமர்ப்பணம்

மூலம் நீ சாவைக் கடந்த பெருவாழ்வு பெறலாம். ஆனால் உன்னை நீ முழுமையாக சமர்ப்பிக்க பயப்படுகிறாய்.

பிறப்பு உன் கையில் இல்லை. சாவு உன் வசத்தில் இல்லை. சமர்ப்பணமாவது மட்டுமே உன் கையில் உள்ளது. நீ பிறந்து விட்டாய். ஆகவே இறக்கப் போவது நிச்சயம். சமர்ப்பண மாவதற்கு உனக்கு முழு சுதந்திரம் கிடைத்துள்ளது. அந்த நிகழ்ச்சி நடைபெற நீதான் எஜமானன்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## சொற்பொழிவு 85

### மூன்றுக்கப்பால் உள்ளது என்ன?

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஸுப்தோ அபி ந ஸுஷுப்தௌ ச ஸ்வப்னே அபி ஷயிதோ
ந ச |
ஜாகரே அபி ந ஜாகர்தி தீரஸ் த்ருப்த: பதே பதே || 270

ஞ: ஸசிந்தோ அபி நிஸ்சிந்த: ஸேந்த்ரியோ அபி
நிரிந்த்ரிய: |
ஸுபுத்விரபி நிர்புத்தி: ஸ அஹங்காரோ அ நஹங்க்ருதி: ||
271

ந ஸுகீ ந ச வா துக்கீ ந விரக்தோ ந ஸங்கவான் |
ந முமுட்சுர் ந வா முக்தோ ந கிஞ்சின்ன ச கிஞ்சன || 272

விட்சேபே அபி ந விட்சிப்த: ஸமாதௌ ந ஸமாதிமான் |
ஜாட்யோ அபி ந ஜடோ தன்ய: பாண்டித்யே அபி ந
பண்டித: || 273

முக்தோ யதா ஸ்திதி ஸ்வஸ்த்த: க்ருத கர்த்தவ்ய நிர்வ்ருத:|
ஸம: ஸர்வத்ர வத்ருஷ்ணாயன்ன ஸ்மரத்ய க் ருதம்
க்ருதம் || 274

ந ப்ரீயதே வந்த்யமானோ நிந்த்யமானோ ந குப்யதி |
நைவோத் விஜதி மரணே ஜீவனே ந அபிநந்ததி || 275

ந தாவதி ஜனாகீர்ண நாரண்யம் உபசாந்ததீ: |
யதா ததா யத்ர தத்ர ஸம ஏவா அவதிஷ்ட்டதே || 276

அஷ்டாவக்ரர்-ஜனகரின் ஞான உரையாடல் முடிவை நெருங்குகிறது. குரு தன்னால் முடிந்தையெல்லாம் சொல்லி முடித்துவிட்டார். சொல்ல முடியாதவற்றைப் புரிந்துகொள்ள என்ன செய்ய வேண்டும் என்பதற்கு சமிக்ஞை கொடுத்துவிட்டார்; திசையைக் காட்டிவிட்டார்.

சொற்களின் துணைகொண்டு முடிந்த எல்லைவரை அஷ்டாவக்ரர் நம்மை அழைத்துச் செல்கிறார். இதற்குப் பிறகும் தொடுவானம்போல் அடைய வேண்டிய இடம் தள்ளியிருக்கிறது.

'எவன் உறக்கத்திலும் உறங்குவதில்லையோ, கனவு நிலையிலும் கனவு காண்பதில்லையோ, விழிப்பு நிலையிலும் விழித்திருப்பதில்லையோ, அந்த ஆன்ம வீரன் திருப்தியுடன் விளங்குகிறான்.' **(சுலோகம் 270)**

இந்த சுலோகத்தை மனத்தத்துவ அடிப்படையில் புரிந்து கொள்ள வேண்டும். ஐரோப்பாவில் இருநூறு ஆண்டுகளுக்கு முன்புவரையிலும் மனத்தத்துவ இயல் விழிப்பு நிலையை மட்டும் ஆராய்ந்தது. காலையில் கண்விழித்து, இரவில் தூங்கப் போகும் வரை நடுவில் என்னவெல்லாம் நிகழ்ந்ததோ அவையே நிபுணர்களால் ஆராயப்பட்டன. இரவில் தூங்கும்போதும் மனம் தொடர்ந்து செயல்படுகிறது என்பது கவனிக்கப்படவில்லை. அதை மனத்தத்துவ ஆராய்ச்சிக்கு உட்படுத்தவில்லை.

ஸிக்மண்ட் ஃப்ராய்ட் மனத்தத்துவ இயலில் புரட்சி விளைவித்தார். அவர் புதிதாகச் சொன்ன விஷயம் கிழக்கு நாடுகள் ஏற்கெனவே அறிந்த ஒன்றுதான். மனித மனத்தின் உண்மையான சொரூபம் கனவில் வெளியாகிறது என்றார். பகல் வேளையில் நாம் உண்மையானவர்களாக் இருப்பதில்லை. சூழ்நிலைக்கேற்ற வெவ்வேறு முகமூடிகளை அணிகிறோம். நீ அடிப்படையில் எப்படிப்பட்டவன் என்பதை விழித்திருக்கும் போது நீ செய்யும் செயல்களால், பேசும் பேச்சால் கண்டுபிடிக்க முடியாது. நீ ஒருவருடன் சிரித்துப் பேசியபடி காணப்படலாம். ஆனால் உண்மையில் அவர் மீது வெறுப்பு என்பதால், திடீரென நீ அவரைத் தாக்கக்கூடும்.

ஆகவே மனிதனின் அசலான தன்மையை அறிய அவனுடைய கனவுகளுள் எட்டிப்பார்க்க வேண்டும் என்று ஃப்ராய்டு சொன்னார். ஏனெனில் கனவு நிலையில் மனம் தன் நிஜத்தன்மையுடன் விளங்குகிறது அந்த நிலையில் போலித் தனமோ, ஏமாற்று வேலையோ கிடையாது.

ஃப்ராய்ட் மனவியலில் புதிய கோட்பாட்டை அறிமுகப் படுத்தினார். மனித மனத்தின் ஆராய்ச்சிக்கு அவன் காணும் கனவுகளை ஆதாரமாகக் கொள்ள வேண்டும் என்றார். இதை மக்கள் முதலில் நம்பவில்லை. ஒருவனை அறிய அவனிடமே நேரடியாகக் கேட்பதை விட்டு கனவுகளை ஏன் ஆராய வேண்டும் என்று மக்கள் கேட்டார்கள். கனவில் ஒருவனைக் கொலை செய்தால் காலையில் எழுந்து நாம் கவலைப்படுகிறோமா என்ன?

ஆனால் ஃப்ராய்டின் கண்ணோட்டத்தில் கொலை வெறி உன் உள்ளத்தின் ஆழத்தில் பதிந்துள்ளது என்பதுதான் முக்கியமே தவிர, பகலில் கொலை செய்தாயா, கனவில் கொலை செய்தாயா என்பது முக்கியமில்லை. ஒருநாள் கனவில் செய்த கொலையை இன்னொரு நாள் நிஜத்தில் செய்யக்கூடும். கொலை எண்ணம் அடிமனத்தில் இருக்கிறது. அங்கே விதை ஊன்றியிருக் கிறது. என்றைக்கு வேண்டுமானாலும் அது முளைக்கலாம், மரமாகலாம். எண்ணம் செயலாக முடியலாம். ஏனெனில் இன்றையச் செயல் நேற்று எண்ண வடிவில் இருந்தது.

ஃப்ராய்டின் கொள்கைப்படி, கனவுகள் வாழ்க்கைக்கு கட்டட வரைபடம் போன்றவை. அவற்றை ஆராய்ந்தால் உன் மனம் கட்டப்பட்டுள்ள விதம் புரியவரும். கனவில் இன்னொருவனின் மனைவியுடன் நீ ஓடிப்போகிறாய். காலையில் கண்விழித்தபின் நீ அக்கனவைப் பொருட்படுத்துவதில்லை. காலையிலிருந்து உன் வாழ்க்கை வேறுவிதமாகச் செல்கிறது. பூஜை செய்கிறாய், ராமநாம ஜெபம் செய்கிறாய்; ஜெபமாலை உருட்டுகிறாய். பகல் வேளையில் எந்தப் பெண்ணின் நினைவும் உனக்கில்லை. ஆனாலும் நீ கண்ட கனவை உன் மனைவியிடம் சொல்ல முடியுமா? அவள் ஃப்ராய்ட் என்ற பெயரே அறிந்திராவிடிலும் உன் ஆழ்மனத்தில் வேறு பெண் உள்ளதை ஊகித்து உன்னுடன் தகராறு செய்வாள்!

பிலிப்பைன்ஸ் நாட்டில் வசிக்கும் பழங்குடியினர் கனவுகளை மிகவும் மதிக்கின்றனர். அவர்கள் காலையில் எழுந்ததும் வட்டமாக உட்கார்ந்து இரவில் கண்ட கனவுகளைப் பற்றி விவாதிக்கின்றனர். அவர்கள் சிறுவர்களிடம் கூட, “இரவில் நீ ஏதாவது கனவு கண்டாயா?” என்று விசாரிக்கின்றனர். வீட்டுப் பெரியவர்கள் கனவுக்கு விளக்கம் கூறி, சிறுவர்கள் என்ன செய்ய வேண்டுமென ஆலோசனை தருகின்றனர்.

ஒரு சிறுவன் கனவில் பக்கத்து வீட்டுப் பையனை அடித்துவிட்டான். நீ இக்கனவை அலட்சியப்படுத்தியிருப்பாய். ஆனால் அந்தப் பழங்குடி பெரியவர்கள் அவனைப் பக்கத்து வீட்டுப் பையனிடம் அனுப்பி, “என்னை மன்னித்துவிடு. கனவில் உன்னை அடித்துவிட்டேன், என்னை மன்னித்துவிடு,” என்று சொல்லச் சொல்வார்கள். அடித்ததற்கு நஷ்டஈடாகப் பழம் அல்லது பொம்மை கொடுக்கச் சொல்வார்கள்! இதன் மூலம் அடித்தவனின் ஆழ்மனத்தில் பக்கத்து வீட்டுப் பையன் மீதிருந்த கசப்பு நீங்கிவிடும். செலவே இல்லாத, வைத்தியம் இது! கல்வியறிவே இல்லாத அவர்கள் இந்த மனத்தத்துவத்தை அறிந்திருக்கிறார்கள்.

கிழக்கத்திய ஞானிகள் மனத்தின் நாலு நிலைகளைக் கூறுகிறார்கள்: ஜாக்கிருதம் (விழிப்பு), ஸ்வப்ன (கனவு), ஸுஷுப்தி (ஆழ்துயில்), துரீயம் (ஏகாந்தமான சாந்த நிலை). ஐரோப்பிய மனோவிஞ்ஞானம் முதலிரண்டு நிலைகளையே அறிந்துள்ளது. ஜாக்கிருதம் நிலையில் பகற்பொழுதில் வெளிப்படுத்தும் நடத்தை, மேற்கொள்ளும் செயல்கள், செய்யும் தொழில் ஆகியவையும், கனவு நிலையில் அப்போது தெரியும் காட்சிகளும், புரியும் செயல்களும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படுகின்றன.

ஸுஷுப்தி நிலையில் கனவுகள் கிடையாது. வெளியுலகமோ, உள்ளுலகமோ கிடையாது. எண்ணங்கள் கிடையாது. யோசனைகள் கிடையாது. இதையும்விட ஆழமான நிலைஉண்டு. அது துரீயம் எனப்படும். அது தனிமையும் சாந்தமும் சேர்ந்த அபூர்வ நிலை.

மேற்கத்திய மனவியல் முதலில் விழிப்பு நிலையை மட்டும் ஆராய்ந்து ஒருவனது ஆளுமையைச் சீர்தூக்கி மதிப்பிட்டது. ஃப்ராய்டின் வருகைக்குப்பின் கனவுகளை ஆராய்ந்து, விழித் திருக்கையில் நடத்தும் வாழ்க்கைக்கும், மனத்தின் உண்மையான கட்டமைப்பிற்குமுள்ள வித்தியாசம் கண்டறியப்பட்டது. சில ஆண்டுகளாகத்தான் ஸுஷுப்தி நிலை ஆராயப்பட்டு வருகிறது. அமெரிக்காவில் இதற்கென பரிசோதனைச் சாலைகள் உள்ளன. அவை தூக்கத்தின்போது மனிதனுக்கு என்ன நேருகிறது என்று ஆராய்கின்றன.

நான்காம் நிலையான துரீயம் ஐரோப்பாவில் அறியப்பட வில்லை. கிழக்கு நாடுகளின் மனவிஞ்ஞானம் இந்த துரீய நிலையைத்தான் அஸ்திவாரமாகக் கொண்டுள்ளது.

மனவியல் அறிஞர்கள் முதலில் கனவுகளுக்கு மதிப்புத் தரவில்லை. பிறகுதான் அவர்கள் கனவுகள் ஆராயப்பட வேண்டியவை என்று தெரிந்துகொண்டனர். சமீபத்தில்தான் ஸுஷுப்தி என்னும் மூன்றாம் நிலையை, உறக்க நிலையை, பகுப்பாய்வு செய்துவருகின்றனர்.

துரீயம் பரம சாந்தநிலையைக் காட்டுகிறது. மூன்று நிலைகளைக் கடந்து இந்நிலை வருவதால், இதுவரை வந்து சேர்வது அரிது. ஆனால் வெளியுலகில் சத்சங்கம் மூலம் சாந்த மாகலாம். நல்லோர் அருகில் உட்கார்ந்தால் இதை உணரலாம். ஆனால் சத்சங்கத்திற்கு ஏற்ற நல்லவரை எப்படி அடையாளம் காண்பது?

ஒருவரின் அருகில் உட்கார்ந்து சில நிமிடங்களானபின், அல்லது அவருடன் தங்கிச் சில நாள் ஆனபிறகு உனக்குள் பேரமைதி இறங்கிவருவதாக உணர்ந்தால், மனம் எண்ணங் களின்றி வெற்றிடமானதுபோல் தெரிந்தால், உள்ளக் கொந்தளிப்பு அடங்கிப் போனால், இலேசாக மழைபெய்து நீ குளிர்ச்சியடைந்தது போல் நினைத்தால், அந்த மனிதரே உனக்கு சத்குரு. அவரது அருகிலேயே இருப்பதுதான் (சத்சங்கம்) உனக்கு நன்மை தரும்.

விழிப்பு, கனவு, ஆழ்துயில் என்னும் மூன்று நிலைகளுக் குள்ளேயே மனிதன் சஞ்சரிக்கிறான். விழிக்கிறாள், கனவு காண்கிறான், ஆழ்துயில் கொள்கிறான். இந்த மூன்றுக்கும் அப்பால் உள்ளது சாட்சி நிலை. சாட்சி என்பவன் கனவைப் பார்ப்பவன்; கனவில் வருபவன் இல்லை. காலையில் எழுந்தபிறகு 'நேற்றிரவு ஒரு கனவு கண்டேன்' என்கிறாய். ஆகவே கனவைப் பார்த்தவன் நிச்சயமாகத் தனியான ஓர் ஆள்தான்.

சிலநாள் காலையில் எழுந்தபின் நீ 'நேற்றிரவு நான் ஆழ்ந்து தூங்கினேன்; அருமையாகத் தூங்கினேன்' என்று சொல்கிறாய். ஆகவே நீ ஆழ்ந்து தூங்கும்போதும் உன்னை ஒருவன் கவனித் திருக்கிறான். தூங்கியவனும் அந்த அனுபவத்தை உணர்ந்தவனும் நீயேதான். நீதான் நீ தூங்குவதை சூட்சுமமாகப் பார்த்தவன். நீதான் சாட்சி.

இந்த சாட்சி நிலையை, துரீய நிலையை அடைந்தவன் தனது உண்மையான ஆளுமையை அடைகிறான்; தனது சுபாவத்தை (உண்மையான இயல்பை) அடைந்தவன் ஆகிறான்.

ஒருவன் சன்னல் வழியாகப் பார்ப்பதாக வைத்துக்கொள். தெருவில் செல்பவர்களைப் பார்ப்பதிலேயே ஆழ்ந்துபோனால் குறிப்பிட்ட ஒருவர் இருப்பதையே மறந்துவிடுகிறான். அவன் கவனிக்கத் தவறிவிட்ட ஆள் அந்த சன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்த அவனேதான்!

விழிப்பு நிலையில் உலகின் மீது கவனம் செல்கிறது. மரங்கள், மலைகள், சூரிய-சந்திர-நட்சத்திரங்கள், உலகிலுள்ள மக்கள் முதலிய உயிரினங்கள் எல்லாவற்றையும் பார்க்கும் அவன் தன்னைப் பார்ப்பதில்லை. கனவு நிலையில் சொற்களில், கருத்துகளில், பிம்பங்களில், கற்பனைகளில் கவனம் செல்கிறது. இப்போதும் தனது நினைவு எழுவதில்லை. விழித்தபின்தான் அவனுக்குத் தனது நினைவு வருகிறது. ஆழ்துயிலில் பொருள்கள், எண்ணங்கள் கிடையாது. அதே சமயம் அப்பேருறக்கத்தில் தனது நினைவும் கிடையாது.

இவ்வாறு விழிப்பு, கனவு, ஆழ்துயில் மூன்றிலும் ஒரு விஷயம் பொதுவானது. அப்போதெல்லாம் ஒருவனுக்குத் தனது

நினைவு இருப்பதில்லை. விழிப்பு நிலையில் பொருள்கள் (காட்சிகள்) மீது கவனம். கனவில் கற்பனைகளில் கவனம். ஆழ்துயிலில் எதன் மீதும் கவனமில்லை; தன் மீதும் கவனமில்லை. கவனிப்பே அற்ற நிலை இது. கடைசியான துரீய நிலையில் தன்னை நோக்கிக் கவனம் திரும்புகிறது. அப்போது எல்லா வேலைகளையும் நீ செய்துவந்த போதிலும், செயல் புரிபவன் (கர்த்தா) என்னும் திமிர் உனக்கிருக்காது. எல்லா வற்றையும் பார்க்கின்றவனாக, சாட்சியாக மட்டுமே நீ இருப்பாய்.

**க**பீர்தாசர் தனித் தன்மை வாய்ந்தவர். அவர் எந்த ஞானப் பரம்பரையையும் சேர்ந்தவரல்லர். எந்த ஞானியிடமும் பயிற்சி பெற்றவரல்லர். அவர் இந்துவா, முஸ்லீமா என்ற விவாதம் இப்போதும் முடிவுக்கு வரவில்லை. அவருடைய கருத்துகளை வைத்துப் பார்க்கும்போது அவரைக் குறிப்பிட்ட மதத்திற்குள் சிறைப்படுத்த முடியாது.

மேலும், அவர் நெசவுத் தொழில் செய்து வந்தார். மக்கள் அவரைத் தான் மதித்தார்களே தவிர காசியில் வசித்த பிராமணர்களை யாரும் கண்டுகொள்ளவில்லை. பிராமணர்களின் மந்திரம் ஓதலைச் சென்று கேட்பதற்குப் பதிலாக, கபீரிடமே எல்லோரும் சென்று அவருடைய உபதேசப் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

கபீர் பெயரைக் கெடுக்க பிராமணத் தலைவர்கள் திட்டம் தயாரித்தனர். ஒரு மகானின் மீது பழி சுமத்த இரண்டு வழிகள் உள்ளன. அவர் பொன்னும் பொருளும் பதுக்கி வைத்திருப்பதாக வதந்தி பரப்புதல். அவரைப் பெண்ணாசை கொண்டவராக பிரச்சாரம் செய்தல்.

இந்த இரண்டாவது வழிதான் உடனடியாக அவர் பெயரை நிரந்தரமாகக் கெடுத்துவிடும். ஆகவே பிராமணத் தலைவர்கள் ஒரு விலைமாதுவிற்குப் பணம் கொடுத்து, கபீர் துணிக்கடைத் தெரு வழியே போகும்போது கையைப் பிடித்து இழுக்கச் சொன்னார்கள். அவள் பேச வேண்டிய வசனங்களையும் சொல்லித் தந்தார்கள்.

அவ்வாறே அவள் ஒருநாள் கபீரைக் கடைத்தெருக் கூட்டத்தில் கையைப் பிடித்து இழுத்தாள். "ஏ போலி பக்தரே! என்னை தனிமையில் தவிக்கவிட்டு எங்கே போனீங்க? நான் அரைப் பட்டினியா கிடக்கேன். உடம்பை முழுசா மூடிக்க துணி போதலை. உன்னைப் போல மோசடி ஆசாமியை முட்டாள் ஜனங்க மகாத்மான்னு கும்பிடறாங்களே," என்று அழுதபடி அவள் அவர் கால்களைப் பற்றிக்கொண்டாள். கூட்டத்தினர் திகைத்துப்போனார்கள். சிலர் கபீர் மீது கல்லெறிந்தனர்.

கூட்டத்தில் பிராமணர்களே பெரும்பான்மையாய் இருந்தது கண்டு கபீர் இது அவர்கள் செய்த சதி என்று ஊகித்துவிட்டார். அவரும் நடிக்க முடிவெடுத்தார்.

அவர் விலைமாதை நோக்கி, "நல்ல காரியம் செய்தாய். எப்படியோ வந்து சேர்ந்தாய். இனிமேலாவது நாம் பிரியாமல் ஒன்றாக வாழ்வோம்," என்ற கூறியபடி அவள் கையைப் பிடித்துக் கொண்டார். "சரி வா, நாம் நம் வீட்டுக்குப் போவோம். மக்கள் கொடுக்கும் மரியாதை எனக்குத் தேவையில்லை. நீ என்னுடன் இருந்தால் அதுவே போதும். விலைமாது 'ஐயோ இந்த தாடிக்காரக் கிழவரிடம் மாட்டிக் கொண்டேனே' என்று தவித்தாள். கபீர் அவளைப் புறக்கணிக்காமல் ஏற்றுக்கொண்டதால் கூட்டம் ஆர்வமிழந்து கலையத் தொடங்கியது. அவள் கேட்டுக்கொண்ட படியே அவளை ஆதரிப்பதுபோல் கபீர் நடந்துகொண்டதால், அவள் எதிர்த்து பேசி ஓடிப்போக முடியவில்லை.

கபீர் அவளைத் தன் வீட்டிற்கு (குடிசைக்கு) அழைத்துப் போனார். "என் வீட்டிற்கு எவர் வந்தாலும் சாப்பிடாமல் போகவிடுவதில்லை," என்று கூறிய கபீர், தாமே ரொட்டி-சப்ஜி தயாரித்து அவளைச் சாப்பிட வைத்தார். அவள் அழுதேவிட்டாள். காசுக்கு ஆசைப்பட்டு பிராமணத் தலைவர்கள் சொன்னபடி நடந்ததாக ரகசியத்தை வெளியிட்டாள். அவள் கபீர்தாசரிடம் மன்னிப்புக் கேட்டாள்.

பிராமணத் தலைவர்கள் முதலில் தோற்றதாக நினைத்தாலும், புதிதாக யோசித்து காசி நகர மன்னனிடம் சென்றார்கள். கபீர் ஒரு

விலைமாதைக் கையைப் பிடித்து இழுத்து, தனது வீட்டிற்கே அழைத்துச் சென்றுவிட்டார் என்று புகார் செய்தனர்.

மன்னன் அதிர்ச்சி அடைந்தான். காவலர்களை அழைத்து கபீரையும் அப்பெண்ணையும் தன் முன்னால் ஆஜர்படுத்தச் சொன்னான். கபீர் அவள் கையைப் பிடித்துக் கொண்டே தர்பாருக்கு வந்த விதம் மன்னனை சங்கடப்படுத்தியது. அவன் கபீரை தர்மாத்மா, ஒழுக்கசீலர் என்றெல்லாம் நினைத்திருந்தான். அவருடைய உபதேச நிகழ்ச்சிகளுக்கும் அவன் மாறுவேடத்தில் சென்றதுண்டு.

மன்னரைப் பார்த்ததுமே விலைமாது, "வேந்தே! என்னை மன்னியுங்கள். நான் பேச அனுமதியுங்கள். எனக்கு இவர் நடந்துகொண்ட விதம் புரியவில்லை. காசுக்காக நான் இவருக்குத் தொல்லை கொடுத்தேன். பிராமணர்கள் சிலர் இவ்வாறு தூண்டி விட்டதால் தப்புசெய்தேன்." என்று உண்மையை வெளியிட்டு விட்டாள்.

ஞானி தூங்கினாலும் ஞானவிழிப்புடன் இருப்பான். கனவு கண்டாலும், அவன் தன்னை கனவைப் பார்ப்பவனாக (த்ருஷ்டா) மட்டும் கருதுவான், கனவில் வருகின்ற தன்னை 'நான்' என்று கருதமாட்டான். இத்தகையவன் ஒவ்வொரு கணமும் பரம திருப்தியுடன் வாழ்வான். ஏனெனில் இனி அதிருப்திக்கான காரணம் எதுவுமில்லை.

ஆன்ம வீரனை தீரன் என்கிறோம். தீரன் என்பதற்கு மெதுவாக ஆனால் உறுதியாக நடந்துகொள்பவன் (slow but steady) என்று பொருள். அவன் எதற்கும் அவசரப்படமாட்டான். அங்குமிங்கும் ஓடமாட்டான். அவன் எங்கேயும் போய்ச்சேர வேண்டியதில்லை. தீர(ன்) என்னும் சொல்லிலிருந்து தைரியம் என்னும் சொல் வருகிறது. ஞானி தைரியசாலி. அவன் எந்த சூழ்நிலையிலும் கலங்காமல் அமைதியுடனும் பொறுமையாகவும் விளங்குவான். செய்பவன் (கர்த்தா), அனுபவிப்பவன் (போக்தா) என்னும் நிலைகளுக்கு அப்பாற்பட்டு அவன் சாட்சி நிலையில் இருப்பான்.

'ஞானியிடம் கவலைகள், புலன்களின் செயல்பாடுகள், அறிவு, மேதை ஆகியவை இருப்பதுபோல் தோன்றினாலும் அவன் உண்மையில் கவலையில்லாதவன், புலனாசை அற்றவன், உலக அறிவில் நாட்டமில்லாதவன், அகங்காரமற்றவன்.' **(சுலோகம் 271)**

நேபாளத்தில் ஓர் அபூர்வமான மகாத்மா. பெயர் சிவபுரி பாபா. அவரிடம் ஒருவன் வந்து, "தாங்கள் துக்கப்படுவது உண்டா?" என்று கேட்டான். அதற்கு அவர், "துக்கம் என்பது உண்டுதான்," என்றார். வந்தவன் விடாமல், "துக்கம் என்பது உண்டா என்று நான் கேட்கவில்லை. நீங்கள் துக்கப்படுவது உண்டா என்பதைச் சொல்லுங்கள்," என்று வற்புறுத்தினான்.

அதற்கு அவர், "துக்கம் என்பது உண்டு. ஆனால் நான் துக்கப்படுவதில்லை," என்று பதிலளித்தார்.

இந்த வேறுபாட்டைக் கவனி. துன்பம் என ஒன்றிருப்பது வேறு; துன்பத்தால் பாதிக்கப்படுவது என்பது வேறு. முள் இருந்தால் குத்தத்தான் செய்யும். புத்தர் காலிலும் ஒருமுறை முள் குத்தியது. முள் குத்தினால் வலிக்கத்தான் செய்யும். நாம் வலியால் கத்துவோம். ஆனால் புத்தர் போன்றவர்கள் அதை வெளியிலிருந்து பார்ப்பார்கள். வேறு யாருக்கோ முள் குத்திவிட்டதை எடுப்பதுபோல் தங்கள் காலிலுள்ள முள்ளைச் சலனப்படாமல் பிடுங்குவார்கள்.

உன் வீட்டில் நெருப்புப் பிடித்துவிட்டது. உன் உடம்பே அப்போது தீப்பற்றிக் கொண்டதுபோல் உணர்கிறாய். ஏனெனில் உனக்கு வீட்டின்மீது மிகுந்த பற்றுள்ளது. ஞானியின் வீட்டில் தீப்பிடித்தால், வீட்டில் தீப்பிடித்தது என்பதை அறிவதுடன் மட்டும் நிறுத்திக் கொள்வான். நீ இறக்கும்போது, 'நான் இறக்கிறேன்' என்னும் எண்ணத்துடன், வருத்தத்துடன் இறப்பாய். அதே சூழ்நிலையில் ஞானி 'என் உடல்தான் நீங்குகிறது. நான் என்றைக்கும் உடல் அல்லன்' என்ற கருத்துடன் அமைதியாகக் கண்மூடுவான்.

வாழ்க்கையில் ஞானியையும் கவலைகள் வந்து மோதத் தான் செய்யும். அவன் அவற்றிற்குத் தீர்வு காண முயலுவான்.

அவற்றால் தடுமாறிவிடமாட்டான். எங்காவது செல்கையில் வழி தவறிவிட்டால், சரியான வழி கண்டுபிடிக்க, ஞானியும் அங்கும் இங்கும் அலைவான். ஆனால் கலவரப்படமாட்டான். உள்ளத்திலுள்ளே அவன் சலனமின்றி இருப்பான்.

ஞானியும் மற்றவர்களைப்போல் புலன்கள் அமையப் பெற்றவன்தான். ஆனால் கண்கள் பார்ப்பதில்லை பார்ப்பவன் வேறொருவன் என்று அவன் கருதுகிறான். ஞானிக்கும் காது உண்டு. ஆனால் ஒலியைக் கேட்பவன் வேறொருவன் என்று அவன் கருதுகிறான். காதை அவன் சன்னல் என்றே நினைக்கிறான். கேட்பவன் அந்த சன்னலின் உட்கார்ந்திருக்கிறான். இதேபோல் கண்ணும் சன்னல். ஞானி கண், காது முதலியவற்றைத் தனக்கு எஜமானனாக இருக்க விடுவதில்லை.

ஞானி தேவைப்படும்போது மட்டும் அறிவைப் பயன்படுத்து கிறான். நாள் முழுவதும் தான் அறிஞன் என்று அவன் காட்டிக் கொள்வதில்லை. அவன் தேவைப்படும்போது தர்க்கம் செய்வான், வாதம் செய்வான். அவன் தனது புத்திக்கு எஜமானனாக இருப்பான். அதைக் கருவியாக உபயோகிப்பான்.

ஞானி சில சமயம் அகங்காரமாகப் பேசுவதுபோல் தெரியும். ஏனெனில் எவருமே பேசும்போது 'நான்' என்று கூறுவதைத் தவிர்க்க முடியாது. ஞானி நான், எனது என்று கூறும்போது அதில் உறுதி இருக்குமே தவிர, திமிர் இருக்காது-கிருஷ்ணர் கீதையில் 'மற்ற வழிமுறைகளைக் கைவிட்டு என் ஒருவனையே சரணடைவாய்' என்று அழைப்பு விடுகையில், அவர் வாக்குறுதி தருகிறாரே தவிர, அகங்காரமாகப் பேசவில்லை.

ஜென் சம்பிரதாயத் துறவி ஒருவர் காட்டு வழியாகப் போகையில் எதிரே ஒரு நரி வந்தது. அது துறவியைத் தடுத்து, "பிட்சுவே, நான் சில ஆண்டுகள் முன்புவரை புரோகிதராக இருந்தேன். நான் ஏராளமான சாஸ்திரங்களைப் படித்திருந்ததால் அறிஞனாகக் கருதப்பட்டேன். ஒரு முனிவர் என்னிடம், 'ஞானம் பெற்றவர்கள் மீது காரண-காரியம் கோட்பாடு (நோக்கம்-செயல்-விளைவு) தாக்கம் ஏற்படுத்துமா? 'சரியான பதில் கண்டுபிடிக்கும் வரை நீ நரியாக அலைவாய்' என்று சபித்துவிட்டார். பிட்சுவே,

நீங்கள் மகாஞானி என்பதால் பதில் சொல்லிக் கொடுங்கள்,'' என்று கெஞ்சியது.

துறவி சொன்னார், ''காரிய-காரண விதிமுறையில் அவர்கள் தடையாக நிற்பதில்லை என்பதுதான் பதில்.'' அந்த வாக்கியத்தை நரி திருப்பிச் சொன்னதும் மீண்டும் புரோகிதராக மனித வடிவம் பெற்றது. அந்த புரோகிதர் துறவியை வணங்கிப் புறப்பட்டுச் சென்றார்.

ஞானிகள், என்ன நடைபெறுகிறதோ அதை நடைபெற விடுகிறார்கள். அதைத் தடுப்பதில்லை. நடைபெற ஒத்துழைப்பும் தருவதில்லை.

ஞானிகள் ஒரு கருத்தை வலியுறுத்துவதற்காக அகங்காரமாகப் பேசுவதுபோல் தெரியலாம். அதேசமயம் அவர்கள் பணிவின் அவதாரமாகவும் இருப்பார்கள். ஞானி மூலம் எது நடைபெறினும் அவன் அதற்கு வெளியே நிற்கிறான். உறக்கம், கவலை, புலன்களை உபயோகித்தல், அகங்காரம் ஆகிய எந்த சூழ்நிலையிலும் அவன் அதனுடன் ஒட்டிக்கொள்வதில்லை. ஆகவே அவன் கையில் வாளிருந்தாலும் அவன் ஹிம்சையை ஆதரிப்பவன் என்று நினைத்துவிடாதே. அவனது இதயத்தில் என்ன இருக்குமென ஊகித்துப்பார். உதாரணமாக, மகாவீரர் ஆடைகளையெல்லாம் களைந்து எறிந்ததை நாகரிகமற்ற செயலென நினைக்கக் கூடாது. அதன் பின்னணியில் ஆன்மிகக் காரணம் இருக்குமென நம்ப வேண்டும்.

'ஞானி சுகமாக உணர்வதில்லை, துக்கப்படுவதும் இல்லை, பிறரை விட்டு விலகி விரக்தனாக இருப்பதில்லை, பிறரைச் சார்ந்திருப்பதில்லை, ஆன்மிகத் தேடலில் பயிற்சியாளனாகவும் இல்லை, முக்தி நிலையை அடைந்தவனாகவும் இல்லை, எதுவாகவும் இல்லை, எதுவாக இல்லாமலும் இல்லை, இதுவுமில்லை, அதுவுமில்லை.' **(சுலோகம் 272)**

சுகமும் துக்கமும் அனுபவிப்பதுடன் சம்பந்தப்பட்டது. ஓர் அனுபவத்தை விருப்பமுடன் வரவேற்றால் அது சுகம். விரும்பாவிடிலும் எது வந்து ஒட்டிக் கொள்கிறதோ அது துன்பம்.

ஞானி எதுவும் தன்னை ஒட்டிக்கொள்ளாதபடி பார்வையாளனாக நிற்கிறான். அவனது அன்றாட வாழ்க்கையிலும் இன்பமும் துன்பமும் உண்டு. ஆனால் அவை அவனிடம் பாதிப்பு ஏற்படுத்துவதில்லை. நடப்பது நடந்தே தீரும். நடவாதது நடைபெறாது' என்னும் தெளிவு ஞானிக்குண்டு.

ஞானி எவருடனும் சேர்ந்துமில்லை, எவரைவிட்டு விலகியுமில்லை. அவன் கூட்டத்திலும் தனியாக விளங்குகிறான். தனிமையிலும் அவன் முழு மனித இனத்தையும் தன் இதயத்தில் கொண்டுள்ளான்.

அவன் எதையும் தேடுகிறான் என்றும் சொல்ல முடியாது. எதையும் 'கண்டுகொண்டேன்' என்றும் அவன் அறிவிப்பதில்லை. ஏனெனில் எப்பொழுது நீ அறிகிறாயோ அப்பொழுது அதைப் பெறுகிறாய், பிறகுதான் நீ பெற்றதை ஒருபொழுதும் இழந்ததில்லை என்று உனக்குத் தெரியவருகிறது. எனவே எதையும் தேடிக் கண்டுபிடித்ததாகச் சொல்வது வீண் வார்த்தை.

'ஞானி ஞானம் நிறைந்தவனாயினும் உலகில் அறிஞன் (பண்டிதர்) எனப்படுபவர்போல் இருக்கமாட்டான். சமாதி நிலையிலும் சமாதிபெற்றவன்போல் காணப்படமாட்டான். ஜடம்போல் சில சமயம் தெரிந்தாலும் அவனிடம் ஜடத்தன்மை கிடையாது. ஒருவகையில் அவன் 'ஆவேசப்படுவதுபோல் தெரிந்தாலும் அவன் நிஜத்தில் சாந்தமானவன்.' **(சுலோகம் 273)**

'முக்த புருஷன் எல்லா நிலைகளிலும் ஆரோக்கியமாக இருக்கிறான். செய்த வேலைகளிலும், செய்ய வேண்டிய தகுந்த வேலைகளிலும் அவன் திருப்தியுடன் விளங்குகிறான். எல்லா இடங்களிலும் அவன் சமமாகப் பழகுகிறான். பேராசை இல்லாததால், எதையும் எதிர்பார்க்காததால், அவன் நிறைவேற்றிய அல்லது செய்யாத பணிகளை அவன் நினைவில் வைத்துக் கொள்வதில்லை.' **(சுலோகம் 274)**

**ஞா**னி நிலைமை எதுவோ, எப்படியோ, மலர்ச்சியுடன் இருக்கிறான். நிலைமை வேறு விதமாக அமைந்திருக்கக் கூடாதா என்று அவன் ஏங்குவதில்லை. ஏனெனில் நிலைமை மாறாது

என்பதை அவன் அறிவான். வேறு எப்படி இருக்க முடியும் என்று அவன் எண்ணுவதில்லை. செல்வம்-வறுமை, மாளிகை-குடிசை, இன்பம்-துன்பம், கௌரவம்-அவமதிப்பு ஆகிய எல்லா சூழ்நிலைகளிலும் அவன் சமமான மனநிலை கொண்டிருப்பான்.

புத்த பிட்சு ஒருவர் வைஷாலி நகரத்தில் பிக்ஷைக்காகச் சென்றபோது ஒரு பெரிய மாளிகை வாசலை அடைந்தார். எஜமானி நகை அலங்காரத்துடன் வெளியே வந்தாள். பிட்சுவைப் பார்த்ததும் அவளுக்குக் கோபம் மூண்டது. ஏனெனில் அவள் பௌத்தர்களை வெறுப்பவள். எதுவும் தர மறுத்தாள். "அம்மணி, தங்கள் மாளிகையிலிருந்து காலியான பிக்ஷாபாத்திரத்துடன் நான் செல்வது உங்களுக்குப் பெருமை சேர்க்காது என்று பிட்சு கூறினார். அப்பெண்மணி உள்ளேயிருந்து குப்பைத் தொட்டியை எடுத்துவந்து பாத்திரம் நிறையக் குப்பையைக் கொட்டிவிட்டு, மீதியைப் பிட்சுமேலும் எறிந்துவிட்டு உள்ளே சென்றாள். யார் என்ன கொடுத்தாலும் அவரைப் பணிந்து வணங்கி நன்றி கூறவேண்டுமென்பது புத்தரின் அறிவுரை.

அதன்படியே பிட்சு அவளைப் பணிந்து வணங்கியதைப் பார்த்த ஒரு வழிப்போக்கர், "சாமி! உமக்குக் கிறுக்கா? எதுக்காக அவளை வணங்கிறீங்க? அவள் உங்க மேலேயும் பாத்திரத்திலும் குப்பையை வீசியதை நான் பார்த்துக்கிட்டுதான் இருந்தேன்," என்றார்.

அதற்கு பிட்சு அவள் கொடுத்தது குப்பையானாலும் அதையாவது கொடுக்க அவளுக்கு மனசு வந்ததே. அதுவே ரொம்ப பெரிய விஷயமாயிற்றே. அவள் உள்ளேபோய் குப்பைத் தொட்டியை எடுத்துவந்து குப்பையை மேலே எறிய சிரமம் எடுத்துக்கொண்டாளே. இதற்கெல்லாம் நன்றி சொல்ல வேண்டாமா?" என்று விளக்கினார்.

இப்படி மனப்பான்மை உள்ளவனின் வாழ்க்கையில் குழப்பத்திற்கு இடமேது? என்ன செய்தோம்-செய்யவில்லை, என்ன நடந்தது-நடக்கவில்லை, என்பதும் அவனுக்கு நினைவிற்கு வருவதில்லை. என்ன நடைபெற வேண்டும், என்ன செய்ய வேண்டும் என்றும் அவன் திட்டமிடுவதில்லை. கடந்த காலம்,

எதிர்காலங்களைத் தவிர்த்து அவன் நிகழ்காலத்தில் வாழ்கிறான். புத்தமொழியில் அவனை 'ததாதா' என்பர். அவன் அந்தந்த நிமிடத்தில் வாழ்பவன். அதுவே போதுமென்று நினைப்பவன்.

'முக்தனாக (விடுதலை பெற்றவனாக) விளங்குபவன் புகழப்பட்டாலும் துள்ளிக்குதிப்பதில்லை. நிந்திக்கப்பட்டாலும் சினம் கொள்வதில்லை. அவன் உயிர் வாழ்கிறோம் என்று விசேஷமான பெருமிதம் கொள்வதில்லை. சாவு நெருங்கி விட்டால் சஞ்சலமடைவதில்லை.' **(சுலோகம் 275)**

**ஞா**னி சாவை எதிர்ப்பவனில்லை. வாழ்ந்துதான் ஆகவேண்டுமென வற்புறுத்துபவனும் இல்லை. அவன் எல்லா வற்றிற்கும் அப்பால் வெளியே நிற்கிறான். ஏசினாலும் பொறுமையாகக் கேட்டுக்கொள்வான்.

மகிழ்ச்சியும் ஒரு சஞ்சலமான தன்மை. சோகமும் வேறுவித சஞ்சலத் தன்மை. இரண்டும் காய்ச்சல் (சுரம்) போன்றவை. லாட்டரியில் பரிசு விழுவதுபோன்ற சூழ்நிலையில் இதயம் வேகமாகத் துடிக்கிறது. சிலருக்கு இதய அதிர்ச்சியால் மரணம் கூட ஏற்பட்டதுண்டு. வெற்றிகூட இப்படியாக சோகத்தில் முடிவதுண்டு. அமெரிக்காவில் 40-45 வயதுக்குள் ஒருவருக்கு இதய நோய் வராவிடில் அவர் தொழிலில் வெற்றி பெற்ற மனிதராக இருக்கமாட்டார் என்ற கருத்து நிலவுகிறது. அப்படி எப்போதும் பரபரப்பான சூழ்நிலையில் அங்கே மக்கள் வாழ்க்கை நடத்துகின்றனர்.

வெற்றி பெற்ற மனிதனுக்கு வயிற்றில் புண் (அல்சர்) உண்டாகவில்லையெனில் அவன் பெற்ற வெற்றி பூரணமானதல்ல என்று கருதப்படுகிறது. வயிற்றில் எத்தனை புண்களோ அந்த அளவிற்கு அவன் வெற்றியாளனாகிறான்! அவன் பாங்கில் எவ்வளவு லட்சம் வைத்திருப்பான், எத்துணை உயர்ந்த பதவியில் இருப்பான் என்றுகூட வயிற்றுப் புண்களின் எண்ணிக்கையை வைத்து ஊகிக்கலாம்!

வசதிகள் குறைவாக உள்ளவனைவிட வசதிகள் மிகுதியாக உள்ளவன் அதிகமாகக் கவலைப்படுவது வாழ்க்கையின் விசித்திரம். ஆகவே அமெரிக்காவில்தான் கவலைப்படுபவர்

களின் எண்ணிக்கை உலகிலேயே அதிகமாக உள்ளது. அமெரிக்கச் சுற்றுலாப் பயணிகள் இந்தியாவைச் சுற்றிப் பார்க்கும் போது குடிசைகளின் வாசலில் ஏழை மக்கள் சிரித்தபடி ஊர்வம்பு பேசி மகிழ்வதைக் கண்டு பிரமித்துப் போயிருக்கின்றனர்.

மும்பை விமானநிலையத்தில் இறங்கி தாராவி சேரி வழியாகச் செல்லும் வெளிநாட்டினர் ஏராளமான குடிசைகளையும் எங்கும் அசுத்தங்களைக் காணும்போது 20ஆம் நூற்றாண்டிலா இப்படி ஓர் அவலம் என்று வருந்தியபடியே செல்வர். அதேசமயம் ஏராளமான சிறு வயதினர் அழுக்கு உடலில் குறைவான அழுக்காடை அணிந்து அல்லது அம்மணமாக இருப்பினும் சத்தம்போட்டு விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள். அழுக்குப் புடவையுடனும் தலைவாராமலும் உள்ள ஏழைப் பெண்கள் சிரித்தபடி அரட்டை அடிப்பதும் வெளிநாட்டவர்க்கு வியப்பூட்டும்.

ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வருபவர்கள் இங்குள்ள தரித்திரர்கள் முகத்திலும் ஒருவிதமான திருப்தி நிலவுவதைப் பார்த்து, அவர்களால் தங்கள் கண்களையே நம்ப முடிவதில்லை. என்ன விஷயம் என்று அவர்கள் யோசிக்கிறார்கள். இதன் பின்னணியில் உளவியல் காரணம் உள்ளது. துன்பப்படும் மனிதன் இதயநோய் பற்றி கவலைப்படத் தேவையில்லை. அவனுக்கு அல்சர் நோயும் வருவதில்லை. துன்பம் தீவிரமான உணர்வைத் தூண்டிவிடாது. அது உணர்வை முழுங்கச்செய்யும். சுகம்தான் தீவிரமாக உணர்ச்சிகளைத் தூண்டி உறுப்புகளைப் பரபரப் படையச் செய்யும்,

தேவேந்திரனுக்கு வாழ்க்கையில் சுகம் மட்டுமே தெரியும். முனிவர் எவராவது கடுந்தவம் செய்தால் அவனது சிம்மாசனம் ஆடத் தொடங்கும். தேவேந்திரன் உணர்ச்சி வசப்பட்டு மும்மூர்த்திகளில் எவரிடமாவது ஓடி, தன்னையும் தன் இந்திரப் பதவியையும் காப்பாற்றித் தருமாறு கெஞ்சி பிரார்த்தனை செய்வான்.

'சாந்தமான புத்தி அமையப் பெற்ற மனிதன் கூட்டமாக மக்கள் வாழும் நகரத்திற்கும் ஓடுவதில்லை. எவருமில்லாத கானகத்திற்கும் ஓடுவதில்லை. அவன் எந்த நிலையிலும், எல்லா

இடங்களிலும் சமமான மனநிலையில் வேரூன்றி நிற்கிறான்.' **(சுலோகம் 276)**

ஞானம் பெற்றவன், சாட்சி மனப்பான்மை உள்ளவன், கூட்டத்தை (கும்பலை) நோக்கிக் கவரப்படமாட்டான். ஒரு மனிதன் தனியாக உட்கார நேர்ந்தால், விரைவில் அவன் மிகவும் சலித்துப்போகிறான். யாரையாவது சந்திக்கக் கிளம்புகிறான். அந்த மனிதனும் தனிமை காரணமாகச் சலிப்புடன் இருக்கிறான். இருவரும் சந்தித்து மகிழ்கின்றனர். ஒன்று இரண்டாகிறது. சில நாள்களில் இருவருக்கும் சலித்துப்போய் மூன்றாம் நபரைத் தேடுகின்றனர். இவ்வாறு கும்பல் என்பது உருவாகிறது. இந்தக் கும்பலுக்குக் கொள்கை என்பதெல்லாம் கிடையாது. தனிமையைப் போக்க, சலிப்பை நீக்க, மேலோட்டமாகப் பழகுவது மட்டுமே கும்பலின் வழக்கமாக உள்ளது.

ஒருவன் எங்கு இருக்கிறானோ, எப்படி இருக்கிறானோ, அதில் முதல் கட்டமாக சுகமாக, திருப்தியாக இல்லையெனில், அவன் எங்குமே சுகமாக இருக்க முடியாது. ஒருவன் எங்கு இருக்கிறானோ, எப்படி இருக்கிறானோ, அதில் அவன் சுகமாக, திருப்தியாக இருந்தான் எனில், அவன் எங்குமே சுகமாக இருப்பான்.

சிலர், "நாங்கள் கும்பலோடு சேரமாட்டோம்; கூட்டம் எங்களுக்குப் பிடிக்கவில்லை, நாங்கள் காட்டுக்குப் போகிறோம்," என்பார்கள். முன்பு இன்னொருவனும் இருந்தால் மகிழ்ச்சி என்றார்கள். இப்போது, இன்னொருவன் என்பவன் இல்லாவிடில் நன்றாக இருக்கும் என்கிறார்கள். இந்த இரண்டு மனநிலைகளுமே இன்னொருவரைச் சார்ந்து இருக்கின்றன. முதலில் இன்னொருவனை நோக்கி ஓடினாய். பிறகு இன்னொருவனை விட்டு ஓடுகிறாய். உன் பார்வை இன்னொருவன் மீதே பதிந்துள்ளது. அது உன்மீது திரும்பிவர வேண்டும். பிறரை நோக்கியோ, பிறரிடமிருந்தோ ஓடாதவன்தான் தன்மீது கவனம் செலுத்திக் கொள்ள முடியும்.

பெண்ணை/ஆணை நோக்கி ஓடாதே. அவர்களிடமிருந்து விலகியும் ஓடாதே. பணத்தை விரும்பியும் ஓடாதே. வெறுத்தும் ஓடாதே. ஓடவே ஓடாதே. நீ எங்கே இருக்கிறாயோ, எப்படி

இருக்கிறாயோ அங்கேயே கடவுள் உனக்கு முழுமையாகக் கிடைக்கிறார். ஓடி எங்கே போகிறாய்? கடவுள் வேறு எங்காவது அதிக அளவில் உள்ளார் என்றா நினைக்கிறாய்? புனேயில் (ஓஷோ ஆசிரமத்தில்) குறைவாகவும் பிரயாகையில் அதிக மாகவும் உள்ளார் என்றா நினைக்கிறாய்?

இந்தியாவிலுள்ள பைத்தியங்களை அதிக எண்ணிக்கையில் பார்க்க விரும்பினால், கும்பமேளா சமயம் சென்று பார்க்கலாம். இந்தியாவிலுள்ள பைத்தியங்களில் பாதிப்பேராவது அங்கே திரள்கிறார்கள். தீர்த்தம் (புனித நீர்) என்பது நம் ஆத்மாவில்தான் இருக்கிறது. தீர்த்தம் ஆடுதல் நமக்குள்ளே நடக்கும் நிகழ்ச்சி.

எது எப்படி உள்ளதோ, எங்கே உள்ளதோ அதில் சுவை கண்டுவிட்டால் முக்தி கிடைத்துவிட்டது, மோட்சம் கிடைத்து விட்டது எனலாம். சுவர்க்கம் வேறு எங்கோ உள்ளதாக பிரமை வேண்டாம். அதனால்தான் அது உன் கண்ணில் படுவதில்லை. நீ வேறெங்கோ பார்க்கிறாய். தொலைவில் பார்க்கிறாய். சந்திரன்-நட்சத்திரங்கள் வரை உன் பார்வை செல்கிறது. ஆனால் கடவுள் மிக அருகில் உள்ளார். நீ உட்கார்ந்துள்ள இடத்தில்தான் அவரும் உட்கார்ந்திருக்கிறார். உனக்கும் அவருக்கும் இடையில் கடுகளவுகூட இடைவெளி இல்லை. நீ எங்கும் தீர்த்த யாத்திரை போக வேண்டாம். உண்மையான தீர்த்த யாத்திரை எல்லா தீர்த்த யாத்திரைகளிலிருந்தும் விடுதலை பெறுவதுதான்.

கோயிலில் கடவுளின் சந்நிதியைச் சுற்றி பிரகாரத்தில் வலம் வருகிறாய். நீ உன்னையே சுற்றிக்கொண்டால் போதும். உன் உடலே கோயில். அதற்குள் கடவுள் வீற்றிருக்கிறார். உன் மனத்தில் பிரமை இருக்கிறது. உன் இருப்பிடம் தவிர மற்ற இடங்களில் கடவுளின் அருள்மழை பொழிவதாக நீ நினைக்கிறாய். உன் மீது தவிர மற்றவர்கள் மீது அருள்மழை வீழ்வதாக நினைக்கிறாய். காசியிலும் ஜெருஸலேமிலும் உள்ளோர் அனைவர் மீதும் கடவுள் அருளா பொழிகிறது? ஞானக் கண் திறக்கவில்லை என்றால் எங்கும் அருள்மழை கிடையாது. ஞானக் கண் திறந்திருந்தால் எங்கும் அருள் இறங்கி வருகிறது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஓடியாடி களைத்து விட்டேன் என்று பக்தன் (மீராபாய்) பாடியதைப் போல் ஞானியும் என்னால் முடிந்ததைச் செய்துவிட்டேன் என்று கூறுவதுண்டா?**

முக்தி உணர்வில் பாடுவது இயற்கை. அது சங்கீத விதிகளின்படி அமைந்திருக்க வேண்டியதில்லை. பக்தன் ஒரு விதமாகவும், ஞானி வேறு விதமாகவும் பாடுவார்கள். பக்தன் வெளிப்படையாகப் பாடுவான். ஞானி பாடுவது வெளியே தெரியாது. இந்த வேறுபாடு வாய்விட்டுச் சிரிப்பதற்கும், புன்முறுவலுக்கும் இடையேயான வேறுபாடு போன்றது.

ஞானி சென்றடையும் இடத்திற்கே பக்தனும் போய்ச் சேர்கிறான். அவர்களின் வழிகள்தாம் வெவ்வேறு. பக்தன் கடவுளுடன் தன்னை மிகவும் நெருக்கமாக இணைத்துக் கொள்வதால் கடைசியில் அவனே மிஞ்சுவதில்லை. அவன் 'நான்' என்னும் உணர்வைக் கடவுளின் பாதங்களில் அர்ப்பணித்து விடுகிறான். அவன் தனக்குள்ளே பார்க்கத் தேவையெழுவ தில்லை. அவன் எல்லா வெளிப் பொருள்களிலும் கடவுளை தரிசித்துவிடுகிறான். ஆகவே அவன் கல்லையும் வணங்குகிறான். படைப்பு எல்லாம் அவருடையதுதானே. பக்தன் 'நான்' என்னும் உணர்வை மூழ்கடித்து, 'நீ' என்பதை விசாலமாக்குகிறான். ஒரு கட்டத்தில் 'நான்' என்பது முற்றிலுமாகக் கரைந்துபோய் நீ என்பதே மிஞ்சுகிறது. அப்போது பக்தன் ஆடிப்பாடுகிறான். அதற்கு மேலும் ஒரு கட்டம் உள்ளது. 'நீ' என்பதும் காணாமல்போய் மகாசூனியம் நிலவுகிறது.

பக்தனின் கண்களின் வெளிப்புறம் நோக்குகின்றன. ஆகவே அவன் பூஜை செய்கிறான்; அர்ச்சனை செய்கிறான்; ஆரத்தி காண்பிக்கிறான்; ஆடிப் பாடுகிறான்; சிலையை அலங்கரிக்கிறான். வெளியே இருக்கும் கடவுளில் தன்னை மூழ்கடித்துக் கொள்கிறான்.

ஞானி 'நீ'யிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்கிறான். ஆகவே மகாவீரர் தமது மொழியில் 'அப்பா கஸா பரமப்பா' என்கிறார். அதாவது, ஆத்மாவே பரமாத்மா. சமஸ்கிருதத்தில் இதையே அஹம் ப்ரஹ்மாஸ்மி' (நான் கடவுள்) எனக் கூறுகிறார்கள். ஞானிக்கு ஆன்மப் புரட்சி வெளியே நிகழ்வதால் அவன் கூத்தாடுவதில்லை.

பக்தன் அன்பின் கண்களைத் திறக்கிறான். ஞானி தியானத்தின் கண்களைத் திறக்கிறான். இவை வெவ்வேறு அர்த்தம் தரும் வாக்கியங்களாகத் தோன்றுகின்றன. ஏனெனில் இவை இரண்டு விதமான அணுகுமுறைகள். ஆனால் இறுதி முடிவு (final goal) ஒன்றேதான்.

வீடு கட்டுகிறோம். அதை எவ்வளவு வலுவாகக் கட்டி னாலும் நூறு ஆண்டுகள் கழித்தாவது அது இடிந்துவிழத்தான் செய்யும். ஆனால் மணலின் துகளை (ஒரு மணல்) அழிக்க உபாயம் கிடையாது. இதை விஞ்ஞானிகளும் ஒப்புக்கொள் கிறார்கள். ஏன் தெரியுமா? நாம் வீட்டைக் கட்டினோம். ஆனால் மணல் துகள்களை நாம் உண்டாக்கவில்லை. தயாரிக்கப்படுவது பிறகு அழியும். எப்பொழுதும் இருந்துவருவது என்றும் இருக்கும். நிர்மாணிக்கப்பட்டது நஷ்டப்படும். புதிதாகப் பிறவாதது நிரந்தரமாக இருக்கும்.

மனிதன் தன் தயாரிப்புகள் அழிவதைப் பார்க்கிறான். இதில் அகால மரணம் அடையும் குழந்தைகளும் அடங்குவர். இதனால் அவனுக்கு பயம் உண்டாகிறது. மனத்தில் கவலைகள் நிறைகின்றன.

ஆகவே உனக்குள்ளே என்றும் அழியாதவனாக இருப்பவனைத் தேடு. அப்போது நீ தியானி ஆவாய். ஞானி

ஆவாய். என்றும் அழியாத கடவுளை நீ வெளியே தேடினால் பக்தன் ஆவாய். எவராக ஆக வேண்டும் என்பது உன் இஷ்டம். இரண்டு வழிகளிலும் கடவுளை அடையலாம். மீரா பக்தி மூலமும், மகாவீரர் ஞானம் மூலமும் கடவுளை அறிந்துகொண்டனர். ஆகவே எந்த வழியில் போவது என்று அதிகமாகக் கவலைப் படாதே. அவ்வாறு குழப்பமடைந்து எந்த வழியிலும் செல்லாமல் ஒரே இடத்திலேயே நின்றுவிடாதே. உன் மனத்திற்கு எந்தப் பாதை உகந்ததாகத் தெரிகிறதோ அதில் நடைபோடு. அப்போது நீ கைவிட்ட இன்னொரு வழியை முற்றிலுமாக மறந்துவிடு.

உனக்கு பக்திப் பேச்சு பிடித்திருந்தால், நாரத பக்தி சூத்ர வழிகளில்* உன் மனம் நெகிழ்ந்தால், விஷயம் முடிந்தது. அதையே தொடரு. ஞானிகளை மற. நீ கிளம்பு. நாரதரின் படகில் பயணம் செய்.

அவ்வழி உன்னைக் கவரவில்லையாயின், புத்தர்-மகாவீரர்-பதஞ்சலி-அஷ்டாவக்ரர் ஆகியோரின் வழிகாட்டுதல் உனக்குப் பிடித்திருந்தால், உனக்குள் திடீரென ஒரு சன்னல் திறப்பதுபோல் உணர்ந்தால், புதிய காற்றும் புதிய ஒளியும் உன்னை உள்புறமாக வருடினால், நாரதரையும் மீராபாயையும் மற. அஷ்டாவக்ரருடன் கைகோத்துச் செல்.

மேலே-மேலே நடந்தால்தான் சேருமிடத்தை அடைய முடியும். யோசித்தபடியே இருக்கும் எவனும் எங்கும் போய்ச் சேர்வதில்லை. அதிகமாக யோசிக்காதே. பாணியைத் தெரிந்தெடு. அதில் நடக்கத் தொடங்கு.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! ஆத்மஞானி என்பவன் இருக்கவில்லை. அவன் இல்லாமலும் போகவில்லை என்று கூறுகிறீர்கள். இது எப்படி சாத்தியப்படும் என்று எனக்குப் புரியவில்லை.**

---

* ஒன்பது வழிகள் (நவதா பக்தி): கேட்டல், பாடுதல், நினைத்தல், திருவடி தொழுதல், அருச்சித்தல், வந்தனம் (நன்றி தெரிவித்தல்), தாசன் (அடிமை) உணர்வு, தோழமை, தன்னை சமர்ப்பித்தல் (ஆத்ம நிவேதனம்).

முரண்பாடு மேலோட்டமானதுதான், வெளித்தோற்றம்தான். முரண்பாடு காரணமாக இதன் அர்த்தம் உன் அறிவிற்குப் பிடிபடவில்லை. எங்கே முரண்பாடு உள்ளதோ அங்கே சத்தியம் இருக்காது என்று அறிவு ஒரு கொள்கையை வகுத்துக் கொண்டுள்ளது. அரிஸ்டாட்டிலின் நியாய சாஸ்திரம் இதைத்தான் எடுத்துரைக்கிறது. ஒருவன் 'அறையில் நாற்காலி இருக்கிறது அதேசமயம் அது இல்லை' என்று கூறினால் அவனைக் குழப்பவாதி என்று நினைப்பாய்.

தர்க்க இயலின்படி, முரண்படுகின்ற இரண்டில் ஒன்றுதான் உண்மையாக இருக்கும். 'ஒருவன் உயிருடன் உள்ளான்; இறந்தும் போய்விட்டான்' என்றோ, 'இவன் இளைஞன் அத்துடன் கிழவன்' என்றோ, 'ஒருவன் திருடன் அத்துடன் அவன் ஒரு மகான் என்றோ கூறினால், எங்கேயோ தப்பு என்று தர்க்க இயல் கூறும். இரண்டில் ஒன்று தவறாக இருக்கும் என்று கூறும். இரண்டும் ஒரே சமயம் சரியாக இருக்க முடியாது. ஆனால் தர்க்கம் தோல்வி யுறுவதும் உண்டு.

ஒரு கொலை வழக்கு. ஒரு சாட்சி, "கொலை நான்கு சுவர்களுக்குள்ளேயே, வீட்டுக்குள்ளேயே நடந்தது." என்றான். அடுத்த சாட்சியோ, "கொலை திறந்த ஆகாயத்தின் கீழே வெட்டவெளியில் நடந்தது." என்றான்.

நீதிபதி இடைமறித்தார். "இந்த இரண்டு சாட்சியங்களும் முரண்படுகின்றன. இரண்டு சாட்சிகளில் ஒருவன் பொய் சொல்கிறான்." என்று கருத்துத் தெரிவித்தார்.

அப்போது மூன்றாவதாக ஒருவன் எழுந்து, "ஐயா, இவர்கள் இருவர் கூறியதும் உண்மைதான். கொலை வீட்டிற்குள் நடந்தது. அதே சமயம் திறந்த வெளியில் நடந்தது. ஆனால் சுவர்களுக்கு மேல் செங்கல் அடுக்கிக் கூரைபோல் எழுப்பப்படவில்லை. வீடு புதிதாகக் கட்டப்பட்டு வருகிறது." என்று தெளிவுபடுத்தினார்.

இங்கே தர்க்கம் தோல்வி காண்கிறது. முரண்பாடுகளும் உண்மையாக இருக்க முடியும். அவற்றிற்கு அப்பால் இரண்டையும் உள்ளடக்கிய பெரிய உண்மையும் இருக்கக்கூடும். வாழ்க்கை என்பது தர்க்கத்தைவிடப் பெரியது.

ஆத்மஞானி என்று தனியாக ஒருவன் இருப்பதில்லை. அவன் தன்னை சூனியம் ஆக்கிக்கொண்டு கடவுளின் அம்சமாகிவிடுகிறான். 'நான்' என்னும் உணர்வை உபநிடத நிலையையும் அவன் கடக்கிறான். ஏனெனில் இந்த உபநிடத வாக்கியத்தில் 'நான்' உணர்வு நீடிக்கிறது. அதற்கு அழுத்தம் தரப்படுகிறது. 'பிரம்மம்' என்பது நிழல்போல் பின்னுக்குத் தள்ளப்படுகிறது. ஆத்மஞானியோ இருப்பது பிரம்மம் மட்டும்தானே. இதில் 'நான்' என்பது எங்கிருந்து வந்தது என்று யோசிப்பான்.

ஆத்மஞானி என்பவன் இல்லாதவன் என அஷ்டாவக்ரர் கூறும்போது அவனிடம் தனியான ஆளுமையோ, அகங்காரமோ கிடையாது என்ற அர்த்தத்தில் கூறுகிறார்.

ஜென் துறவி போகோஜூவிடம் ஒரு சீடன் அவ்வப்போது வந்து தனது அனுபவத்தைக் கூறுவான். அவர் இது போதாது என்று விரட்டி விடுவார். ஒருமுறை அவன் யோகப் பயிற்சி மூலம் தனக்குள் குண்டலினி சக்தி விழித்துவிட்டது என்றான். இன்னொரு முறை இதய கமலம் மலர்ந்தது என்றான். வேறொரு சமயம் உச்சந்தலையில் ஸஹஸ்ரார சக்கரம் திறந்துகொண்டது என்றான். குரு அவனை உதைத்து வெளியே தள்ளினார். "உனக்கு சூனியத்தின் அனுபவம் கிடைக்காத வரையிலும் இங்கே வராதே." என்றார்.

பல மாதங்கள் கழிந்தபின் சீடன் மீண்டும் வந்தான். அவன் மகிழ்ச்சியாகத் தெரிந்தான். குருவை வணங்கி, "நீங்கள் நீண்ட காலமாக என்னிடம் எதிர்பார்த்ததை நிறைவேற்றி விட்டேன். நான் இப்பொழுது சூனியமாக ஆகி இங்கு வந்துள்ளேன்." என்று அறிவித்தான்.

போகோஜூ கையிலிருந்த தடியை அவன் மீது வீசினார். "நீ பெற்றதாகச் சொல்லும் சூனியத்தை வெளியே எறிந்துவிட்டு வா. 'நான் சூனியமாகிவிட்டேன்' என்று உரிமை கொண்டாடுகிறாயே. அப்படி உரிமை கொண்டாடுபவன் யார்? இது அகங்காரத்தின் புதிய ரூபம். இது புதிய முகமூடி. சூனியத்தையும் தூக்கிப் போட்ட பிறகுதான் நிஜமான, முழுமையான சூனிய நிலை ஏற்படும். பிறகு வாயால் சொல்ல எதுவும் மிஞ்சியிருக்காது. நான்

என்பதும் மறைய வேண்டும். இது சூனியம் என்னும்போது சூனியம் மிஞ்சியிருக்கிறது. அதுவும் நீங்கினால்தான் சூனியநிலை உண்டாகும்.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! மீண்டும்–மீண்டும் கடந்த காலத்தை நோக்கியே என் மனம் செல்கிறது. இது வீணான வேலை என்று தெரியும். ஆனால் பழக்கத்தை விட முடியவில்லையே ஏன்?**

நீ உண்மையிலேயே கடந்த கால நினைப்பை வீண் செயல் என்று நினைக்கிறாயா! இது பற்றி எனக்கு சந்தேகமாக உள்ளது. அப்படி நீ நினைத்திருந்தால் நிச்சயமாக அப்பழக்கத்தை விட்டிருப்பாய். நான் அவ்வாறுதான் பழக்கத்தைத் துறந்தேன். வீண் என நினைப்பதும், பழக்கத்தைக் கைவிடுதலும் ஒரேசமயம் நிகழ்கின்றன. ஒருமுறை கதவென நினைத்து சுவர் வழியே வெளியே செல்ல முயன்றபோது இடித்துவிடுகிறது. அதன் பிறகு கதவைக் காட்டினாலும், 'சுவர் வழியே போக முயல்வதுதான் என் வழக்கம்' என்று சொல்வாயா? புத்தர், கிருஷ்ணர், மகாவீரர், இயேசுநாதர் என்று பலர் அறிவுரைகள் கூறியும், உன் அனுபவத்தால்—சுவரில் இடித்துக் கொண்ட பிறகு—கிடைக்கும் அறிவுதான் உன் பழக்கத்தை மாற்ற முடியும்—கதவு வழியாகப் பார்ப்பதைவிட நம் கண்களால் பார்ப்பதுதான் பாதுகாப்பானது.

முதியவர் ஒருவர். பார்வையற்றவர். சிகிச்சை செய்தால் பார்வை கிடைக்கும் என்று மருத்துவர்கள் கூறினார்கள். ஆனால் முதியவர், "எனக்கு 80 வயதாகிறது. இனி சிகிச்சை செய்வதால் என்ன லாபம்? எந்த நேரமும் இறக்கக்கூடிய எனக்கு இனி பார்வை கிடைத்து என்ன செய்யப் போகிறேன்? வீட்டில் மனைவி, எட்டு மகன்கள், எட்டு மருமகள்கள் எல்லோருக்குமாகச் சேர்த்து 34 கண்கள் உள்ளன. அவற்றின் உதவி எனக்குப் போதுமே," என்றார்.

ஒருநாள் இரவு வீட்டில் தீப்பிடித்துவிட்டது. எல்லோரும் அங்குமிங்குமாக ஓடினார்கள். முதியவர் சொன்ன 34 கண்களும்

கிழவரை மறந்து வெளியே ஓடிவிட்டன! உள்ளே மாட்டிக்கொண்ட கிழவரால் வழி கண்டுபிடிக்க முடியவில்லை.

ஓடிப்போன குடும்பத்தினர் வெளியே நின்று. "கிழவரைக் காப்பாற்றுங்கள்," என்று கூக்குரலிட்டார்கள், முதலில் தீக்கு பயந்து ஓடும்போது அவர்களுக்குத் தங்கள் நினைவுதான் இருந்தது. வெளியே நின்றபடியே புலம்பினர். உள்ளே கிழவர் தீயில் எரிந்து கருகிப்போனார்.

என் கண்கள் உனக்குப் பயன்படா. உன் கண்கள் மூலமாகவே எதையும் தேட வேண்டும். இதை புத்தர் 'நீயே உனக்கு தீபமாகு' என்று கூறினார். அவர் உலகை விட்டுப் பிரியும்போது சீடர்கள் அழுதனர். புத்தர் அப்போது, "நான் போவதால் உங்களுக்கு என்ன நஷ்டம்? இது வரையிலும் நீங்கள் கண்ணை மூடிக்கொண்டு என்னையே பின்பற்றினீர்கள். இனியாவது நீங்கள் உங்கள் கண்களால் பாருங்கள்," என்று உபதேசித்தார்.

நீ சாஸ்திரங்களைப் பயின்றாய். ஞானிகளின் உபதேசங் களைக் கேட்டாய். ஏராளமான மந்திரங்களை மனப்பாடம் செய்தாய். ஆனால் இவையெல்லாம் பிறர் தந்தவை. நீ சுயமாக அனுபவித்து இவற்றைப் படைக்கவில்லை.

ஒருவன் கடந்த காலத்தை நினைக்கிறான் என்றால் அதற்கு முக்கியமான காரணமிருக்கும். குழந்தைகள் எதிர்காலத்தையும், இளைஞர்கள் நிகழ்காலத்தையும், முதியவர்கள் கடந்த காலத்தையும் நினைத்துப் பார்க்கிறார்கள். நீ கடந்த காலத்தை அதிகமாக நினைக்கத் தொடங்கினால் உனக்கு முதுமை ஆரம்பமாகி விட்டது என்று பொருள்.

சிறுவர்களுக்குக் கடந்த காலம் என்று எதுவும் கிடையாது. அவர்களுக்கு எல்லாமே எதிர்காலத்தில்தான் உள்ளது. சிறு வயதில் அவர்கள் சுயசரிதையா எழுத முடியும்?

இளைஞன் நிகழ்காலத்தில் திளைக்கிறான். இன்பங்களை அனுபவிக்கிறான். போக வாழ்க்கையில் ஈடுபடுகிறான். எதிர்ப்புகள், போராட்டங்களும் அவனுக்கு சவாலாக அமைந்து

வாழ்க்கைக்குச் சுவையூட்டுகின்றன. அவனுக்கு கடந்த காலம் என ஒன்றிருந்ததே மறந்துபோகிறது. இளமையே நிரந்தரம் என்பதுபோல் வாழ்வதால் அவனுக்கு எதிர்காலச் சிந்தனையே எழுவதில்லை.

வயதானவனின் பார்வை பின்னோக்கி இருக்கிறது. அவன் எதிர்காலத்தை நினைக்க அஞ்சுகிறான். அங்கே மரணமும் இருட்டும்தானே மிஞ்சியுள்ளது. கடந்த காலத்தில் அவனது வாழ்க்கையில் ஏராளமான சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. சுயசரிதை எழுதக்கூடிய அளவிற்கு நீண்ட பயணம் நிகழ்ந்திருக் கிறது.

கடந்த காலத்தில் நீ ஆர்வம்கொண்டால் நீ முதியவனாகி விட்டாய். இது முதுமையின் அறிகுறி (remembrance of things past). கிழவனுக்கு உடல்வாழ்க்கை குறைவு. அவன் மனத்தால அதிகமாக வாழ்கிறான். மனத்திற்குத் திரும்பிப் பார்ப்பது பிடித்தமானது. முன்பு நடந்தவற்றை, செய்தவற்றை, மனம் மிகைப்படுத்திப் பார்க்கிறது. இது உன்னுடைய சினிமா, உனது திரை, நீயே பார்ப்பவன் (ஆடியன்ஸ்) பிறகு ஏன் கருமித்தனம்?

சாவு நெருங்கிவிட்டது. வாழ்க்கையில் சம்பாதித்தவை என்ற பெயரில் மிச்சமிருப்பது பழைய நினைவுகளின் குவியல் மட்டுமே. நீ உயிர் வாழ்வதை உறுதிப்படுத்திக்கொள்ள உன்னிட முள்ள உபாயம் இந்த நினைவுகளைப் பற்றிக் கொண்டு அவற்றை அசைபோடுவதுதான்.

உலர்ந்த மரத்தைப் பற்றிக்கொண்டு கொடி கிடப்பதைக் காணலாம். ஒரு சூழ்நிலையில் அதற்கு வேறு ஆதாரம் இல்லாமல் போயிருக்கும். முதியவருக்கும் வாடிப்போன, முடிந்துபோன சம்பவங்களைத் தவிர வாழ்க்கையை நடத்த வேறு ஊன்றுகோல் இல்லை. குரங்கு இறந்துபோன குட்டியை நீண்ட நேரம் கெட்டியாகப் பிடித்திருப்பதுபோல்தான் இதுவும்.

கடந்த காலம் செத்துவிட்டது. அது சாம்பல் குவியல். சிதை. அதன் மீது படுத்திருக்காதே. மிஞ்சியுள்ள எதிர்காலத்தைக் கவனிப்பது அவசியம். ஏனெனில் எதிரே சாவு தெரிய ஆரம்பித்துவிட்டது. இருள் சூழப்போகிறது. ஆகவே உன்

கண்கள் எதிர்காலத்தில் பதிய வேண்டும். பழைய நினைவுகளில் நேரத்தை வீணாக்காதே. அதற்குப் பதிலாக மிஞ்சியுள்ள காலத்தைக் கவனிப்பது அர்த்தமுள்ளதாக இருக்கும்.

சிறுவர்கள் எதிர்காலம் பற்றி நினைப்பது இயல்பானது. ஆனால் மதிப்பற்றது. இளைஞன் நிகழ்காலத்தையே பார்ப்பது இயற்கையானது, ஆனால் மதிப்பற்றது. முதியோர் திரும்பிப் பார்ப்பது சுபாவமானது, ஆனால் அதுவும் மதிப்பற்றது.

சிறுவர்கள் திரும்பிப் பார்க்க முடியுமானால், முந்திய பிறவியை நினைவுகூர முடியுமானால் அது அபூர்வமான நிகழ்ச்சி. இளைஞன் முன்னும் பின்னும் பார்க்க முடியுமானால்; நிகழ் காலத்தை விட்டு அவ்வப்போது வெளியே வரமுடியுமானால், அவனது வாழ்க்கையில் விவேகம் குடிகொள்ளும். முதியவர் எதிர்காலத்தைக் கவனிப்பாராயின் சாவை சிரமமின்றிக் கடந்துவிடுவார்.

பார்க்கும் திறன் ஒன்றேதான். திசையை மட்டும் சரிப்படுத்தி னால் போதும். முதுமையிலும் குழந்தைகளைப் போல் எதிர்காலக் கண்ணோட்டம் கொண்டிரு. சிறுவர்கள் கடந்த காலத்தை நினைவுகூர முடியுமானால் அது முற்பிறவியை ஞாபகமூட்டும். இளைஞன் நிகழ்காலத்தில் வாழ்வதுடன், கடந்த காலம், எதிர்காலம் இரண்டையும் கவனித்தால் அவனுடைய ஆசைகள் கட்டுப் பாட்டுக்குள் இருக்கும். சிறுவயதில் பணம், பதவி, சமூக கௌரவம் பற்றி நினைத்ததில்லை என்பது ஞாபகம் வரும். எதிர்காலம் பற்றி நினைக்கையில் சாவு அவன் வாழ்க்கையில் திரட்டியதையெல் லாம் துடைத்தழித்துவிடும் என்று எச்சரிக்கையாக இருப்பான்.

குழந்தைக்கு சாவு என்றால் தெரியாது. ஆனால் அது பொம்மை உடைந்தால் எந்தப் பழைய சாவு நினைவு வந்ததுபோல் அழுகிறது! ஞானி பிறரது சாவையும் அமைதியாகக் காண்பான். தனது மரணப்படுக்கையிலும் தனக்காக அவன் அழுவதில்லை. பொம்மை உடைந்தாலும் குழந்தைக்கு நிஜமான சாவுபோல் தோன்றுகிறது. நிஜமான சாவு நேர்ந்தாலும் ஞானிக்கு அது இதுவரை ஆட்டம்போட்ட பொம்மை உடைந்ததுபோல்தான் தெரிகிறது.

முதுமையில் கடந்தகால நினைவுகள் எழுவதன் காரணம் இளமைக்கால வாழ்க்கையைச் சரியாக வாழாமல் போனதுதான். அப்போது இளமையின் பரபரப்பில் எதையும் சரியாகச் செய்திருக்க மாட்டோம். பல பணிகளை அரைகுறையாக விட்டிருப்போம். பல பணிகள் பாதியில் தொங்கியபடி இருக்கும். மனம் அவற்றைப் பூர்த்திசெய்ய ஏங்குகிறது. முதுமையில் கற்பனை மூலமாகத் தான் அவற்றை நிறைவேற்றிக் கொள்ள முடியும். எனவே நீ எதைச் செய்கிறாயோ, அதைச் சரியான முறையில் செய்துமுடி. அவசரப்படாதே.

மனிதன் செயல்களைப் புரியும்போதும் சிரமப்படுகிறான். செய்யும் காலம் செய்யாமல் போனாலும் வருந்துகிறான். எல்லோருமே தங்கள் குழந்தைப் பருவம் இனிமையாக இருந்ததாகக் கூறுவார்கள். ஆனால் குழந்தைகளோ எவ்வளவு சீக்கிரமாகத் தாங்கள் பெரியவர்களாவோம் என்று எதிர்பார்க்கிறார்கள். ஏனெனில் குழந்தைப் பருவத்தில் அவர்களுக்கு எந்த சுதந்திரமும் இல்லை. பிறர்க்கு அடங்கியே வாழ வேண்டியுள்ளது. வெளியில் விளையாடப் போவதற்குக்கூட சுலபத்தில் அனுமதி கிடைப்பதில்லை. தூக்கம் வராதபோதும் அவர்கள் படுக்கையில் தள்ளப்படுகிறார்கள். காலையில் தூக்கம் கலையாவிடினும் கட்டாயப்படுத்தப்பட்டு எழுப்பப்படுகிறார்கள். பள்ளிக்கூடம்போக எந்தச் சிறுவன் சிறுமியும் விரும்புவதில்லை! அவர்கள் கண்ணீர் சிந்தினாலும், சீருடை அணிவிக்கப் பெற்று, பெற்றோர்களால் பலவந்தமாகப் பள்ளிக்கு அனுப்பப்படுகிறார்கள்.

சிறுவர்கள் தமக்கப் பிடித்ததை, வாய்க்கு ருசியானதைச் சாப்பிட முடிவதில்லை. அம்மா கீரைக்கூட்டு செய்கிறாள். அதில்தான் வைட்டமின்கள் அதிகம் என்கிறாள். ஐஸ்க்ரீமில் வைட்டமின்களை அதிகம் சேர்த்திருக்கக்கூடாதா என்று சிறுவர்கள் கடவுளை நொந்து கொள்கின்றனர். கீரை சாப்பிட்டால் தான் உடம்பு வலிமை பெறும் என்று வாயில் திணிக்கிறாள். குழந்தைப் பருவம் என்னும் சிறையிலிருந்து எப்பொழுது விடுதலை கிடைக்கும் என்று சிறுவர்கள் ஏங்குகின்றனர். ஆனால் இவர்களே வளர்ந்தபின் குழந்தைப் பருவம் இனிமையாக

இருந்தது என்கின்றனர். கால ஓட்டம் அதற்குத் தங்கமுலாம் பூசிவிடுகிறது.

மனிதனுக்கு இரண்டு வகையில்தான் ஆறுதல் கிடைக்க முடியும். கடந்த காலம் அருமையாக இருந்தது அல்லது எதிர்காலம் நல்லபடியாக இருக்கும் என்பவையே அவை. இன்று அல்லது தற்காலம் என்பது துன்பகாலம்தான். எங்காவது சுகம் வேண்டும். அது போலியான சுகமாயிருந்தாலும் சரி. ஒருகாலத்தில் சுகமாய் இருந்தோம் என்னும் கற்பனையே சுகம் தருவதாய் உள்ளது. அல்லது இனியாவது சுகமாய் இருப்போம் என்று நம்புவது இனிக்கிறது.

உலகில் இரண்டு விதமான மக்கள்தாம் உள்ளனர். இரண்டு விதமான சமூகக் கண்ணோட்டங்கள்தாம் நிலவுகின்றன. இந்து மதம், ஜைன மதம், புத்த மதம் முதலியவை பொற்காலம் சென்றுவிட்டது; சத்ய யுகம் முடிந்துவிட்டது; அவை மீண்டும் வராது; இனி என்றும் துன்பம்தான் என்கின்றன.

கம்யூனிசம், சோஷலிசம் முதலியவற்றைப் பின்பற்றுவோர் இனிமேல்தான், இன்னும் கொஞ்சம் காலத்தில் பொற்காலம் வரப்போகிறது என்று அறிவிக்கிறார்கள். உலக மதங்களுக்குக் கிழடு தட்டிவிட்டது. அவற்றின் கண்ணோட்டம் பழைமையானது. அவை பின்னோக்கிப் பார்க்கின்றன. கம்யூனிசம் முதலியவை குழந்தைப் பருவத்தில் உள்ளன. அவை எதிர்காலத்தையே நோக்குவது இயற்கையே. ஆனால் இரண்டுமே பிரமை வசப்பட்டுள்ளன. நீ பொற்காலத்தைக் கடந்த க்காலத்திலோ, எதிர்காலத்திலோ எங்கு வைத்தாலும், நீ உன்னையே ஏமாற்றிக்கொள்கிறாய்.

வாழ்க்கையின் கசப்பிலிருந்து தப்பிக்கப் பார்க்காதே. அதை அனுபவி. அது குறித்து விழிப்புப் பெறு. இன்று உன் எதிரே என்ன உள்ளதோ அதைக் கண்களை விரித்து நன்றாகப் பார். மனத்தைப் பின்னால் சரியவோ, முன்னால் ஓடவோ விடாதே.

மக்கள் புலம்புகிறார்கள். 'சுகம், அமைதி, அழகு, ஆரோக்கியம் எல்லாம் போச்சு!' என்று கதறுகிறார்கள். நீ இந்த வம்பில் மாட்டிக்கொள்ளாதே. இவ்வாறு புலம்புவது வீண்.

மேற்கண்ட எதையும் தடுக்க முடியாது. எனவே இப்படிக் கவலைப்பட்டு உனது சக்தியை விரயம் செய்யாதே.

இந்த சக்தியை நீ தியானப் பயிற்சியில் ஈடுபடுத்தலாம். அல்லது கண்களை மூடியபடி எண்ணங்களே எழாத மன நிலையை உருவாக்கிக் கொள்வதில் இந்த சக்தியைச் செலவழிக்கலாம். இந்த சக்தியை பூஜையாக, பிரார்த்தனையாக மாற்றலாம். தியானம் அல்லது பிரார்த்தனை மூலம்தான் உண்மையான சுகம் அல்லது மகாசுகம் என்னும் நிலையை அடையலாம். இந்த உயர்தர சுகத்தை வேறு வழியில் யாரும் அடைந்ததில்லை, அடையவும் முடியாது.

முன்பு, கடந்த காலத்தில், நிகழ்ந்ததை இப்போது ஏன் திரும்பிப் பார்க்கிறாய்? பழைய கணக்குகளை ஏன் மீண்டும் அசை போடுகிறாய்? சென்றதினி மீளாது. அவை மீண்டும் நடைபெறா. உலகில் எதுவும் யார் வாழ்க்கையிலும் மீண்டும் அப்படியே நிகழ்வதில்லை. இறந்த காலம் மீண்டும் பிறப்ப தில்லை.

மனிதன் ஒழுங்காக, முழுமையாக வாழ்ந்தால், அவன் தினமும் கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற்றபடி முன்னேறுவான். அன்றாட வாழ்க்கையிலும் நாம் திருப்தியாக வாழ்ந்த நாள்கள் நம்மைப் பிறகு அழுத்துவதில்லை. என்றாவது நாள் முழுதும் எந்த வேலையும் சரிவர நடக்காமல் வீணானால் அந்த நாளை மறக்க முடியாதபடி நமக்குக் குற்ற உணர்வு மேலிடுகிறது.

கடந்த காலத் தூசியை உன் மனக் கண்ணாடியில் படிய விடாதே. தூசி படிந்த கண்ணாடி தனது உபயோகத்தை இழக்கும். தூய கண்ணாடியில் பொருள் தெளிவாகத் தெரிவதைப்போல், மனமென்னும் கண்ணாடி தூய்மையாக இருந்தால் அதில் சத்தியம் காட்சி தரும்.

பழக்க தோஷம், கைவிட முடியவில்லை என்கிறாய். பழக்கத்தைத் திடீரென முறிக்கும் முயற்சிக்குப் பதிலாக அதைச் சரியாகப் புரிந்துகொள். அதன் மீது சிந்தனையைச் செலுத்து.

சிலர் என்னிடம் வந்து, "இருபது ஆண்டுகளாக சிகரெட் பிடிக்கிறோம். அதை நிறுத்த விரும்புகிறோம். பல முறை முயன்று பார்த்தோம். சிகரெட் பிடிக்காமல் இரண்டு நாளைக்கு மேல் தாங்க முடிந்ததில்லை. அந்த இரண்டு நாளும் நரக வேதனைதான். சிகரெட்டை நிறுத்தி அந்த அளவிற்கு ஏன் கஷ்டப்பட வேண்டும்? அத்தகைய கஷ்ட வாழ்வில் என்ன சாரம் இருக்கிறது? சிகரெட்டால் க்ஷயரோகம், புற்றுநோய் வரும் என்று பயமுறுத்துகிறார்கள். அவை வரும்போது அல்லது வந்தால் அப்போதைக்குப் பார்த்துக் கொள்வோம். இந்த சமயம் நல்ல உடல்நலத்துடன்தானே இருக்கிறோம்," என்கிறார்கள்.

நான் அவர்கள் வழியிலேயே சென்று ஆலோசனை கூறுவதுண்டு. "நீ சிகரெட் பழக்கத்தைக் கைவிட முயற்சி செய்யாதே. நீ அந்தப் பழக்கம் குறித்து யோசித்துப் பார். புகையை நிதானமாக உள்ளே இழுத்து, சற்று நிறுத்திவைத்து, நிதானமாக வெளியேவிடு. நடுவில் நீ இருக்கும் மெய்ம்மறந்த நிலையில் யோசி. நீ ஏன் சிகரெட் பிடிக்கிறாய்; பிடித்து முடித்தபின் குற்றவுணர்வும் வாயிலும் மனத்திலம் கசப்புத் தோன்றுகிறதல்லவா; உன் அருகில் வரமுடியாதபடி உன் வாயிலும் உடையிலும் புகைமணம் படிந்துவிடுகிறதல்லவா; பொருளாதார இழப்பு எவ்வளவு; வீட்டில் புகைத்தால் குழந்தைகள் உன்னைப் பின்பற்றுவர்; பொது இடங்களில் பிடிக்க முடியாதபடி கெடுபிடி. கண்ணாடியை எதிரே வைத்துக்கொண்டு புகைத்துப்பார். நீ ஹீரோவாகத் தெரிய மாட்டாய். கோமாளிபோல் தோன்றுவாய்!

"சிகரெட்டால் சந்தோஷம் எங்கே ஏற்படுகிறது? அதை உதட்டில் வைக்கும்போதா? புகையை உள்ளே இழுக்கும்போதா? அதை வெளியே விடும்போதா? வெளியே என்ன வருகிறது? இருமல்தானே வருகிறதே; கோழைதானே வருகிறது; சில சமயம் கண்ணில் நீர் வருகிறது. உதடுகள் கறுத்து விடுகின்றன," என்று விளக்கி வருகிறேன்.

இப்போதெல்லாம் அரசாங்கம் சிகரெட் பெட்டியின் மீது 'புகை பிடிப்பதால் புற்றுநோய் வரும்' என்றெல்லாம் அச்சிட்டு எச்சரிக்கிறது. அமெரிக்க அரசாங்கம் இந்த நடவடிக்கையை

மேற்கொண்டபோது முதல் மாதம் மட்டும் சிகரெட் விற்பனை குறைந்தது. பிறகு மக்களால் பழக்கத்தை விடமுடியாமல் பழைய நிலையே திரும்பிவிட்டது. உயிர் போய்விடும் என்று அச்சிட்டாலும் பலன் இருக்காது. என்றாவது ஒருநாள் போகப்போகிற உயிர்தானே என்றும், தலைவிதிப்படிதான் நடக்கும் என்றும், சிகரெட் பிடிப்பவர்கள் எல்லோரும் நடுவயதிலேயே இறந்து விடவில்லை என்றும் பழக்கத்தை விடமுடியாதவர்கள் வாதம் செய்கிறார்கள். உயிர் வாழ்வதில் வெறுப்படைந்தவர்கள் சிகரெட் மூலம் சீக்கிரம் சாவைத் தேடிக்கொள்ளலாமே என்றும் நினைப்பார்கள்.

முல்லா நஸ்ருத்தீனிடம் குடிப் பழக்கம் இருந்தது. டாக்டர் அவரை குடிக்காமலிருக்குமாறு சொன்னார். "இல்லாவிடில், இறந்து போவீர்கள்." என்று எச்சரித்தார். "அப்படியெனில் குடிப்பதை நிறுத்தினால் நான் இறக்கவே மாட்டேன் என்றா சொல்கிறீர்கள்?" என்று நஸ்ருத்தீன் டாக்டரைக் கேட்டார். "அவ்வாறு சொல்ல முடியாது," என்று டாக்டர் ஒப்புக்கொண்டார்.

"குடிப்பவனும் இறப்பான், குடிக்காதவனும் இறப்பான். பிறகு இவர்களிடையே என்ன வித்தியாசம்? இன்னொரு முக்கியமான விஷயம் சொல்கிறேன். நான் வயதான குடிகாரர்களைப் பார்த்திருக்கிறேன். கிழடுதட்டிய டாக்டர்களைப் பார்த்ததில்லை. நீங்கள் வேண்டுமானால் தேடிப் பாருங்கள். நூறு வயதான டாக்டர் ஒருவர்கூட கிடைக்கமாட்டார். ஆனால் நூறு வயதான குடிகாரர்களை நான் உங்களுக்குக் காட்ட முடியும். நல்லவர்களும் சாகிறார்கள், கெட்டவர்களும் சாகிறார்கள். சாவது நிச்சயம் என்பதால், நான் குடித்தே சாக விரும்புகிறேன்," என்று நஸ்ருத்தீன் கூறி முடித்தார்.

இம்மாதிரியான விதண்டாவாதங்கள் உள்ளவரையிலும் எந்தப் பழக்கத்தையும் போக்கிக் கொள்ள முடியாது. நீ உலகம் சொல்வதைக் கவனிக்காதே. பழக்கத்தை உற்றுக் கவனி. அதனுள்ளே இறங்கி நீ ஏன் சிகரெட் பிடிக்கிறாய் என ஆராய்ந்து பார். ஒரு காரணமும் கிடைக்காவிடில் உன் முட்டாள்தனம் உனக்குப் புலப்படும். சிகரெட் புகைப்பது பைத்தியக்காரச் செயல் என்றும் புரிந்துபோகும்.

## நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! மனத்திற்கும் எண்ணத்திற்கும் இடையே என்ன வித்தியாசம்? எண்ணங்கள் காரணமாகத்தான் செயல்கள் நிகழ்கின்றன என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். தாமாகவே சம்பவங்கள் நிகழ்வதுண்டு என்றும் கூறினீர்கள். இவை எப்படி வேறுபடுகின்றன?**

எண்ணம் என்பது அலை. மனம் எல்லா அலைகளின் தொகுப்பு. எண்ணம் சிறு துளி. மனம் சிறுதுளிகளின் பெரு வெள்ளம். காட்டிற்கும் மரத்திற்கும் என்ன வித்தியாசம் என்று கேட்டால், எல்லா மரங்களும் சேர்ந்து காணப்படும் இடம்தான் காடு என்போம். ஒவ்வொரு மரமாக வெட்டி வீழ்த்தினால் பிறகு காடு மிஞ்சாது.

புத்தமதக் கதை ஒன்று. மிலிந்தன் என்ற யவன (கிரேக்க) படைத்தலைவன் தனது சபைக்கு வரும்படி நாகசேனர் என்ற பிட்சுவை அழைத்தான். அவரை அழைத்துவரத் தேர் அனுப்பினான். அவரது கொள்கைப்படி மனிதன் என்று யாரும் கிடையாது. பல அம்சங்களின் இணைப்பிற்கு மனிதன் என்று பொதுப் பெயர் தரப்பட்டுள்ளது.

தேரிலிருந்து பிட்சு இறங்கியதும் மிலிந்தன் அவரை வணங்கி, "பிட்சு நாகசேனர் அவர்களே, வருக, வருக," என்றான். அதற்கு அவர், "இதோ நான் வந்துவிட்டேன். ஆனால் நான் என்ற ஒருவன் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்," காடு என்பதுபோல் நாகசேனன் என்பது ஒரு பெயர் மாத்திரமே. நாகசேனன் என்பவன் ஒரு தொகுப்பு மட்டுமே. உடல், எண்ணம், பழக்கங்கள், வழக்கங்கள், நடத்தை முறைகள் இவற்றின் கலப்பு மட்டுமே. நான் என்று பிரித்துக் காட்டத் தனியாக எதுவுமில்லை," என்றார்.

மிலிந்தன் (மிலிந்த்) இந்தியப் பெயர். அவனது யவனப் பெயர் மீனாண்டர். அலெக்ஸாந்தர் இந்தியாவில் விட்டுச்சென்ற படைத்தலைவர்களுள் ஒருவன். யவனர்கள் அரிஸ்டாட்டிலைப்

பின்பற்றுபவர்கள். தர்க்க அறிவை நம்புகின்றவர்கள். ஆகவே மிலிந்த் "பிட்சுவே, உங்கள் பேச்சு அர்த்தமற்றதாக இருக்கிறது. நீங்கள் வந்துவிட்டேன் என்றும், வரவில்லை என்றும் ஒரே சமயத்தில் சொல்கிறீர்கள். நீங்கள் என்பவர் இல்லை எனில் இங்கே வந்தது எப்படி? இங்கே இப்போது வந்திருப்பவர் யார்?" என்று தன் மனக் குழப்பத்தை வெளிப்படுத்தினான்.

பதில் கூறும் முகமாக நாகசேனர் தேரைக் காட்டி, "இது என்ன?" என்றார். மிலிந்தன் தேர் என்றான். "உன் சேவகர்களைக் கூப்பிட்டு, குதிரைகளை அவிழ்க்கச் சொல்," என்றார் பிட்சு. அவ்வாறு செய்தபின், பிட்சு, "இப்பொழுதும் இது தேரா?" என்று கேட்டார். "ஆம்," என்ற மிலிந்தனிடம் சக்கரங்களை அகற்றச் சொன்னார். "இப்போதும் இது தேரா?" என்று பிட்சு கேட்டபோது, "இப்போதும் இது தேர்தான். ஆனால் இதன் நிலைமை மோசமாகிவிட்டது," என்று மிலிந்தன் வருத்தமாகச் சொன்னான். "இப்போது பெயருக்குத்தான் அது தேர். மீதிப் பாகங்களையும் நீக்கிவிட்டால் தேர் என்பது மிஞ்சியிருக்குமா?" என்று பிட்சு கேட்டபோது மிலிந்தனுக்கு விஷயம் புரிந்தது.

தேர் என்பது ஒரு தொகுப்பு மட்டுமே ஆகும். அது ஒரு பெயர் மட்டுமே ஆகும். ஆகவே தேர் வந்தது, தேர் வரவில்லை என்னும் இரண்டும் உண்மை. அதுபோலவே மனிதன் வந்தான்-வரவில்லை, 'நான் வந்தேன்-வரவில்லை' என்பதும் உண்மையே. மனமும் ஒரு தொகுப்பு மாத்திரமே. எண்ணங்கள் எழாதபடி செய்துவிட்டால் பிறகு மனம் என்று எதுவும் மிஞ்சியிருப்ப தில்லை. அப்போது மனமற்ற நிலை உண்டாகிறது (no mind).

எண்ணம் விதை போன்றது. ஓர் எண்ணம் உதித்தால் அப்போதே பாதிச் செயல் முடிந்ததுபோல்தான். பின்னால் நீ வீடு கட்டுவாய். ஆனால் வீடு கட்ட வேண்டுமென்ற எண்ணமும், வீடு எப்படிக் கட்ட வேண்டும் என்பதும் முன்பே தோன்றியிருக்கும். ஒருவனைக் கொலை செய்ய வேண்டும் என்னும் எண்ணமும் திடீரென்று தோன்றுவதில்லை. அதற்குச் சிறிது காலம் முன்பிருந்தே அந்த எண்ணம் வளரத் தொடங்கியிருக்கும்.

தாஸ்தாவஸ்கியின்* புகழ்பெற்ற நாவல் 'கிரைம் அண்ட் பனிஷ்மென்ட்' (குற்றமும் தண்டனையும்). ஒரு சிற்றூரில் வட்டிக்குக் கடன் கொடுத்துப் பணம் பிடுங்கும் ஒரு கிழவி. எண்பது வயது. அவள் வீட்டிற்கு எதிர் வீட்டில் கல்லூரி மாணவன் அறையெடுத்து வசிக்கிறான். அநியாயமாக வட்டி வாங்கும் அந்தக் கல்மனசுக்காரி சாகக்கூடாதா என்று இளைஞன் நினைக்கிறான். அவள் உயிருடன் இருந்து என்ன பயன்? குடும்பத்தில் யாருமில்லை. கடன் வாங்கியவர்களைப் பிழிந்தெடுக்கிறாள். அவளால் எல்லோருக்குமே கஷ்டம். மாணவர்கள் தேர்வுக் கட்டணம் செலுத்தப் பணம் இல்லாமல் தவிக்கிறார்கள். கிழவியோ மேலும்-மேலும் பணம் சம்பாதித்துக் குவிக்கிறாள். யாராவது இவளை ஏன் கொல்லாமல் இருக்கிறார்கள் என்று இளைஞன் யோசிக்கிறான்.

அவனிடமும் தேர்வுக் கட்டணம் செலுத்தப் பணமில்லை. அவன் தன் கடிகாரத்தை அடகுவைக்கக் கிழவியிடம் செல்ல நேரிடுகிறது. இதற்கு முன்பும் கடந்த இரண்டாண்டுகளாக ஏதாவது பொருளை அடகு வைத்தே அவன் தேர்வுக் கட்டணம் செலுத்தியிருக்கிறான். அப்பொழுதெல்லாமும் இந்தக் கிழவியை யாராவது கொல்லக் கூடாதா என்று நினைத்திருக்கிறான். தான் தன் கையால் அவளைக் கொல்ல வேண்டும் என்று அவன் ஒருபொழுதும் நினைத்ததில்லை. ஆனால் கிழவி கொல்லப்பட வேண்டியவள் என்னும் எண்ணம் அவன் மனத்தில் வலுவாக வளர்ந்தது.

கடிகாரத்தைக் கிழவியிடம் கொடுத்தபோது மாலை நேரம். வெளிச்சம் குறைவு. கிழவிக்குக் கண்ணில் கோளாறு. அவள் சன்னலருகே சென்று கடிகாரத்தைப் புரட்டியபடி உற்றுப் பார்த்தாள். மனத்துக்குள் மதிப்புப் போடலானாள். அந்த இளைஞன் பெயர் ரோஸ்கோலின்.

---

* Dostoyevesky (1821-1881) ரஷ்ய நாவலாசிரியர். மனத்தத்துவ வர்ணிப்பில் ஆழமாகச் சென்றவர். உலகப் புகழ்பெற்ற அவர் நாவல்கள் Crime and Punishment (1866), The Brothers Karamazov.

அவன் திடீரென பின்புறத்திலிருந்து கிழவியின் கழுத்தை நெறித்துவிட்டான். அந்த சமயம் அவன் செய்ததை அவனே உணரவில்லை. முதுமை காரணமாகக் கிழவி உடனே இறந்துவிட்டாள். கத்தக்கூட இல்லை. இளைஞன் நடுங்கிவிட்டான். தான் கொலை செய்ய விரும்பியதில்லை. ஆனால் அந்த எண்ணம் நீண்ட காலமாக அவன் மனத்தில் தேங்கியிருந்தது. இதனால் அவனை அறியாமலே இயந்திரத்தனமாக அவன் அவளைக் கொன்றுவிட்டான்.

சத்தம் போடாமல் அவன் தன் அறைக்குத் திரும்பினான். கிழவி இறந்தது அன்றிரவு எவருக்கும் தெரியாது. காலையில்தான் விஷயம் தெரிந்து போலீசார் வந்து விசாரணை நடத்தினார்கள். இளைஞனை எவரும் சந்தேகிக்கவில்லை. அவன் சாதாரணமான கல்லூரி மாணவன்தானே.

ஆனாலும் அவன் தான் பிடிக்கப்படுவோம் என்று பயந்தான். தன்னை தண்டித்துச் சிறையிலிட்டால் தன் எதிர்காலம் வீணாகிவிடும் என்று கவலைப்பட்டான். இரண்டு மாதங்களாகி விட்டன. இளைஞன் அறையிலேயே கிடந்தான். இருட்டிய பிறகு தான் வெளியே வந்தான். தெருவில் பூட்ஸ் சப்தம் கேட்டாலும், அறைக் கதவை எவராவது தட்டினாலும் (அது தபால்காரராக இருந்தாலும்) போலீஸ் வந்துவிட்டது என்று நடுங்கினான்.

மூன்று மாதங்கள் கழிந்தன. அவன் இன்னமும் நடுங்கிய படியே இருந்தான். ஒருநாள் மன இறுக்கம் தாங்க முடியாமல் போய் அவன் காவல் நிலையத்திற்குச் சென்று, "நான்தான் கிழவியைக் கொன்றேன்," என்று கூறி சரணடைந்தான். "ஏன் இத்தனை நாளாக என்னைப் பிடிக்க வரவில்லை? போலீசுக்காகக் காத்திருந்து இப்போது எனக்குப் பைத்தியம் பிடித்தது போன்ற அளவிற்கு ஆகிவிட்டேன்," என்று கதறினான்.

இன்ஸ்பெக்டர் அவனைத் தட்டிக்கொடுத்தார். "உனக்கு நிஜமாகவே பைத்தியம் பிடித்திருக்கிறது. நீ எதற்கு அவளைக் கொலை செய்திருக்க முடியும்? உன்னை எங்களுக்குத் தெரியும். உடனே இங்கிருந்து ஓடிப்போ. உன் கண்களைப் பார்த்தால் நீ

சரியாகத் தூங்குவதில்லை என்று தெரிகிறது. இப்படியெல்லாம் இரவும் பகலும் பரீட்சைக்குப் படித்து உன் மூளை கலங்கி யிருக்கிறது. இனிமேலாவது உடம்பைக் கவனித்துக்கொள்," என்று விரட்டிவிட்டார்.

ஆகவே புத்தர், மகாவீரர் முதலிய ஞானிகள் மனத்தாலும் கெடுதல் நினைக்காதே என்று எச்சரிக்கிறார்கள். வெறும் எண்ணம்தானே என்று அலட்சியப்படுத்தக் கூடாது. ஒவ்வோர் எண்ணமும் மனத்தில் ஒரு கோடுபோல் இழுத்துவிடுகிறது. காலப்போக்கில் அக்கோடு அடர்த்தியாகிறது. ஒருநாள் திடீரென அது செயலாக மாறிவிடுகிறது. எண்ணம் நீ அறியாமலே வலுப்பெற்று கர்மமாகிறது.

எனவே, ஒருவன் செயல் உலகிலிருந்து வெளியேற வேண்டுமானால், அவன் எண்ணங்களின் உலகிலிருந்து விடுதலை பெறவேண்டும். எண்ணங்களற்றவனே கர்மங்களி லிருந்து விடுபடுகிறான். எண்ணங்களின்மையே செயல்களி லிருந்து விடுபடுவதற்கான ஆதாரம் நீ தியானத்தில் ஆழ்ந்து மூழ்கினால், எண்ணங்கள் தோன்றா. பிறகு செயலுக்கும் தூண்டுதல் கிடைக்காது.

பகவத்கீதையும் 'நீ உள்ளே சூனியமானபின் வெளியில் புரியும் செயலில் பாபம் ஒட்டாது' என்கிறது. அதேசமயம், நீ செயல்புரியாவிடிலும், உள்ளே தீய எண்ணங்கள் மிஞ்சியிருந்தால் பாவம் செய்ததுபோல்தான் ஆகும்.

எண்ணம் அளவிற்குச் செயல் முக்கியமில்லை. ஏனெனில் எண்ணத்தைப் பின்தொடர்ந்துதான் செயல் நிகழ முடியும். செயல் என்பது இரண்டாம் பட்சமானது. அது நிழல். அது விளைவு. முதலில் காரணம், பிறகு காரியம்.

எண்ணம் உதித்து, செயல் புரியும் வேளையில் நீ கர்த்தா ஆகிறாய். எண்ணங்கள் எழாமல் சூனியமான மனநிலையில் நடக்கின்றவற்றை நீ செய்யவில்லை. உனது வேலைதான் நிகழ்கிறது. ஆனால் உன் காரணமாக நிகழ்வதில்லை. நீ கருவி (உபகரணம்) மட்டுமே ஆவாய்.

இதுதான் ஜீவன் முக்த நிலை. உயிருடனேயே முக்திநிலை. ஆகவே அஷ்டாவக்ரர், 'ஞானி தொழில் புரிகையிலேயே தொழில் புரியாமல் இருக்கிறான்' என்று கூறுகிறார். ஞானி பார்த்தும் பார்ப்பதில்லை; காதால் கேட்டும் கேட்பதில்லை. அதாவது ஞானி கர்த்தாவாக எதுவும் செய்வதில்லை. ஆனால் தன் மூலமாக எது நிகழ்கிறதோ அதை நடைபெற விடுகிறான். அவற்றை அவன் தடுப்பதில்லை. அவனது சமர்ப்பணம் முழுமையானது.

## ஐந்தாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! எனக்கு வயதாகி வருகிறது. நான் கிழவனாகிக் கொண்டிருக்கிறேன். ஆனால் துறவியாவதற்குப் போதுமான தைரியம் என்னிடம் இல்லை. நான் என்ன செய்வது?**

பதிலை மனத்தில் தேடு. உடல் மூப்படையத் தொடங்கியிருக்கலாம். மனமோ கேளிக்கைகளிலேயே திளைத்தபடி இருக்கும். உடல் சிதைய ஆரம்பித்த நிலையிலும் மனம் விழிப்புப் பெறாமலிருக்கக்கூடும். மனம் அறியாமை என்னும் உறக்கத்திலேயே தொடர்ந்து இருக்கக்கூடும். முதுமை வந்தாலும் ஆசை நரைப்பதில்லை. இன்னும் சிறிது காலம்தான் வாழப்போகிறோம் என்னும் நினைவு அதற்குள் முடிந்த அளவிற்கு இன்பங்களை அனுபவிக்கத் தூண்டக்கூடும்.

'அதற்குள் ஏன் சோகமாக இருக்க வேண்டும்? ஏன் ஏமாற்ற உணர்வை வளர்த்துக்கொள்ள வேண்டும்? இன்னும் நான் சாகவில்லையே! உயிரோடுதான் இருப்பதால் வாழ்க்கையை இன்னும் கொஞ்சம் அனுபவித்தால் என்ன தப்பு?' இப்படியெல்லாம் உன் மனம் நினைப்பதால்தான் துறவியாவதற்கு நீ தயங்குகிறாய்.

முல்லா நஸ்ருத்தீன் ஏதோ வாங்கக் கடைத்தெரு வழியே சென்றார். தனக்கு முன்னால் ஓர் அழகி செல்வதைக் கண்டு அவளைப் பின் தொடர்ந்தார். தன் வேலையை மறந்துவிட்டார்.

கடைத்தெருக் கூட்டத்தை இடித்துக்கொண்டு முன்னேறினார். இவ்வாறு ஒருவர் தன்னைப் பின்தொடர்வதை அப்பெண் உணர்ந்துகொண்டாள். கூட்டம் குறைந்த இடத்தில் அவள் சட்டென்று அவரை நோக்கித் திரும்பினாள். "இந்தாங்க அய்யா, நீங்க செய்யறது சரிதானான்னு யோசிச்சுப் பாருங்க. தலைமுடி யெல்லாம் நரைச்சுப் போச்சு. அதுக்கப்புறமும் பெண்களைத் துரத்தலாமா?" என்று கேலி செய்தாள்.

திடுக்கிட்ட நஸ்ருத்தீன், "என் தலைமுடிக்குதான் வயதாகி விட்டது. மனம் இளமையாகவே இருக்கிறது. தலைமுடி வெள்ளை யாகிவிட்ட போதும் மனம் கருப்பாக (பசுமையாகவே) இருக்கிறது." என்று விளக்கம் தந்தார்.

உடல் மூப்படைவதால் மனத்தில் பெரிய மாறுதல் விளைவதில்லை. தலைமுடி நரைப்பதால் வாழ்க்கையில் அனுபவப் பாடம் கற்றுக் கொண்டதாக அர்த்தமில்லை. எனினும் முதியவர் என்றால் நாம் மரியாதை தருகிறோம். அவர் வாழ்க்கையை அனுபவித்தவர் என்பதாலும், வாழ்க்கையிலிருந்து பாடங்கள் கற்றவர் என்பதாலும் மதிப்புக் கொடுக்கிறோம்.

உனக்கு வயதாகியும் துறவறம் ஏற்கத் தயங்குகிறாய். ஏனெனில் உனக்குள் உலகப் பற்று இன்னும் மிச்சமிருக்கிறது. வாழ்க்கை உன் கையைவிட்டு நழுவிச்சென்ற வண்ணம் உள்ளது. நீ அதை விடுவதற்குத் தயாராக இல்லை. சாவு வந்து பிடுங்கிக்கொள்ளும் போது உன் எதிர்ப்பு பலிக்குமோ?

சந்நியாசம் என்பது சாவைச் சரியாகப் புரிந்து கொள்வதற் கான வாய்ப்பாகும். சந்நியாசம் என்பது சாவுக்கு சவால் விடுவதாகும். சாவு தன்னிடம் மிஞ்சியுள்ளதைப் பிடுங்கிக்கொள்ள விடாமல் தானே முந்திக்கொண்டு அவற்றைத் துறத்தல் சந்நியாச மாகும். சாவால் பிடுங்க முடியாததைக் காத்துக் கொள்வது சந்நியாசமாகும். ஆகவே துறவி சாவிடம் பயப்படுவதில்லை. சாவுதான் துறவியிடம் பயப்படுகிறது.

துறவி இறப்பதில்லை. சம்சாரிதான் இறக்கிறான். துறவி இந்த அற்ப வாழ்விலிருந்து அற்புதமான திவ்ய வாழ்வில்

பிரவேசிக்கிறான். ஆகவே நம் நாட்டில் சந்நியாசியைப் புதைத்த இடத்தை சமாதி என்கிறோம். சாதாரண மனிதனைப் புதைத்த இடத்தை சமாதி என்று அழைப்பதில்லை. சாதாரண மனிதன் இறந்த பின் வேறு இடத்தில் மீண்டும் பிறந்து வாழத் தொடங்கி யிருப்பான்.

சந்நியாசி விரும்பியே இறக்கிறான். அவன் எல்லாவற் றையும் துறந்து விட்டிருக்கிறான். அவ்வாறு நீயும் துறக்க வேண்டும் என்று நான் சொல்லும்போது அதன் பொருள், எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டுக் காட்டுக்குப் போ என்பதன்று. நான் சொல்வது உள்ளத்துறவு. வெளியே உள்ள எதன் மீதும் உள்ளே பிடிப்பு, பற்று இருக்கக்கூடாது.

சராசரி மனிதன் வெளியே பொருளைத் துறந்தாலும் மனம் அதை மறப்பதில்லை. அது மீண்டும்-மீண்டும் இளமைக்குத் திரும்புகிறது. அதில் அடிக்கடி அலைகள் எழுகின்றன. மறுபடியும் பழைய இன்பங்களை அனுபவிக்க மனம் ஏங்குகிறது. இதயம் ஆசைகளால் வேகமாகத் துடிக்கிறது. கனவுகளிலும் ஆசைகள் பிரதிபலிப்பாகின்றன. உன் உடல் தளர்ந்துவிட்ட போதிலும் உன் கனவுகளுக்கு வயதாகிவிடவில்லை. உடலுக்கு இலையுதிர் காலமாக இருந்தாலும் மனத்திற்கு வசந்த காலமாகவே உள்ளது. உடலுக்கு முடிவு, சாவு, நெருங்கிவிட்டது என்பது முதுமையின் அறிகுறி. மனத்திற்குச் சாவு நெருங்கிவிட்டது என்பது சந்நியாசத்தின் லட்சணம். உடலுக்குச் சாவு தானாகவே வரும். மனத்திற்குச் சாவு தானாக வராது. சந்நியாசி முயன்று மனத்தைக் கொல்வதால், 'நான்' உணர்வைக் கொல்வதால், துறவறம் ஒருவகையில் தற்கொலைக்கு சமம்.

இப்ராஹிம் என்றொரு பேரரசர். ஒருநாள் அவர் தர்பாரில் வீற்றிருக்கும்போது வாசலில் ஒருவர் காவலர்களுடன் கத்திப் பேசுவது கேட்டது. அந்த ஆளின் குரலில் கண்ணியம், உறுதி பிரதிபலித்தது. ஆகவே இப்ராஹிம் அந்த ஆளை உள்ளே விடச் சொல்லி, காவலரிடம் விசாரித்தான்.

"அரசே! இவன் கிறுக்கு போலிருக்கிறது. நம் அரண் மனையை இவன் தர்மசத்திரம் என்கிறான். தன்னை இங்கு

தங்கவிடுமாறு கேட்கிறான். பிச்சைக்காரன்போல் தெரிகிறான்." என்று காவலர் தெரிவித்தனர்.

இப்ராஹிம்ஆன்மிக நாட்டம் கொண்டவர். வந்தவர் பிச்சைக்காரர்போல் தெரியவில்லை. இதில் ஏதோ மர்மம் இருப்பதாக அவர் நினைத்தார். அவர் வந்தவரைப் பார்த்து, "அரண்மனையைச் சத்திரம் என்கிறீர்கள். இது அரசாங்கத்தை அவமானப்படுத்துவதாகும். இது எனது அரண்மனை. உங்கள் பேச்சு என்னையும் அவமதிப்பதாக உள்ளது." என்று சூழ்நிலையைத் தெளிவுபடுத்தினார்.

வந்தவர் சிரித்தார். "நான் இதற்கு முன்பும் இரண்டு முறை இங்கு வந்துள்ளேன். ஒவ்வொரு முறையும் வேறு-வேறு மனிதர் இதே ஆசனத்தில் உட்கார்ந்து இந்தக் கட்டத்தைத் தனது அரண்மனை என்று சொந்தம் கொண்டாடினர். இப்போது அவர்கள் எங்கே? மூன்றாவதாக நீ வந்துள்ளாய். அரண்மனை உனது என்கிறாய். நீயும் சென்றுவிடுவாய். அடுத்த முறை நான் வரும்போது வேறொருவரை நான் பார்ப்பேன். பிறகு இது எப்படி அரண்மனையாகும்? இதுவும் ஒரு சத்திரம் மாதிரிதானே. வழிப்போக்கர்கள் இரவில் தங்கும் இடம் போன்றதுதானே இது. நீயும் ஒரு வழிப்போக்கன்தான். நீ அதிகக் காலம் தங்குகிறாய் என்பதுதான் வித்தியாசம். நானும் ஒரு வழிப்போக்கன்தான். என்னை இங்கே தங்கவிடு." என்றார்.

இப்ராஹிமுக்கு விஷயம் புரிந்துவிட்டது. தனக்கு முன்பாக இங்கு வசித்த தன் தந்தையையும் தாத்தாவையும்தான் இவர் குறிப்பிடுகிறார் என்றும் புரிந்தது. அவர் சொன்னார், "அய்யா! நீங்கள் இங்கே தங்கிக்கொள்ளுங்கள். நான் வெளியேறுகிறேன். இது உண்மையில் சத்திரம்தான். நீங்கள் தங்குவதில் ஆட்சேபணையில்லை," என்று கூறி இப்ராஹிம் அரண்மனையை விட்டு வெளியேறிவிட்டார்!

"ஏன் இப்படிச் செய்தீர்கள்?" என்று யாரும் விசாரித்தபோது, இப்ராஹிம் சொன்னார்: "நான் சொந்தம் கொண்டாடிய அரண்மனையில் எனக்கு முன்பும் பலர் வந்து வாழ்ந்து போனார்கள். நானும் ஒருநாள் போக வேண்டியவன்தான். பிறகு

எதன் மீதும் எனது என்று ஏன் பற்றுவைக்க வேண்டும்? அரண்மனையை விட்டு வெளியேறிய பிறகுதான் எனக்குச் சொந்தமான வீடு எங்குள்ளது என்று தெரிந்துகொண்டேன்."

உலகமே ஒரு சத்திரம்தான் என்று நானும் கூறுகிறேன். இதைவிட்டு வெளியே ஓடவேண்டியதில்லை என்று நான் கூறுவேன். அஷ்டாவக்ரரும் உன்னை ஓடிப்போகச் சொல்ல வில்லை. நான் அதே சூழ்நிலையில் இப்ராஹிமிடம், "நீ எங்கே போகிறாய்? அரண்மனை என்பதும் சத்திரம்தான் என்று தெரிந்தபின் வெளியேறுவது எதற்காக? இது சத்திரம்தான் என்னும் மனோபாவம் போதுமே. இது உன்னுடையது என்றால்தான் அதைவிட்டு வெளியேற முடியும். உன்னுடையது அல்லாத ஒன்றை எப்படி நீ கைவிடுவாய்? விட்டுச்செல்வதிலும் 'எனது' என்னும் உணர்வு நீடிக்கத்தானே செய்கிறது" என்பேன்.

நாம் வசிக்குமிடம் நமக்கு நிரந்தரமானதன்று; நமக்குச் சொந்தமானதன்று; நாம் வசிப்பது சத்திரத்தில் என்னும் உணர்வு மேலிட்டதுமே நாம் சந்நியாசியாகிவிட்டோம்தான். நமது துறவு மனப்பான்மையை விளம்பரப்படுத்த வேண்டியதில்லை. ஜைனர்கள் துறவறம் மேற்கொள்ளும்போது மேளதாளத்துடன் ஊர்வலமாக அழைத்து செல்லப்படுவார்கள். அதெல்லாம் தேவையில்லை. நாம் தங்கியிருப்பது சத்திரத்தில் என்று புரிந்துவிட்டால் விஷயம் முடிந்துவிட்டது.

ஆகவேதான் நான் எந்த வெளிப்பகட்டுமின்றி சுலபத்தில் சந்நியாச தீட்சை வழங்கிவிடுகிறேன். 'உன்னால் துறவறப் பொறுப்பைத் தாங்க முடியுமா? உன்னால் கட்டுப்பாடாக இருக்க முடியுமா? உன் குடும்பத்திற்கு என்ன ஏற்பாடு?' என்றெல்லாம் கூட நான் விசாரிப்பதில்லை. 'இங்கு எதுவும் எனதல்ல' என்னும் ஞானம் உதித்தால் போதும். 'எல்லாமே கடவுளுடையது. நாமும் அவருடைய உடைமைதான்' என்று உணர்ந்துவிட்டால் அதுவே சந்நியாசம்.

எளிமையான வழிமுறை கொண்ட எனது சந்நியாசத்தை உன்னால் ஏற்கமுடியாவிடில், கடுமையான விரதங்களும்

கட்டுப்பாடுகளும் நிறைந்த பழைமை முறையிலான சந்நியாசத்தை எப்படிப் பின்பற்றுவாய்? அப்படியும் பழைய முறையிலான சந்நியாசத்தின் கவர்ச்சி உன்னை இழுக்கிறது. ஏனெனில் அதில் உனது அகங்கார உணர்வுக்குத் தீனி கிடைக்கிறது. இப்போது யாரும் ஏறிட்டுப் பார்க்காமலிருக்கும் உன்னை பழைய முறையில் தீட்சை பெற்றால் பல்லக்கில் உட்கார வைத்து பட்டணபிரவேசம் என்று முக்கிய வீதிகளின் வழியாக உன்னை அழைத்துச் செல்வார்கள். மேளதாளம், யானை-ஒட்டகம்-குதிரை முன் நடக்க, வாணவேடிக்கைகள் நிகழும். எல்லோரும் உன் பாதங்களைத் தொட்டு வணங்குவார்கள். நீ கையை உயர்த்தி அவர்களை ஆசீர்வதிக்கிறாய். உன்னிடம் அப்படி என்ன சக்தி உள்ளது? உன்னால் என்ன வரம் தரமுடியும்? எந்தக் குறையைப் போக்க முடியும்? நீ அடிப்படையில் அறிவாளியாயிருந்தும் பழைய முறையிலான சந்நியாசியாகி நீ உன்னையே ஏமாற்றிக் கொள்கிறாய்; உன்னையே முட்டாளாக்கிக் கொள்கிறாய்.

தைரியம் போதவில்லை என்றாய். பரவாயில்லை, காத்திருக்காமல் சந்நியாசக் களத்தில் இறங்கு. நீ தைரியத்தை வரவழைத்துக் கொள்ளாமலே வாழ்க்கையில் பல வேலைகள் செய்திருக்கிறாய். தைரியம் வந்தபிறகா நீ திருமணம் புரிந்தாய்? முதலில் திருமணம், பிறகு அட்ஜஸ்ட் செய்துகொள்ளலாம் என்றுதானே நீ நினைத்தாய். பிறப்பதா-வேண்டாமா என்று முடிவுசெய்தா நீ பிறந்தாய்? நீ இறக்கும் நேரம் உனக்கு இஷ்டமா என்றா மரணம் கேட்கும். பிறந்தாய், காதலித்தாய், மணம் புரிந்தாய், வெற்றிகண்டாய், தோல்வியடைந்தாய். இதற்கெல்லாம் தைரியம் வரட்டும் என்றா காத்திருந்தாய்? பிறகு சந்நியாசம் ஏற்க மட்டும் ஏன் தயக்கம்?

சமீபத்தில் ஒரு பெண்மணி என்னிடம் துறவற தீட்சை பெற்றாள். முதலில் தாமதித்தாள். மனம் முழுமையாகத் துறவறத்தை ஏற்கத் தயங்குகிறது என்றாள். மனம் 51 சதவிகிதம் துறவறத்தை நாடுகிறது என்றும் 49 சதவிகிதம் பின்வாங்குகிறது என்றும் கூறினாள். முழு மனமும் ஒத்துக்கொண்ட பிறகுதான் சந்நியாசம் என்றால் ஆயுள் முடியும் வேளை நெருங்கிவிடும்.

பாதியைவிடக் கூடுதலாக மனம் சந்நியாசத்தை நாடினால் போதும். காலப் போக்கில் அதில் ஈடுபாடு அதிகரித்துவிடும். நீந்தக் கற்றுக்கொள்ள வேண்டுமானால் தரையிலேயே கிடந்தால் முடியாது. நீரில் இறங்கித்தான் ஆகவேண்டும். முதலில் தயக்கம், தடுமாற்றம் இருக்கும். பிறகு நீந்துவதில் முழுமை பெற்றுவிடுவாய்.

மனம் துறவறத்தில் எத்தனை சதவிகிதம் ஈடுபாடு கொண்டுள்ளது என்பதை வைத்து உறுதியாக முடிவெடு. நடுவிலேயே நின்று ஊசலாடாதே. முடிவெடுக்காவிடில் உன் மனம் உறவிலும் நிலைக்காது, துறவிலும் நிலைக்காது. உலக வாழ்க்கை நடத்தியபடி சந்நியாசத்திற்கு ஏங்குவதும், துறவியான பின்னரும் உலகை நினைப்பதும் உன் ஆளுமையைச் சிதைத்து விடும். நீ சாதாரண, சராசரி மனிதனாகக்கூட வாழ முடியாமல் போய்விடும்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் நீண்ட காலமாக எதைத் தேடினேனோ அது உங்களைச் சந்தித்தபின் எனக்குக் கிடைத்துவிட்டதாகத் தோன்றுகிறது. உங்களுடன் முற்பிறவியிலேயே எனக்கு சம்பந்தம் இருந்திருக்குமோ. இப்பொழுது என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. புத்தியில் இப்பொழுதும் பலவிதமான எண்ணங்கள் உதித்தபடி உள்ளன. நீங்கள் எங்களைப் பிரிந்து போய் விடுவீர்களோ என்று அச்சமும் ஐயமுமாக இருக்கிறது.**

**நா**ம் முன்பே சந்தித்திருக்கிறோமா என்பது போன்ற முற்பிறவிச் சிந்தனைகளில் உன் தலையைக் கொடுக்காதே. இப்பொழுது நம்மிடையே ஏற்பட்டுள்ள சந்திப்பை முழுமையாக ருசித்து அனுபவி. நாம் சென்ற பிறவியில் சந்தித்திருக்கிறோமா என்னும் ஆராய்ச்சி வேண்டாம். இதில் இறங்கி உன் நேரத்தைக் கெடுத்துக்கொள்ளாதே. முற்பிறவியில் நாம் சந்தித்திருந்தாலும்

அதற்கு இப்பொழுது என்ன மதிப்பு? பிறகு எதிர்காலப் பிரிவு பற்றி சிந்திக்கிறாய். கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் கைவிடு. முன்பு என்னைச் சந்தித்திருக்கலாம். எதிர்காலத்தில் என்னைச் சந்திக்க முடியாமல் போகலாம். அதனாலென்ன? இச்சமயம் நான்தான் உன்னுடன் உள்ளேனே. இந்த நிகழ்காலத்தை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்.

ஹரி ஓம் தத்ஸத்!

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

தத் தத்வ விக்ஞான ஸந்தம்ஷம் ஆகாய ஹ்ருதயோத ராத் |
நானாவித பராமர்ஷ ஷல்யோத்வார: க்ருதோ மயா || 277

க்வ தர்ம: க்வ ச வா காம: க்வ சார்த்த: க்வ விவேகிதா |
க்வ த்வைதம் க்வ ச வர அத்வைதம் ஸ்வமஹிம் நி
ஸ்திதஸ்ய மே || 278

க்வ பூதம் க்வ பவிஷ்யத்வா வர்த்தமானம் அபி க்வ வா |
க்வ தேஷ: க்வ ச வா நித்ய ஸ்வமஹிம்நி ஸ்திதஸ்ய மே ||
279

க்வ ச ஆத்மா க்வச வா அநாத்மா க்வ சுபம் க்வ அசுபம்
த்தா |
க்வ சிந்த்தா க்வ ச வ அசிந்தா ஸ்வமஹிம்நி ஸ்திதஸ்ய
மே|| 280

க்வ ஸ்வப்ந: க்வ ஸுஷுப்திர் வா க்வ ச ஜாகரணம் தத்தா |
க்வ துரீயம் பயம் வாபி ஸ்வமஹிம்நி ஸ்திதஸ்ய மே || 281

க்வ தூரம் க்வ ஸமீபம் வா பாஹ்ம் க்வ அப்ய்ந்த ரம் க்வ வா|
க்வ ஸ்தூலம் க்வ ச வா சூக்ஷ்மம் ஸ்வ மஹிம்நி
ஸ்திதஸ்யமே || 282

க்வ ம்ருத்யுர் ஜீவிதம் வா க் வ லோகா: க்வாஸ்ய க்வ
லௌகிகம் |

**க்வ லள: க்வ ஸமாதிர் வா ஸ்வமஹிம் நி ஸ்திதஸ்ய மே ||** 283

**அலம் த்ரிவர்க்க கதயா யோகஸ்ய கதயாப்யலம் |**

**அலம் விக்ஞான கதயா விஸ்ராந்தஸ்ய மம ஆத்மனி ||** 284

அஷ்டாவக்ரர் ஜனகருக்கு உபதேசித்த இந்த சுலோகங்கள் அவை விழிப்புத் தரும் அபூர்வமான சூத்திரங்களாகும். அவற்றைப் புரிந்துகொண்ட எவரும் ஞான விழிப்புப் பெற்றுவிடுவார்கள். ஜனகரைப் போன்ற சீடர் கிடைப்பதும் கடினம், துர்லபம். அஷ்டாவக்ரர் போன்ற குரு கிடைப்பதோ அரிதினும் அரிது. இத்தகைய குரு-சிஷ்ய ஜோடிப் பொருத்தம் முற்காலத்திலும் இருந்ததில்லை; பிறகும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. குருவைப் போலவே சீடர். தூய்மையான இரு நிலைக்கண்ணாடிகள் எதிரெதிரே வைக்கப் பட்டுள்ளது போன்ற நிலை.

இதுவரையிலுமான சுலோகங்களில் தான் சொல்ல வேண்டியதை எல்லாம் அஷ்டாவக்ரர் கூறிமுடித்து விட்டார். இதயத்தில் இருந்ததை எல்லாம் வெளியே கொட்டிவிட்டார். இந்த ஞானமழையில் திளைத்து முற்றிலும் நனைந்த ஜனக மகாராஜா நன்றி தெரிவிக்கிறார். ஒரு குருவிற்கு நன்றி எப்படிச் செலுத்து வது? குரு சொன்னவை வீணாகப் போய்விடாமல் புரிந்து கொண்டதைத் தெரிவிப்பதுதான் குருவுக்குச் செலுத்தும் நன்றியாகும். அவரது உபதேச மழையால் உன் உள்ளமென்னும் ஏரி நிரம்பியதை, அவருடைய உபதேச முத்துகள் உன் இதயத்தை அலங்கரிப்பதை அவரிடம் தெரிவிப்பதே அவருக்கு நன்றி கூறுதலாகும்.

அஷ்டாவக்ர மகாகீதையைத் தொடங்கிவைப்பவரும் ஜனகர்தாம். அவரே இந்த கீதையை முடித்துவைப்பது பொருத்தமானது. ஜனகர்தான் அஷ்டாவக்ரரிடம், "குரு தேவரே! வாழ்க்கையின் சாரம் என்ன, அர்த்தம் என்ன, சத்தியம் என்ன என்பதை விளக்குங்கள்," என்று வேண்டிக்கொண்டார். அவர் கேட்டது கிடைத்தது. எதிர்பார்த்ததற்கும் மேலாகவே கிடைத்தது. ஜனகர் தாம் அறிய விரும்பியதை அறிந்துகொண்டார்.

குரு ஒரு சீடருக்கு ஞானம் வழங்க முடிவெடுத்தால் அவர் வாரிக்கொடுப்பார். அவர் கணக்குப் பார்த்து, அளந்து பார்த்துக் கொடுப்பதில்லை. சீடன் அச்சத்தாலும் மரியாதை கருதியும் தனது வேண்டுகோளுக்கு எல்லை வகுத்துக் கேட்கலாம். ஆனால் குரு கொடுப்பதற்கு எல்லை வகுத்துக்கொள்வதில்லை. இதை சாதாரண, உலகக் கல்வியிலும் காணலாம். சீடனின் கேள்விக்கு எல்லை இருக்கும். குருவின் பதில் எல்லையற்றது. அவரது பதில் எல்லை யற்றதாக இருந்தால்தான் சீடன் கேட்ட கேள்விகளுக்கும், கேட்க விரும்பிய சந்தேகங்களுக்கும் பதில் கிடைத்துவிடும். துண்டு துண்டாகக் கேட்கவும், அதேபோல் பதிலளிக்கவும் தேவை ஏற்படாது.

ஜனகர் சிறிய அளவில் கேட்டார். அஷ்டாவக்ரர் பெரிய அளவில் கொடுத்தார். இரு சொட்டு நீர் கிடைத்திருந்தாலும் ஜனகர் திருப்தியடைந்திருப்பார். அஷ்டாவக்ரரோ ஞானக்கடலையே அவரை நோக்கிப் பெருக்கெடுக்க வைத்தார்.

கடவுளின் இந்த உலகத்தில் கருமித்தனம் கிடையாது. ஒரு மரம் தோன்றி வளர ஒரு விதை போதுமென்றாலும் ஏராளமான விதைகள் சேர்ந்து தோன்றுகின்றன. ஒரு செடியில் எண்ணற்ற பூக்கள் மலர்கின்றன. வானத்தில் நட்சத்திரங்கள் நட்டநடுநிசியில் லட்சக்கணக்கில் மின்னுகின்றன. கருமித்தனம் கூடாதென்பது வாழ்க்கையின் அடிப்படை சத்தியம்.

இதனால்தான் நாம் கடவுளை ஈஸ்வரன் என்றழைக்கிறோம். இப்பெயர் ஐஸ்வர்யம் நிறைந்தவன் என்று பொருள் தருகிறது. தேவையான அளவே இருப்பது செல்வம். தேவைக்கு அதிகமாகப் பன்மடங்கு குவிந்திருப்பது ஐஸ்வர்யம். ஒருவனை ஐஸ்வர்யவான் என்றால் அவனிடம் மிகையாக, உபரியாக செல்வமுள்ளது என்று பொருள்படும். நம்முடைய தேவைகளை யெல்லாம் திருப்தியாக நிறைவேற்றிய பிறகும் கையில் மிஞ்சியிருக்கும் செல்வம்தான் ஐஸ்வர்யம் எனப்படுவது. ஜனகர் கேட்டது ஆன்மிகச் செல்வம்; அவருக்குக் கிடைத்தது பரம ஐஸ்வர்யம். அவர் போட்டது மிகச் சிறிய விதை. பலனாகக் கிடைத்தது மகாவ்ருட்சம், பிரம்மாண்டமான மரம்.

குரு தன் சீடனை மதிப்பிட ஒரு பரீட்சை வைக்கிறார். அவர் தனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் உபதேசித்தும் ஒன்றிரண்டு விஷயங்களை விளக்காமல் விட்டுவிடுகிறார். சீடன் அவற்றைப் பூர்த்தி செய்தால் அவன் முழுஞானம் பெற்று விட்டானெனப் பொருள்படும். குரு உபதேசித்ததை மட்டுமே அவன் திருப்பிக் கூறுவானாகில் அவன் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை போன்றவனாவான். குரு காலியாக விட்டுள்ள இடங்களை நிரப்ப முடிந்த சீடன் அவர் வைத்த பரீட்சையில் தேர்ச்சி பெற்றவனாகிறான். குரு வேண்டுமென்றே அரைகுறை யாக விட்டவற்றை அவன் முழுமையாக்குகிறான்.

அஷ்டாவக்ரர் ஒன்றிரண்டு இடங்களை விளக்காமல் விடுகிறார். புத்தரும் அவ்வாறு செய்திருக்கிறார். சத்குரு அனைவரும் இவ்வழியைக் கடைப்பிடித்திருக்கிறார்கள். ஒன்றிரண்டு விஷயங்களை விளக்காமல் விட்டிருக்கின்றனர். குரு கூறிய மற்றவற்றைப் புரிந்துகொள்ளாத சீடனால் அவற்றை பூர்த்திசெய்ய முடியாது. இதில் ஏமாற்று வேலை செய்ய முடியாது. தந்திரம் பலிக்காது. குறுக்கு வழி கிடையாது. ஆன்ம அனுபவத்தினால் மட்டுமே அந்த இடங்களை நிரப்ப முடியும். ஜனகரால் குரு விட்ட இடங்களை நிரப்ப முடிந்தது. அதுவும் குருவிடமிருந்த பெற்ற ஞானத்தால்தான் சாத்தியமானது என்பதை அவர் தெரிவித்துக் கொள்கிறார்.

இன்னொரு சிறப்பு: ஜனகர் குருவின் உபதேசத்தைக் காதால் கேட்க மட்டுமே செய்தார் (ச்ரவணம்). வேறு எதுவும் செய்யவில்லை. ஆன்மிகப் பயிற்சி, யோகாசனம், ஜெபம், தவம், யாகம், ஹோமம், தந்திரம், மந்திரம் ஆகிய எந்த உபாயத்தையும் மேற்கொள்ளவில்லை. காதால் குரு உபதேசம் கேட்டதிலேயே அவர் ஞானவிழிப்புப் பெற்றார்.

நீ சிரத்தையுடன் குரு கூறுவதை ஒழுங்காகக் கேட்டுக் கொண்டாயானால் நீ வேறு எதுவும் செய்யவேண்டியதில்லை என்பது அஷ்டாவக்ரரின் கருத்து. கேட்பதில் கவனக் குறைவு இருந்தால்தான் அதை ஈடுகட்ட ஆன்மிகப் பயிற்சிகளையும், சமயச் சடங்குகளையும் மேற்கொள்ள நேரிடும். கேட்பதில் கவனக்

குறைவு உனது ஆன்மிக வெற்றியைத் தாமதப்படுத்தும். 'உபதேசம் கேட்டாயிற்று, இனி செயல்படுத்துவோம்' என்று நீ முடிவெடுத்தால், நீ பூரணமாகக் கேட்கவில்லையென்று பொருள். ஏனெனில் முழுமையாகக் கேட்டு முழுமையாகப் புரிந்து கொண்டால் அதுவே செய்து முடித்தலுக்கு சமமாகும்.

என் சொற்பொழிவுகளின் சமயம் அடிக்கடிக் காணப்பட்ட ஒரு நண்பர் சில நாட்கள் வரவில்லை. அடுத்த சந்திப்பில் நான் காரணம் கேட்டேன். அதற்கு அவர், "உங்கள் உபதேசங்களைக் கேட்டேன். புரிந்துகொண்டேன். அடுத்து அவற்றைச் செயல் படுத்திப் பார்ப்பதற்காகச் சிறிது காலம் இங்கு வராமலிருந்தேன்," என்றார்.

"அப்படியானால் நீங்கள் என் உரைகளைச் சரியாகக் கேட்கவில்லை, புரிந்து கொள்ளவில்லை என்று அர்த்தம். சரியாகக் கேட்டுப் புரிந்துகொண்டிருந்தால், செய்வதற்கு ஒன்றும் எஞ்சியிருக்க முடியாது. நான் "இது சுவர், அது கதவு' என்று சொல்லி, அதை நீங்கள் கேட்டு, புரிந்துகொண்டிருந்தால், செய்வதற்கு பாக்கி என்ன உள்ளது? தேவைப்படும்போது கதவு உள்ள வழியாகச் செல்; சுவர் வழியாக வெளியே செல்ல முயலாதே. அப்படியில்லை, நான் பயிற்சி செய்து பார்த்தபின் வெளியேறுவேன் என்றா கூறுவீர்கள்?" என்று நான் அவருக்கு விளக்கினேன்.

அஷ்டாவக்ரர் பயிற்சி முறையிலான ஆன்மிகத்தை ஆதரிக்கவில்லை. நீ ஆன்மிகப் பயிற்சி செய்யப்போகிறேன் என்று சொன்னால், அதற்கு நீ ஆன்மிக உபதேசத்தை முழுமை யாகக் கேட்டுக்கொள்ளவில்லை என்று அர்த்தம்.

மற்ற வேலைகள் பிறர் கட்டளையைக் கேட்டால் மட்டும் போதாது. செய்தால்தான் அவை நிறைவேறும். ஆனால் சத்தியத்தின் சிறப்பு என்னவென்றால், அதை ஒழுங்காகக் கேட்டாலேயே நிறைவேறிய மாதிரிதான். சத்தியத்தைப் பொறுத்தவரையிலும் நீ அதற்காகச் செய்வதற்கு ஒரு வேலையும் இல்லை. அது உன் கண்களின் பார்வையில் ஏற்கெனவே உள்ளது. அது உன் இதயத்தின் துடிப்பில் கலந்துள்ளது.

மனிதன் தான் போய்ச்சேர வேண்டிய இடம் வெகு தொலைவில் இருப்பதாக நினைக்கிறான். 'கடவுள் தொலைவில் இருக்கிறார். அவரை நோக்கி நடைபோடுவோம், தேடுவோம், அலைவோம், பிறவிகள் எடுத்துப் பின்தொடர்வோம், நற்செயல்களே புரிவோம், தீயசெயல்களை விலக்குவோம். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக புண்ணியம் திரட்டி ஒருநாள் கடவுளை அடைவோம்,' என்றெல்லாம் நீ திட்டம் வகுத்தால் அவரை நீ அடைய முடியாது. ஏனெனில் அவர் உனக்கு மிக அருகில் நிற்கிறார். சிலர் மூக்குக்கண்ணாடி அணிந்துகொண்டே அதை எல்லா இடங்களிலும் தேடுவார்கள். அதேபோல் நீ அருகில் கடவுள் இருப்பதைப் பார்க்காமல் வெளியே எங்கெல்லாமோ பல பிறவிகளாய்த் தேடிவருகிறாய்.

போய்ச் சேருமிடம் தொலைவில் எங்கோ இல்லை. உன் எதிரில்தான் உள்ளது. நீ கடவுளை நோக்கி நடப்பேன் என்றால் அவர் தொலைவில் இருக்கிறார் என்று நீ நினைப்பது புரிகிறது. அவர் உன் அருகிலென்ன, உனக்குள்ளேயே அல்லவா வசிக்கிறார்.

'நான் தங்களது தத்துவஞானம் என்னும் (மருத்துவம்) கத்தியைப் பயன்படுத்தி என் இதயத்திலும் வயிற்றிலும் பரவி யிருந்த அநேக விதமான கட்டிகளை வெளியே அகற்றி விட்டேன்.' **(சுலோகம் 277)**

**வி**ஷயம் முடிந்துவிட்டது. அறுவை சிகிச்சை முடிந்துபோனது என்கிறார் ஜனகர். குரு அஷ்டாவக்ரரின் அறிவுரைகள் ஆயுதமாயின. சாஸ்திரம் சஸ்திரமாக (ஆயுதமாகப்) மாறினால்தான் பயன் கிடைக்கும். குருவின் வார்த்தைகள் மருத்துவக் கத்திபோல் வயிற்றிலும் இதயத்திலும் பரவியிருந்த நோய்ச் சிந்தனைகளை வெட்டி வெளியே எறிந்தன. சிகிச்சை முடிந்தது. சிகிச்சை வெற்றி.

குரு கொடுக்கும் தத்துவ அறிவு சீடனுக்குள் பரவியிருந்த விஷத்தையெல்லாம் நீக்கிவிடுகிறது; எல்லா முள்களையும் அகற்றிவிடுகிறது. அஷ்டாவக்ரர் இதயம், வயிற்றை மட்டும் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. அதுவும் பல ஆயிரக்

கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே கூறிவிட்டார். அதை நவீன காலத்தில்தான் ஐரோப்பிய மனத்தத்துவ இயல் புரிந்துகொண்டது.

மனிதன் அடக்கிவைக்கும் எண்ணங்கள், ஆசைகள், இயல்புகள் எல்லாம் திரண்டு வயிற்றில் தேங்குகின்றன. மூளையில் அல்லவா அவை திரளும் என்று நீ நினைப்பாய். எண்ணங்களுக்கும் வயிற்றுக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்பாய். ஆனால் இக்கால மனத்தத்துவ இயல் கூறுவது அஷ்டாவக்ரர் கருத்துடன் ஒத்துப்போகிறது. ஆகவே குறிப்பிட்ட ஒரு விஷயத்தை வயிற்றில் வைத்துக்கொள்ள முடியாது என்று கூறும் வாக்கிய அமைப்பு உள்ளது (I will not be able to stomach it).

நாம் எதை அடக்கினாலும் அது வயிற்றைச் சென்றடையும். ஆகவேதான் கவலைப்படும் மனிதனின் வயிற்றில் கட்டி (அல்ஸர்) உருவாகிறது. தலையில் அல்ஸர் உண்டாவதில்லையே. கருமி மலச்சிக்கலால் இறப்பான். எதையும் அவன் செலவழிக் காமல் பதுக்குவது வயிற்றைப் பாதித்து மலம் வெளியேறாமல் ஒரே இடத்தில் இறுகிவிடுகிறது. கையிலிருந்து பணம் வெளியேறாமல் இருப்பதுதான் இதற்குக் காரணம்.

நமது சித்தத்தில் உள்ள நோய்கள் கீழே இறங்கி வயிற்றில் திரளுகின்றன. ஏனெனில் நமது உடலில் வயிறுதான் காலியாக இருக்கும் பகுதியாகும். அங்குதான் எதுவும் தங்கியிருக்க முடியும். அவ்வாறு வயிற்றில் சேர்ந்த குப்பை எண்ணங்களை, கீழ்த்தர ஆசைகளை குரு தந்த ஞானக் கத்தியால் எடுத்தெறிந்து விட்டதாக ஜனகர் தெரிவிக்கிறார்.

ஜனகர் இதயத்தையும் குறிப்பிடுகிறார். மூளையை பற்றி எதுவும் சொல்லவில்லை. முற்கால ஆராய்ச்சியாளர்கள் நம்மை மூன்று தளங்களாகப் பிரிக்கிறார்கள் (layers): உடல் தளம், மனத் தளம், ஆத்ம தளம். உடல் தளத்தில் அமுக்கி அடக்கப்படுபவை வயிற்றில் போய்ச்சேரும். மனத் தளத்தில் அடக்கப்படுபவை சென்று இதயத்தை அடைக்கும். ஆத்ம தளத்தில் எதுவும் அடக்கப்படுவதில்லை. அது நிர்மலமான பிரதேசம்.

நீ அடக்குபவற்றில் பெரும்பான்மையானவை வயிற்றுக்கே செல்கிறது. மனத்தை அடக்கி இதயத்துக்கு அனுப்பப்படுபவை குறைவு. காமம், சினம், பொறாமை, வெறுப்பு, வன்முறை எண்ணம் முதலியவற்றை அடக்கினால், அவை வயிற்றில் சேருகின்றன. இவை உடல் தளத்து நிகழ்ச்சிகள். இவை கீழ்த்தரமானவை.

ஒருவன் அன்பை வெளியிடாமல் அடக்கினால் அது இதயத்தைச் சென்றடையும். கோபத்தை அடக்கினால் வயிற்றுக்குப் போகும். கருணையை அடக்கினால் அது இதயத்தின் மீது படும். ஒருவர் மீது பரிதாபப்பட்டு ஏதாவது கொடுக்க விரும்பி அந்த கருணை உணர்வை தடுத்துக்கொண்டால் அது இதயத்தை அடைக்கும். நம்முடைய பிரச்சினைகள் எல்லாம் வயிற்றில் சேருகின்றன. இதனால் வயிறு கெட்டுப்போய் நோய்கள் உண்டாகின்றன.

வயிற்றை சுத்தப்படுத்த யோகப் பயிற்சிகள் உள்ளன. ஆனால் அவை பலன் தர நீண்ட காலம் பிடிக்கும். யோகிகளும் வயிற்றுப் பிரச்சினைகளிலிருந்து விடுபட்டவர்கள் அல்லர். ஆனால் அஷ்டாவக்ரரோ சொற்களின் (சுலோகங்களின் மூலமாகவே) தன் வயிற்றையும் இதயத்தையும் சுத்தப்படுத்திவிட்டதாக ஜனகர் அறிவிக்கிறார். இதனால் தன் உடல் காலியாகி, இலேசாகி, தான் ஆரோக்கியமாகி விட்டதாகவும் கூறுகிறார்.

எல்லோரும் ஏதாவது அறிவுரை கூறி நமது வாழ்க்கையைச் சிக்கலாக்குகிறார்கள். நம் நாட்டில் ஒவ்வொருவனும் எவனுக்காவது ஆலோசனை கூறியபடி உள்ளான். விஷயம் தெரியாதவனும்கூட ஆலோசனை கூறத் தயங்குவதில்லை. ஒரு விஷயம் பற்றி தனக்குத் தெரியாது என்று எவரும் ஒப்புக் கொள்வதில்லை. எல்லாம் தெரிந்தவர்போல் இங்கு நடிப்பவர்களே அதிகம் (Mr.Know-All). குடிகாரன்கூட குடிப் பழக்கத்தை எப்படி நிறுத்துவது என்று ஆலோசனை கூறுவான்; பிறகு நீ ஏன் குடிக்கிறாய் என்று கேட்டால், தான் கெட்டாலும் மற்றவர்களாவது உருப்படட்டுமே என்பதற்காக ஆலோசனை கூறுவதாகச் சொல்லுவான். எல்லாம் வார்த்தை ஜாலம். தான் பின்பற்றுவதை மட்டுமே ஒவ்வொருவனும் பிறருக்கு உபதேசித்தால், உலகில் பாதிக் குழப்பம் நீங்கிவிடும் என்றார் புத்தர்.

ஒரு நிகழ்ச்சியில் ஒரு துறவியின் சொற்பொழிவை நான் கேட்க நேர்ந்தது. அவர் ஆத்மஞானம் பற்றி ஒரு மணி நேரம் பேசினார். அதைக் கேட்ட எனக்கு அவர் ஆத்மஞானம் பற்றி எதுவுமே அறிந்திருக்கவில்லை என்றே நினைக்கத் தோன்றியது. அவர் கூறியவை கடன் வாங்கியவை, ஊசிப்போனவை. நான் அவரைத் தனியாகச் சந்தித்து என் கருத்தை வெளிப்படையாகக் கூறிவிட்டேன். அவர் நல்ல மனிதர், நேர்மையானவர்.

அவர் என்னிடம், "நீங்கள் ஆன்மிகத்தைப் பார்க்கும் விதம் புதுமையானது. நான் அந்தக் கோணத்தில் பார்த்ததில்லை என் குரு சொன்னதையே திருப்பிச்சொல்லி வருகிறேன். அவருக்கு அவர் குரு அதேமாதிரிச் சொல்லித் தந்திருப்பார். பழைய சாஸ்திரங்களில் உள்ளதையும் ஒப்பிக்கிறேன். யார் என்ன ஆலோசனை கேட்டாலும் குரு சொன்னதை வைத்து அல்லது சாஸ்திரங்களில் உள்ளபடி ஆலோசனை கூறிவருகிறேன். என்னிடம் சுயசிந்தனை இல்லை என்று நீங்கள் சொல்வது உண்மைதான்," என்றார்.

இவ்வாறு ஏராளமான ஆலோசனைகள் நம் வயிற்றுக்குள் சேருகின்றன. அவற்றை குருவின் ஞானம் என்னும் கத்தியால் அகற்ற வேண்டும்.

"நான் எனது மகிமை என்னும் அரியணையில் வீற்றுள்ளேன். எனக்கு அறம்-பொருள்-இன்பம் ஏது? துவைதம்-அத்துவைதம் ஏது?' **(சுலோகம் 278).**

குரு உபதேச உரைகளின் மூலமாகவே தான் தனது மகிமையை உணர்ந்துகொண்டதாக ஜனகர் கூறுகிறார். இயேசுநாதரைப் பற்றிய ஒரு கதையில் அவரின் பக்தனான லாஸரஸ் இறந்துவிட்டான். உடல் புதைகுழியில் வைக்கப்பட்டது. நாலு நாள் கழித்து அவனது ஊருக்கு வந்த இயேசுநாதர் கல்லறைப் பகுதிக்குச் சென்று 'எழுந்து வா, லாஸரஸ்' என்றதும் அவன் புதைகுழியிலிருந்து வெளியே வந்துவிட்டான். இயேசு விளக்கினார். "அவன் உயிரோடு இருக்கும்போதே என் பேச்சை மதித்துக் கேட்டவன். ஆகவே இறந்தாலும் என் கட்டளை காதைச் சென்றடைந்தது அதிசயமில்லை," என்றார். குருவின் உபதே

சத்தை முழுக்கவனத்துடன் கேட்கும் சீடனுக்குக் கிடைக்கும் நன்மை இக்கதை மூலம் தெரிகிறது.

இம்மாதிரிச் சீடன் பின்பற்றுவதற்குத் தனியான அறம் கிடையாது. அவனுக்கு காமம் முதலிய ஆசைகள் எழுவதில்லை. அவன் பணத்தின் பின்னால் ஓடுவதில்லை. எண்ணங்களாலும் அறிவாலும் உருவாகின்ற விவேகத்துக்கும் இனி வேலையில்லை.

இந்துத் துறவி ஒருவர் என் விருந்தாளியாகத் தங்கியிருந்தார். உரையாடுகையில் இந்தியா ஆன்மிகத்தில் தலைசிறந்த நாடு என்றார். இங்குதான் எல்லா அவதாரங்களும் தோன்றின. தலைசிறந்த மகான்கள் இங்குதான் பிறந்தனர் என்று காரணம் கூறினார்.

நான் அவரை மடக்கினேன், "ஆம், இதெல்லாம் உண்மைதான். ஆனால் அவதாரங்கள் ஏன் நிகழ்ந்தன? இங்குதான் அசுரர்கள் நிறைய இருந்திருக்க வேண்டும். புனிதர்கள் பெரும் எண்ணிக்கையில் ஏன் தோன்றினார்கள்? இங்குதான் நல்வழிப் படுத்த வேண்டிய தீயவர்கள் பெரும் எண்ணிக்கையில் இருந்திருப்பார்கள். இது நமக்குப் பெருமை சேர்க்கும் விஷயமா?

உன் வீட்டிற்கு தினமும் டாக்டர் வந்தால் பெருமையடித்துக் கொள்வாயா? "ஊரிலுள்ள பெரிய டாக்டர்கள் என் வீட்டிற்கு வருகிறார்கள். என் வீட்டு வாசலில் அடிக்கடி எவராவது டாக்டரின் கார் நிற்கும்," என்று நீ கூறினால் மற்றவர்கள் பரிதாபப்படுவார்கள். உன் வீட்டை நோயாளிகளின் கூடாரம் என்று இகழ்வார்கள். எந்த வீட்டிற்கு டாக்டர் வருவதில்லையோ, டாக்டர் வரவேண்டிய தேவை இல்லையோ, எந்த வீட்டில் மருந்துக்குப்பிகள் காணப்படுவதில்லையோ அந்த வீடே சிறந்தது.

ஞானி லாவோத்ஸு எந்த மக்களுக்கு தர்மம் (அறம்) என்றால் என்ன என்று தெரியாதோ அவர்கள் பாராட்டுக்குரிய வர்கள். ஏனெனில் அதர்மம் என்பது பரவியிருந்தால்தானே அதை அழித்து, தர்மத்தை நிலைநாட்டும் தேவை எழும். அதர்மம் என்னும் நோய் சமூகத்தைப் பாதித்திருந்தால்தான் அதைப் போக்க தர்மம் என்னும் மருந்துக்குப்பி தேவைப்படும் நோயுற்ற

அந்த நிலையில்தான் தர்மகுரு என்பவர்கள் தோன்றுவார்கள். ஏற்கெனவே நேர்மையாக உள்ளவர்களுக்கு நேர்மை குறித்து பாடம் நடத்த யாரும் வரவேண்டியதில்லை.

**தே**வாலயத்தில் பாதரியாரின் பிரசங்கம். அதன் முடிவில் அவர், "அடுத்த ஞாயிறு நான் சத்தியம் பற்றி பேசவுள்ளேன். அதைப் புரிந்துகொள்ள வசதியாக பைபிளில் உள்ள லூகா என்னும் பகுதியில் 68ஆவது அத்தியாயத்தைப் படித்துவிட்டு வாருங்கள்," என்று அறிவித்தார்.

அடுத்த வாரம் அவர் சொற்பொழிவைத் தொடங்கும் முன், "லூகா அத்தியாயம் 68ஐ படித்தவர்கள் மட்டும் கைதூக்குங்கள்," என்று கேட்டுக்கொண்டார். அனைவரும் படித்ததாகக் கைதூக்கினார்கள்—ஒருவரைத் தவிர. பாதரியாரின் கண்ணில் நீர்! "உங்களிடம் சத்தியம் பற்றி பேசுவதில் அர்த்தமில்லை. நீங்கள் பொய்யர்கள். ஏனெனில் லூகாவில் 68ஆம் அத்தியாயமே கிடையாது," என்று பாதரியார் ஒரு போடுபோட்டார்.

பிறகு அவர் கைதூக்காதவரைச் சுட்டிக்காட்டி, "இந்தக் கூட்டத்தில் ஒரு சத்தியவாதியாவது இருப்பது ஆறுதல் தரு கிறது," என்றார். அப்போது கைதூக்காதவர் அருகிலிருந்தவரிடம் ஏதோ விசாரித்துவிட்டு எழுந்தார். "ஃபாதர், எனக்குக் காது சரியாகக் கேட்காது. முதலில் நீங்கள் கேட்டது எனக்குப் புரியவில்லை. இப்போது பக்கத்திலிருந்தவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டேன். லூகா 68ஆவது படித்தீர்களா என்றுதானே கேட்டீர்கள். ஆமாம், ஃபாதர், நான் அந்த அத்தியாயத்தைப் படித்துவிட்டுத்தான் வந்துள்ளேன்," என்றார். பாதிரியார் மயக்கம் போட்டிருப்பார் என ஊகிக்கலாம்.

பொய்யர்களுக்கு புத்தி புகட்டவே சத்தியம் தேவைப் படுகிறது. வன்முறையில் மூழ்கியிருப்போருக்குத்தான் அஹிம்சை பாடம் நடத்தவேண்டியுள்ளது. மக்கள் மோசடிக்காரர்களாக இருந்தால் நேர்மை கற்றுத்தர வேண்டும். மக்கள் பாவிகளா யிருந்தால் புண்ணியம் பற்றி அவர்களுக்கு விளக்க வேண்டியிருக்கும்.

தனது ஆத்மாவின் மேன்மையை நன்கறிந்தவன் காமம், பணத்தாசை, துவைதம், அத்துவைதம் என்றெல்லாம் தன்னைக் குழப்பிக்கொள்ள மாட்டான். தனது சுயரசத்தில், ஆத்மரசத்தில் லயிக்க முடியாதவன்தான் பிறர் மூலமாக, பர ரசம் (பிற ரசம்) மூலம் மகிழ்ச்சி பெற முயல்வான். இதுதான் காமரசம்.

இதேபோல் மனத்தளவில் பூரண திருப்தியடையாதவன், தாழ்வு மனப்பான்மை கொண்டிருப்பவன் பணம், பதவி, சமூக கௌரவம் போன்றவற்றைப் பெறப் பாடுபடுகிறான். உளவியல் வல்லுநர்களும் இக்கருத்தை ஆமோதிக்கின்றனர். உள்ளே வெறுமையாக உணர்பவன்தான் அதை நிரப்ப வெளியே இருந்து பொருள்-பதவி-புகழ் போன்றவற்றைப் பெற முயல்வான். உள்ளே திருப்தியுடன் விளங்குபவன் வெளியில் இருக்கும் எதற்கும் ஆசைப்படமாட்டான்.

மகாவீரரும் புத்தரும் பிறப்பால் தங்களுக்குக் கிடைத்த சிம்மாசனத்தை விட்டு இறங்கினார்கள். அந்த சிம்மாசனம் மரத்தாலும், இரும்பாலுமே ஆனது என்பதை உணர்ந்தார்கள். அதைவிட உயர்ந்த, தலைசிறந்ததான ஆத்ம சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்தார்கள். நீயும் அவ்வாறு உனக்குள் இருக்கும் ஆத்ம சிம்மாசனத்தில அமர முடியும். ஆனால் உன் பார்வை வைரக் கற்கள் பதித்த ஆசனத்தில் லயித்துள்ளது. அவை கூழாங்கற்களின் ஒருவகைதான் என்று உன்னால் நினைக்க முடியவில்லை.

முல்லா நஸ்ருத்தீனைச் சந்திக்க ஒருவர் வந்தார். நஸ்ருத்தீன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் இன்னொரு நாற்காலி காலியாக இருந்தது. நஸ்ருத்தீன், வந்தவரை உட்காரச் சொல்லாமல், "நீங்கள் யார்? உமக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். "நஸ்ருத்தீன், என்னை அடையாளம் தெரியவில்லையா? நான் உங்கள் ஊர் எம்.எல்.ஏ. ஆயிற்றே. தேர்தல் சமயம் உங்களிடம் ஆதரவு கேட்டு வந்தேன்," என்றார். நஸ்ருத்தீன் காலியாயிருந்த நாற்காலியில் உட்காருமாறு சொன்னார்.

"நஸ்ருத்தீன், உங்களுக்குச் செய்தி தெரியாது போலிருக்கிறது.. எனக்கு விரைவிலேயே அமைச்சர் பதவி கிடைக்க

வுள்ளது. அதைத் தெரிவிக்கவே வந்தேன்,'' என்றார் அந்த எம்.எல்.ஏ.

உடனே நஸ்ருத்தீன் எழுந்து நின்று தனது நாற்காலியைக் காண்பித்து, "அப்படியெனில் இந்த இரண்டு நாற்காலிகளிலும் உட்கார்ந்து கொள்ளுங்கள்,'' என்றார்!

இரண்டு ஆசனங்களில் ஒரேசமயத்தில் அமர முடியாது. ஆகவேதான் மகாவீரரும் புத்தரும் அரச சிம்மாசனத்தைத் துறந்து ஆன்மிக சிம்மாசனத்தில் அமர்ந்தனர். இதைத் தியாகம் என்று எல்லோரும் போற்றுகின்றனர். ஆனால் தியாகம் என்பது 1) ஒன்றைக் கைவிட்டு, பதிலுக்கு எதையும் பெறாமலிருப்பது; 2) ஒன்றைக் கைவிட்டு அதைவிட மலிவான ஒன்றைப் பெறுவது என்று பொருள் கொண்டது. புத்தரும் மகாவீரர் அற்பமான அரச சிம்மாசனத்தைக் கைவிட்டு இணையற்றதான ஆன்ம சிம்மாசனத்தைப் பெற்றனர். போலியான மண்ணரசைத் துறந்து நிரந்தரமான விண்ணரசில் பங்கு பெற்றனர். இதில் தியாகம் எங்கே வந்தது?

சராசரி மனிதனாகிய நீதான் தியாகி! உன்னதமான வாய்ப்பைப் பயன்படுத்தாமல் அற்பமானதைப் பிடித்துக் கொண்டுள்ளாய். உன் எதிரே பொன் கட்டியும் மண் கட்டியும் உள்ளன. நீயோ அற்பமான மண்கட்டியை எடுத்துக் கொள்கிறாய். தியாகத்தை மதிப்பிட, எதைப் பெற்றோம் என்பதையும், அதைப் பெற எதைக் கைவிட்டோம் என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

ஜனகர் இந்த சுலோகத்தில், ஆன்மாவின் சிறப்பில் நிலைபெற்றபின், சமயக்கோட்பாடுகள் அடிபட்டுப் போகின்றன என்கிறார். ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்றா, இரண்டா (அத்துவைதமா, துவைதமா) என்னும் விவாதங்கள் வீண் என்கிறார். சத்தியத்தை விளக்க முடியாது என்கிறார். 'என்றும் ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்றுவிட்ட எனக்குக் கடந்தகாலமோ, எதிர்காலமோ, நிகழ்கால்மோ கிடையாது. காலம்-இடம் என்னைப் பொறுத்தவரையிலும் மதிப்பிழந்தவை.'' **(சுலோகம் 279)**

நிரந்தரத் தன்மை அல்லது நித்தியத்துவம் என்பதைப் புரிந்துகொள் (eternity). நாம் கால ஓட்டத்தின்படி வாழ்கிறோம். சமாதிநிலையிலுள்ளவனுக்கு காலத்தின் பாதிப்பு இல்லை. நாம் பார்த்துக் கொண்டிருக்கும்போதே காலம் ஓடிவிடுகிறது; காலம் மாறிவிடுகிறது காலம் அநித்தியமானது. அது வருவதும போவதும் தெரிவதில்லை. இதோ பொழுது விடிகிறது. கிடுகிடுவென்று பகல், மாலை, இரவென்றெல்லாம் மாறி அடுத்த நாள் வந்துவிடுகிறது.

நமது மனம் காலத்தின் அடிப்படையில் இயங்குகிறது. நீ உன் நிஜ சொரூபத்தை அறிந்துகொள்ள காலப் பிரிவுகளைக் கடக்க வேண்டும். கடந்தகாலம் போய்விட்டது; எதிர்காலம் வரவில்லை. நடுவிலுள்ள அற்பமான கால அளவை நிகழ்காலம் என்கிறோம். கடந்தகாலம் இப்போது இல்லை, எதிர்காலம் வரவில்லை என்னும் இரண்டு இல்லைகளுக்கு நடுவிலுள்ளது நிகழ்காலம். அல்லது, ஓர் இல்லையிலிருந்து இன்னோர் இல்லைக்குப் போகும்போது எடுத்துக்கொள்ளும் நேரமே நிகழ்காலம். இப்போது மணி 9.05 என்றால், நான் இந்த வாக்கியத்தைக் கூறி முடிப்பதற்குள் 9.06 ஆகிவிடும்.

கடந்தகாலமோ இருப்பில் இல்லை. எதிர்காலமோ இன்னும் இல்லை. நிகழ்காலமும் வந்ததும் போவதும் தெரிவதில்லை. இந்த மூன்றுக்கும் அப்பாலுள்ளதுதான் நித்தியமானது; என்றும் எக்காலமும் இருப்பது.

நிகழ்காலத்தில் வாழுமாறு மக்களுக்குக் கூறப்படுகிறது. நானும் அவ்வாறே உங்களுக்குச் சொல்லிவருகிறேன். அதே சமயம் அது சிரமமானது என்பதையும் அறிந்துள்ளேன். இன்றைய தினத்தை நிகழ்காலம் என வைத்துக்கொண்டால், நேற்றுவரை யிலான நீண்ட கடந்தகாலமும், நாளையிலிருந்து தொடங்கும் நீண்ட எதிர்காலமும் நம் கவனத்தை இழுக்கின்றன. ஆகவேதான் மக்கள் கடந்தகால நினைவுகளிலோ, எதிர்காலக் கனவுகளிலோ வாழ்கிறார்கள்.

நிகழ்காலத்தில், அந்தந்த நிமிடத்தில் வாழ்வது நல்ல ஆன்மிகப் பலன் தரும். நிகழ்காலத்தில் கால ஓட்டம் நின்று போகிறது. ஆகவே நித்தியத் தன்மை உணரப்படுகிறது. அப்போது

நாம் நினைவுகளிலும் கனவுகளிலும் வாழாமல் நிஜமாகவே யதார்த்த வாழ்க்கை நடத்துகிறோம். நிகழ்கால வாழ்க்கையில் கால நினைவு இருப்பதில்லை என்பதால் காலத்தைக் கடந்து வாழ்கிறோம்.

ஐன்ஸ்டீன் காலமும் இடமும் ஒன்றே என அறிவித்தார் (time and space). அதேபோல் ஜனகரும், ஆத்மாவில் நிலைபெற்றுவிட்ட தன் கணிப்பில் காலமும் இடமும் மதிப்பிழந்தவை என்கிறார்.

ஆத்மா எந்த இடத்தில் உள்ளது என்று என்னைக் கேட்டால் என்னால் பதில் சொல்ல இயலாது. அந்தக் கேள்விக்கு யாரும் உறுதியாக அல்லது துல்லியமாகப் பதில் சொன்னது கிடையாது. ஏனெனில் ஆத்மா, இடம் என்பதைக் கடந்தது. உடல் எங்கே இருக்கிறது. என்று யாரும் பதில் சொல்ல முடியும். அது எந்த ஊரில், எந்த அட்சரேகையில், எந்த தீர்க்கரேகையில் இருக்கிறதெனச் சொல்ல முடியும். இதோ என் எதிரே யார் எங்கு உட்கார்ந்துள்ளனர் என்று என்னால் கூறமுடியும்.

ஆனால் ஆத்மா இருப்பது எங்கே? இதயமா, தொப்பிளா, மூளையிலா? கேள்வியே தவறு. எனவே இதற்கு விடை இருக்க முடியாது. ஆத்மா, இடம் என்னும் பரிணாமத்தைக் கடந்தது. ஆத்மா எந்த நேரத்தில் எப்படி இருக்கிறது; அது எப்போ தெல்லாம் இயங்குகிறது என்ற கேள்விக்கும் இடமில்லை. ஏனெனில் அது காலத்திற்கு அப்பாற்பட்டது.

'தனது ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்ற எனக்கு ஆத்மா-அநாத்மா என்றெல்லாம் இல்லை. கவலை-கவலை யின்மை இரண்டுமில்லை.' **(சுலோகம் 280)**

**க**வலை என்பது மனத்தில் தோன்றி உடலைப் பாதிக்கிறது. ஆத்மாவில் நிலைபெற்றவன் மனம், உடல் ஆகிய இரண்டாலும் பாதிக்கப்படுவதில்லை. எனவே அவன் கவலையினால் பாதிப்படைவதில்லை. தனக்கு ஏன் கவலையே இல்லை என்றும் அவன் கவலைப்படுவதில்லை! அவனைப் பொறுத்தவரையில் கவலை, கவலையின்மை இரண்டும் ஒன்றாகக் காணாமல்

போகின்றன. 'நான் ஆத்மா' என்னும்போது 'நான்' என்ற சொல் அதைப் பூரணமாகவிடாமல் தடுக்கிறது. நான் ஆத்மா இல்லை என்று சொல்வதற்கும் ஆதாரம் இல்லை.

'தனது ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்ற எனக்கு கனவு, விழிப்பு, இரண்டையும் கடந்த சுஷுப்தி ஆகிய மூன்று நிலைகள் மட்டுமல்ல, சர்வோச்ச நிலையான துரீயமும் கிடையாது எனக்கிருந்த எல்லா பயமும் நீங்கிவிட்டது.' **(சுலோகம் 281)**

**ம**னத்தில் எத்தனையோ உணர்ச்சிகள் இருப்பினும் எல்லா வயதிலும் இருப்பதும், எல்லாவற்றையும்விட வலுவானதுமான உணர்ச்சி பயம்தான், ஒருவன் செய்யும் எல்லா வேலைகளிலும், செய்யாமலிருக்கும் எல்லா வேலைகளிலும் பய உணர்வு நுணுக்கமாக உள்ளது. பயமே மனம் என்றுகூடச் சொல்லலாம். பயம் போனால் மனமும் போய்விடும்.

**எ**ங்கள் ஊரில் என் வீட்டெதிரே ஒரு பொற்கொல்லரின் கடை. கடையைப் பூட்டியபின் அவர் பலமுறை பூட்டை இழுத்துப் பார்ப்பார். சில அடி தூரம் நடந்தபின் மீண்டும் திரும்பிப் பூட்டை அசைப்பார். இதைப் பலர் கவனித்திருக்கின்றனர். ஆகவே வேண்டுமென்றே சிலர் அவர் வருவதைப் பார்த்து, "வீட்டுக்குக் கிளம்பிட்டீங்களா? கடையைச் சரியாக பூட்டியாச்சா?" என்று சீண்டுவார்கள். "சரியாப் பூட்டியாச்சு," என்று சொல்லிவிட்டுப் பொற்கொல்லர் முன்னேறுவார். ஆனால் அந்தக் கேள்வியால் சந்தேகம் தோன்றி, கடைக்குத் திரும்பிப் பூட்டை சோதிப்பார்!

என்னிடம் பலர் ஆலோசனை கேட்க வருவதைப் பார்த்து இவரும் ஒருநாள் சந்திக்க வந்தார். பூட்டைப் பலமுறை பரிசோதனை செய்யும் பழக்கத்தை எப்படிக் கைவிடுவது என்று கேட்டார். நான் பதில் கூறினேன்:

"இது பழக்கம் காரணமாக இல்லை. உங்கள் மனத்திலுள்ள பயம் காரணமாகப் பூட்டை இழுத்துப்பார்க்கிறீர்கள். நம் ஊரில் பல பணக்காரர்கள் இரவில் தூங்கும்போதுகூட வீட்டைப் பூட்டுவதில்லை. நீங்களோ சிறிய அளவில்தான் வருமானம் பார்க்கிறீர்கள். ஆனாலும் நீங்கள் கடையில் எதையோ ஒளித்து

வைப்பதாகத் தோன்றுகிறது." என்றதும் அவர் ஆச்சரியப்பட்டார். "நான் எதையோ மறைத்து வைத்திருப்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார்.

"உங்கள் பயமே நீங்கள் எதையோ மறைக்கிறீர்கள் என்பதை வெளிப்படுத்துகிறதே. இதை நீங்கள் ஒப்புக்கொண்டபின் மீதியையும் சொல்லிவிடுவது நல்லது." என்று நான் அவரைத் தூண்டினேன்.

அதற்கு அவர், "பொற்கொல்லர் என்ற முறையில் நான் பெறும் கூலி தவிரக் கூடுதலான வருமானமும் உண்டு. அப்பணத்தை அங்கே குழி தோண்டிப் புதைத்துவைத்துள்ளேன். இது தெரிந்து கடையைப் பூட்டியபின் எவனாவது உள்ளே நுழைந்து திருடிவிடுவானோ என்று பயப்படுகிறேன்." என்று காரணம் கூறினார்.

நான் சிரித்தேன். "நிச்சயமாக எவனாவது வந்து அதைத் திருடத்தான் செய்வான். நீங்கள் பலமுறை பூட்டைப் பரிசோதிப்பதைத் திருட்டு புத்தியுள்ள பலர் பார்த்திருப்பார்கள். அவ்வளவு ஏன்? உங்கள் ரகசியம் எனக்குத் தெரிந்துவிட்டதால் நானே கூட திருட வரலாம். குழியில் புதைத்தால் ப்ணம் கெட்டுப்போகும். மழைத் தண்ணீர் சொட்டினால் குழி சேறாகிவிடும். உங்களுக்கு ஏதாவது நேர்ந்தால் பணம் புதைத்து இருப்பது உங்கள் குடும்பத்தாருக்குத் தெரியாமல் போய்விடும். அந்தப் பணத்தை வங்கியில் கட்டுங்கள். உங்களிடம் பெரிய தொகை இருக்காது. ஆகவே எப்படி வந்தது என்று அங்கே கேட்கமாட்டார்கள். வட்டி கிடைத்துப் பணம் வளரும். நீங்கள் இரவில் நிம்மதியாகத் தூங்கலாம்," என்று கூறி அவரை அனுப்பிவைத்தேன்.

பயம் என்பது என்ன? உதாரணமாக, சாவைப் பற்றி நினைக்கையில் நமக்கு நடுக்கம் ஏற்படுவது பயத்தின் வெளிப்பாடுதான். ஆத்மா இறக்காது என்பதையும், நிலையற்ற உடலைக் காப்பாற்ற முடியாது என்பதையும் நினைவில் வைத்தால், பயம் தெளியும் அல்லது குறையும். 'உடல் அளவில் நான் இறப்பேன், ஆத்ம அளவில் என்றும் இருப்பேன்' என்று

அடிக்கடி கூறிக்கொள். ஆத்மா எனக்கு முன்னாலும் இருந்தது, பின்னாலும் இருக்கும். ஆனால் பிறப்பின் காரணமாக எது உண்டானதோ அந்த உடலின் கதை சாவுடன் முடிந்துவிடும்.

'ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்றுவிட்ட எனக்கு எதுவும் தொலைவில் இல்லை. அருகிலும் இல்லை. உள்ளே-வெளியே என்பவை கிடையாது. ஸ்தூலம்-சூட்சுமம் (பருமன்-நுணுக்கம்) என்பவையும் இல்லை.' **(சுலோகம் 282)**

**நா**ன் எனது மையத்துக்கு வந்துவிட்டேன். அங்கே அமர்ந்துவிட்டேன் வீடுபேறு என்று சொல்லப்படும் என் வீட்டுக்குத் திரும்பிவிட்டேன். நான் எனது மையத்தில் அமர்ந்தால் எல்லாவற்றின் மையத்திலும் அமர்ந்துவிட்டதாக அர்த்தம். பிறகு தொலைவு-அருகில் என்னும் சொற்கள் அர்த்தமிழக்கின்றன. எனக்கு அருகில் எவரும் இல்லை. எவரும் எனக்குத் தொலைவிலும் இல்லை. ஏனெனில் எனக்கு அந்நியர் அல்லது இரண்டாமவர் என்று எவரும் கிடையாது. இருப்பவன் நான் ஒருவன் மட்டுமே!

'ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்றுவிட்ட எனக்குச் சாவு எங்கே? வாழ்வு எங்கே? உலகம் எங்கே? உலக நடவடிக்கைகள் எங்கே? லயம் எங்கே? சமாதி எங்கே?' **(சுலோகம் 283)**

**எ**ன்னில் நான் நிலைபெற்றுவிட்டதால் வேறு எதிலும் நான் லயிக்க வேண்டியதில்லை. சமாதியில் ஈடுபட வேண்டியதில்லை. இவ்வுலகம்-பரலோகம் என்னும் இரட்டைகள் என்னைப் பொறுத்தவரையிலும் இனி கிடையாது. எல்லாப் பிரிவுகளும் பிளவுகளும் நீங்கிவிட்டன. அவை எல்லாம் பயத்தின் காரணமாக உண்டாகின்றன. பயம் நீங்கிவிட்டதால் வாழ்வு-சாவு என்பவையும் எனக்கு ஒரு பொருட்டல்ல. இரண்டும் சமம்.

'ஆத்மாவின் சிறப்பில் நிலைபெற்றுவிட்ட என்க்கு அறம்-பொருள்-இன்பம் ஆகிய எல்லாம் முடிந்துவிட்டது. யோகம் முடிந்துவிட்டது. ஞானம்-விஞ்ஞானம் முடிந்துவிட்டது.' **(சுலோகம் 284)**

இந்த சுலோகத்தில் மூன்று முறை வரும் அலம் என்னும் சொல்லுக்கு விஷயம் முடிந்துவிட்டது. பூரணமாகிவிட்டது என்று பொருள். முற்றுப்புள்ளி வைத்தாகிவிட்டது (the end). கதை முடிந்துபோனது.

"ஆத்மாவில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் எனக்கு அறம்-பொருள்-இன்பம் ஆகிய மூன்றிலும் நாட்டமில்லை. அதாவது எனக்கு மோட்ச ஆசையுமில்லை, பணத்தாசையும் இல்லை, காமவேட்கையும் இல்லை. ஆகவே நான் முழுமை பெற்றுவிட்டேன்" என்கிறார் ஜனகர்.

யோகம் என்பது உள்முக விஞ்ஞானம். விஞ்ஞானம் என்பது வெளிப்படையான யோகம். ஆத்மாவில் உறைபவனுக்கு உள்ளே-வெளியே என்ற பேதம் கிடையாததால் அவனுக்கு உள்ஞானமும் வெளிஞானமும் ஒன்றுதான். ஒரு முள்ளால் இன்னொரு முள்ளை எடுத்துவிட்டுப் பிறகு இரண்டையும் தூக்கி எறிவதுபோல், ஆத்மஞானம் பெற்றபிறகு யோகஞானமும் உலகஞானமும் தேவைப்படுவதில்லை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் சில சமயம் வாழ்க்கையின் சிகரத்தில் ஏறிவிட்டதாக உணர்கிறேன். எல்லாவற்றையும், வாழ்க்கையின் ரகசியத்தையும் அறிந்து கொண்டதாகவும் உணர்கிறேன். ஆனால் சில நேரம் அடர்ந்த சோகம் சூழ்கிறது. உதவிக்கு யாருமில்லாதது போலவும் உணர்கிறேன். எனது உண்மையான பிரச்சினை என்ன என்பது எனக்கு வசமாகவில்லை.**

சிகரம் என ஒன்றிருக்கும்வரை பள்ளத்தாக்குகளும் இருக்கத்தான் செய்யும். சிகரத்தைத் தொட ஆசைப்படுபவன் பள்ளத்தாக்கில் சரியக்கூடிய ஆபத்திற்கும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். சுகத்தை வேண்டுபவன் தன்னை அறியாமலே துன்பத்தையும் வரவழைத்துக் கொள்கிறான். சுகம் வரும்போது அதன் நிழல்போல் துன்பமும் வந்துவிடும்.

சுகத்தை நாடுவதிலிருந்து விடுபட்டால்தான் துன்பத்தி லிருந்தும் விடுபட முடியும். சுகம்-துக்கம் என்னும் இரட்டையி லிருந்து விடுபடுமாறு அஷ்டாவக்ரர் உபதேசிக்கிறார். நீ சிகரத்தை அடைந்ததாக நினைப்பது பிரமை மாத்திரமே. சென்றடைய வேண்டியது சிகரத்தையன்று. நீ சமதளமான பூமிக்கும் போய்ச்சேர வேண்டும். அங்கே உயரமான இடம், பள்ளமான இடம் என்றெல்லாம் கிடையாது. தராசின் தட்டுகள் சமநிலையில் இருந்தால் நடுவிலுள்ள முள் அப்படியே நின்றுவிடும். கடிகாரத்தின் ஊசல் வலம்-இடம் அசைவது நின்றுபோனால், கடிகாரம் ஓடுவது நின்றுபோகும்.

இதுவே முக்திநிலை. அவ்வாறில்லாவிடில் மனம் புதுப்புது விளையாட்டுகளில் ஈடுபடும். பணம் சம்பாதித்தல், பிறர் கவனத்தைக் கவர முயலுதல், உலகவாழ்வில் வெற்றிபெறுதல், புகழுக்காக மதவிஷயங்களில் ஈடுபடல் என மனம் வெற்றியையே நாடும் வரையிலும், சுகத்தைத் தேடி அலையும் வரையிலும் நீ துன்பத்தையும் சேர்த்தே அனுபவிக்க நேரிடும். ஏனெனில் பூவுடன் முள்ளும் தோன்றுவதுபோல், பகலுடன் இரவும் வருவதுபோல் இன்பத்துடன் சேர்ந்து துன்பமும் வரும். அவை பிரிக்க முடியாதவை.

விடுவதானால் இரண்டையும் விடு. ஒன்றை மட்டும் விட இயலாது. ஆனால் நாம் சுகத்தை மட்டுமே விழைகிறோம். இரவு முடிந்து பகல் பொழுதுக்காக மட்டும் ஏங்குகிறோம். இது நடவாத காரியம். உலகம் எப்பொழுதும் முரண்படுகின்ற இரட்டைகளை அடிப்படையாகக் கொண்டே இயங்குகிறது.

நீ சிகரத்தின் மீதேறி நிற்கையில் ஆனந்தம் கிடைப்பதாக நினைக்கிறாய். அதற்குப் பதிலாக நீ நிற்பதை சாட்சியாக மட்டும் கவனி. அப்பொழுது பள்ளத்தையும் சாட்சிபோல் பார்க்கும் மனோபாவம் தோன்றிவிடும். சிகரத்தில் ஏறிய ஆனந்த உணர்வும் பள்ளத்தாக்கின் துன்ப உணர்வும் நீங்கி சாட்சியாக, சாந்தமாக விளங்குவாய்.

இருப்பது ஒரு மனம். அது நூறு வேடம் தரிக்கிறது. புதுப்புது விதமாக நடிக்கிறது. சில சமயம் சிகரத்தின் மீது, சில சமயம் பள்ளத்தில், சிகரத்தில் ஏறியதே பள்ளத்திலும் வீழ்கிறது. நீ சிகரத்தைத் தொட்டதும், 'ஆஹா! என் லட்சியத்தை அடைந்து விட்டேன்,' என்று மகிழ்ந்து கூவினால், நீ வீழ்வது தொடங்கி விட்டது. ஒன்றைப் பிடித்துக்கொள்ளாதே. நீ எதிலிருந்தும்வலிந்து இழுக்கப்படவும் மாட்டாய். தொலைவில் நின்று நடுநிலைமையுடன் பார்.

அடுத்த முறை இன்பமான சூழ்நிலை வரும்போது, சாட்சிப் பார்வையை, நடுநிலையான பார்வையைச் செலுத்தி சுகத்தி லிருந்து விலகு. துன்ப சூழ்நிலையிலிருந்து இந்தப் பயிற்சியை ஆரம்பிக்காதே. துன்பநிலையில் எல்லோருமே தொலைவில்

நிற்பதைத்தான் விரும்புவார்கள். இதில் சிறப்பு ஒன்றும் இல்லை. துன்பத்தோடு யார் போல் ஒட்டிக்கொள்வார்கள்? துன்பத்தின் போது உன் மனம் சுயமாகவே உன்னை விலகியிருக்கச் சொல்லும்.

முள்ளிலிருந்து விடுபட யார்தான் விரும்பமாட்டார்கள்? பூ வேண்டாம் என்று தூக்கி எறிவதுதான் அபூர்வமானது அவ்வாறு எறிந்தவனின் வாழ்க்கையில் முள்களும் இல்லாமல் போய்விடும். இப்படி அமையாவிடில், நீ பள்ளத்தில் இருந்து கொண்டு வருந்தும்போது சிகரத்திற்கு ஆசைப்படுவாய். சிகரம் ஏறினாலும் மனம் அமைதியடையாமல் பள்ளத்தில் விழுந்துவிடுவோமோ என்று பதற்றமாக இருக்கும்.

நீ வாழும்போதும் அனுபவித்து வாழ்வதில்லை. சாவு பயம் எப்பொழுதும் இருக்கிறது. அது கட்டாயம் நிகழும் என்பதால் மனம் அவ்வப்பொழுது எந்த நிமிடம் சாவு வருமோ என்று திடுக்கிடுகிறது. நேற்று ஒருவன் இறந்தான். இன்று ஒருவன் இறந்தான். கியூவில் நிற்கிறோம். அத சுருங்கிக்கொண்டே வருகிறது. நாம் தயக்கத்துடன் முன்னேறுகிறோம். உயிருடன் இருந்தால் மரணபயம் வாட்டுகிறது. இறந்துபோனால் மறுபிறவி யெடுத்து இப்பிறவியில் அனுபவிக்காததை அனுபவிக்கும் ஆசை மூள்கிறது. ஆகவே வாழ்க்கைச் சக்கரம் என்று மக்கள் வர்ணிக்கின்றனர்.

அடுத்த முறை சுகமான சூழ்நிலை வரும்போது துணிந்து சாட்சிக் கண்ணோட்டத்தைப் பயிற்சிசெய். சுகமான சூழ்நிலையில் விழிப்புப்பெற துணிச்சல் தேவை. வழக்கமாக மனிதன் அப்போது தூங்கவே விரும்புவான். கஷ்டப்பட்டுக் கிடைத்த சுகத்தை சாட்சிபோல் பார்த்து அனுபவிக்காமலா போய்விடுவது என நினைப்பான்.

சோகமாக இருப்பது ஒரு பழக்கம் போலாகிவிட்டது. சந்தோஷப்படுவதும் ஒரு சடங்குபோலாகிவிட்டது. இந்த இரு நிலைகளிலும் சாரமில்லை. இரு நிலைகளிலும் நீ உன்னை இழக்கிறாய். சாட்சி மனப்பான்மைதான் எந்த நிலையிலும் உன்னை இழக்காதபடி தடுக்கும். விழி, பார், எதனுடனும் ஒட்டிக்

கொள்ளாதே. நீ வெளிப்பொருட்களுடன் உன்னை இணைத்துக் கொள்ளாவிடில், உள்பொருள்களுடன் சேர்ந்துவிடுவாய். அப்படி உள்ளே சேருவதுதான் யோகம்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! கடவுளை எப்படி வரையறுத்துக் கூறுவது? கடவுளின் உருவம் எப்படி இருக்கும்?**

கடவுளை வரையறுக்க முடிந்தால் அவர் கடவுளாக இருக்கமாட்டார்! இதையே கூட கடவுளை வரையறுக்கும் வாக்கியமாகக் கொள்ளலாம் (definition)! ஏனெனில் வரையறுத்தல் என்பது எல்லைகளை நிச்சயித்துவிடுகிறது. எல்லைக்குட்படக் கூடிய எல்லாவற்றையும் வரையறுக்கலாம். எல்லையில்லாதவரை எப்படி வரையறுப்பது? கடவுளை வரையறுக்க முயன்றால் அது பொருந்தாத சட்டைபோல் அளவு குறைந்ததாக இருக்கும். அது முழு உண்மையாக இருக்காது.

கடவுளின் வடிவம் பற்றி கேட்டாய். எல்லா வடிவங்களும் அவருடையவையே. நீ பார்ப்பதெல்லாம் அவரது தோற்றமே. அவரைத் தவிர உலகில் வேறெதுவும் கிடையாது. அவருடைய வடிவங்கள் முடிவற்றவை. அடிப்படையில் அவர் வடிவமற்றவர், சொரூபமான அவர் அடிப்படையில் அரூபமானவர். அரூபம்தான் இஷ்டப்பட்ட உருவங்களை எடுக்க முடியும். அலைகள் சிறிய அலை, பெரிய அலை, நுரையுள்ள அலை, நுரையற்ற அலை, ஆழிப்பேரலை என எத்தனையோ வகையாயினும் அவற்றின் அடிப்படையில் கடலின் உருவம் இத்தகையது என்று வரையறுக்க முடியாது. அது அரூபமானது.

கேள்வி கேட்டவனாகிய நீயும் கடவுளின் ஒரு வடிவம். நீ கண்ணாடியில் உன்னைப் பார்க்கும்போது நீ காண்பது கடவுளைத்தான். கோயிலில் உள்ள அழகிய சிலைகள் மட்டுமே கடவுளல்ல. பாதையில் கிடக்கின்ற கரடுமுரடான கற்களும்கூட கடவுள்தான். கடவுள் என்னும்போது மனித உருவத்தில் கற்பனை செய்யாதே. உலகில் பரவியுள்ள, உலகை இயக்குகின்ற அளவற்ற

சக்தியின் பெயர்தான் கடவுள். ஆகவே அவரை மாசக்தி என்கிறோம்.

**இந்த உலகம் வந்தது எப்படி**
**என்று எண்ணி என் புத்தி**
**ஏதும் சொல்ல முடியாமல்**
**பிரமித்துப்போய் நின்றுவிட**
**இதயம் சொன்னது பதில்போல**
**எனது அனுமானத்தின் அடிப்படையில்**
**பானை என்று ஒன்றிருந்தால்**
**எங்கோ இருப்பான் குயவனும் ஒருவன்**

கேட்க நன்றாக உள்ளன இவ்வரிகள். தர்க்கமும் (வாதமும்) பொருத்தமாக உள்ளது. ஆனால் கடவுள் என்பவர் அனுமானம் இல்லை (inference). குடத்தைச் செய்ய குயவர் இருந்தாக வேண்டுமென்றால், குயவரைச் செய்தவர் யார்? அனுமானத்திற்கும் கடவுளுக்கும் தொடர்பு கிடையாது. அனுமானம் என்பது கற்பனையின் வகை. கடவுளோ அனுபவம்.

கடவுள் என்பவர் ஊகம் இல்லை, தர்க்கம் இல்லை, சித்தாந்தம் இல்லை. அவர் அனுபவம் ஆவார். உன்னையே உருக்கிக்கொள்வதன் மூலம், உன் சிந்தனைக்கு மேன்மேலும் மெருகேற்றிக் கொள்வதன் மூலம், குடமும் குயவரும் இரண்டல்ல, இரண்டும் ஒன்றே என நீ அறிந்துகொள்வாய். படைத்தவரும் படைப்பும், கடவுளும் அவரது சிருஷ்டியும் வேறு வேறு அல்ல.

உனக்குக் கிடைத்த தவறான சாஸ்திரத் தகவல்கள் காரணமாக, கடவுள் எங்கோ தொலைவில் சுவர்க்கத்தில் சிம்மாசனம் போட்டு உட்கார்ந்திருக்கிறார் என்று நீ நினைக்கிறாய். ஆகவே நீ அருகில் உள்ளவற்றைப் பார்க்கத் தவறிவிட்டாய். உன் அருகிலுள்ள மரங்களில், மலைகளில் கடவுளைப் பார்க்காமல், சந்திரன்-நட்சத்திரங்களுக்கு அப்பால் கடவுளைத் தேடுகிறாய். கடவுளோ உனக்கு மிக அருகில் இருக்கிறார்.

நீ உன் அருகிலுள்ள கணவன் அல்லது மனைவியிடம், குழந்தைகளிடம் கடவுளைக் காண்பதில்லை. என்றோ, எங்கோ வாழ்ந்த ராமர், கிருஷ்ணர், புத்தர், மகாவீரரை போன்றவர்களை

மட்டுமே கடவுள் என்று நினைக்கிறாய். சாஸ்திர நூல்களில் கடவுளைக் காண்கிறாய். மனைவி கோணல்மாணலான கையெழுத்தில் எழுதிய அன்புக் கடிதத்தில் உனக்குக் கடவுள் தெரியவில்லை. கிருஷ்ணரின் கீதைச் சொற்களில் கடவுளின் குரல் உனக்குக் கேட்கிறது. உன் குழந்தையின் மழலைச் சொற்களில் கடவுளின் குரல் கேட்கவில்லையா?

கடவுள் மரங்களில் பசுமையாக, பட்சிகளின் குரல்களாக, காற்றடிக்கும்போது கண்ணுக்குத் தெரியாதவராக உன் அருகில்தான் உள்ளார். உன்னை நாற்புறமும் சூழ்ந்திருப்பது எல்லாமே கடவுளைத் தவிர வேறொன்றுமில்லை. நீ எங்கு குனிந்து தொட்டாலும் உன் கையில் படுவது கடவுளின் திருவடிகளே. நீ கண்களை உயர்த்தி எங்கே பார்த்தாலும் அங்கே கிடைப்பது கடவுளின் தரிசனமே. நீ சுவாசிக்கக் காற்றை உள்ளிழுக்கும்போது அதன் வழியே வருவது அன்புமயமான கடவுள்தாம். நீ தண்ணீர் பருகும்போது கடவுள் உன் தொண்டையை ஸ்பரிசிக்கிறார். ஆகவே கடவுளை வரையறுக்க முடியாதே தவிர, பல அடையாளங்களால், நிகழ்வுகளால், அனுபவங்களால் அவர் நமது ஒவ்வொரு செயலிலும் ஊடுருவி யிருப்பதை உணரலாம்.

கடவுளைக் குறிப்பிட்ட இடத்தில் மட்டும் பார்க்க முயலுபவன் தோல்வியடைகிறான். கடவுள் கோயிலில்தான் இருப்பதாகச் சொல்பவனும், கடவுள் கிருஷ்ணர் போன்ற குறிப்பிட்ட ஒருவர் மட்டுமே என்பவனும் ஒருவகையில் நாத்திகர்களே. கடவுளுக்கு எல்லை வகுத்துக் கூறுபவன் அவருக்கு எதிரியாவான்.

கடவுளை நம் அருகிலேயே உணரலாம். அன்பே அதற்கான மார்க்கமாகும். இறை அன்பினால் உன் இதயம் நெகிழ்ந்து, உன் வாயால் நீ மெய்ம்மறந்து பாடும்போது நீ கடவுளின் அனுபவத்தைப் பெறுகிறாய்.

வரையறுக்கும் முயற்சிகள் எல்லாம் மனிதனின் தயாரிப்புகள். மனிதன் தயாரிக்காத ஒன்று, நீ தயாரிக்காத ஒன்று,

உனக்குள்ளே இருக்கிறது. அதுதான் சுயமாகக் சுரக்கும் அன்பு. அதைக் கொண்டு கடவுளைத் தேடு.

மனிதன் எதை வேண்டுமானாலும் உண்டுபண்ணலாம். ஆனால் அன்பை அவன் உண்டாக்க முடிவதில்லை. கோயில் கட்டு என்று சொன்னால் அது உன்னால் முடியும். அன்பை நிர்மாணி என்று சொன்னால் அது சிரமம். அப்படி வரும் அன்பு செயற்கையாக இருக்கும். இன்னாரிடம் அன்பு செலுத்து என்று ஒருவர் உன்னிடம் கூறினால், நீ "அன்பு என்பது ஏற்படும் அல்லது ஏற்படாதே தவிர, பொருட்களை உற்பத்தி செய்வது போல் அன்பை தயாரித்து வழங்க முடியாது." என்பாய்.

கோயில் எழுப்புவது உன் கையில் உள்ளது. அழகான கோயில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. சிலைகள் செதுக்குவது உன் கையில் உள்ளது. கலையம்சம் மிகுந்த சிலைகள் செதுக்கப் பட்டிருக்கின்றன. ஆனால் மனிதனின் கையால் தயாரிக்கப் பட்டவற்றில் கடவுள் கிடைக்கமாட்டார். இவை வெளியில் தயாராகின்றவை. உன்னால் தயாரிக்க முடியாத அவரை உனக்குள்ளேதான் தேடி அடையாளம் காண வேண்டும்.

தர்க்கம் (லாஜிக்) சொல்லித்தர முடியும். அன்பைக் கற்றுத்தர முடியாது. தர்க்கத்தைப் பள்ளிக்கூடம், கல்லூரி, பல்கலைக் கழகத்திலும் பயிலலாம். அன்பைக் கற்றுத்தர பள்ளிக்கூடம் ஏதுமில்லை.

**ஸ்ரீ**ராமானுஜரிடம் ஒருவன் வந்து கடவுளை அடையும் வழியைக் கூறுமாறு வேண்டினான். "அதற்கு ஈடாக நான் எதை வேண்டுமானாலும் தர தயாராக உள்ளேன்," என்றான். ராமானுஜர் அவனிடம், "நீ இதுவரை யாரையாவது நேசித்ததுண்டா?" என்று கேட்டார்.

வந்தவன் திகைத்துப்போனான். "சுவாமி! நான் இந்த வம்பில் மாட்டிக்கொண்டதில்லை. சிறுவயதிலிருந்தே நான் ஆன்மிக ஈடுபாடு உள்ளவன். கடவுளை அடைவது மட்டும்தான் என் ஒரே லட்சியமாகவும் முயற்சியாகவும் உள்ளது," என்று தெரிவித்தான்.

ராமானுஜருக்கு வருத்தமாகிவிட்டது. "ஏனப்பா, நீ யாரிடமே அன்பு காட்டியதில்லையா? உன் பெற்றோர், உடன் பிறந்தோர், நண்பன் ஆகியோர் மீதுமா உனக்கு அன்பு தோன்றியதில்லை?" என்று அவர் விசாரித்தார்.

அவன் கோபப்பட்டான். "நான் கடவுளைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்களோ அன்பைப் பற்றிப் பேச்செடுக் கிறீர்கள். நான் பரமாத்மாவைத் தேடுபவன் அன்பிற்கும் எனக்கும் இடையே கொடுக்கல்-வாங்கல் இல்லை. அன்பு என்பது கடவுளை அடையவிடாமல் முட்டுக்கட்டை போட்டுவிடும்." என்றான்.

ராமானுஜர் கண்ணீருடன் சொன்னார், "அப்படியானால் நான் உனக்கு எவ்வகையிலும் உதவ முடியாது."

வந்தவன் விடவில்லை. "ஏன் அப்படி? உங்களுடைய எத்தனையோ அடியார்களுக்குக் கடவுளை அடையும் வழியைக் கூறியிருக்கிறீர்கள். என்னை மட்டும் ஏன் புறக்கணிக்கிறீர்கள்? என்னிடம் என்ன தகுதிக் குறைவு? நாம் பிரம்மசரியத்தைப் பின்பற்றுகிறேன். சாத்துவீகமான (சத்துவ குணமுடைய) உணவையே உண்கிறேன். உலக நடவடிக்கைகளில் பங்குகொள்வ தில்லை." என்று வாதம் செய்தான்.

அதற்கு ராமானுஜர், "அதெல்லாம் நீ செய்திருப்பாய்தான். இதனால் உனது தகுதி வளர்ந்துவிடாது. அன்பு ஒன்றுதான் கடவுளைப் பெற உன்னைத் தகுதியுடையவனாக ஆக்கும். அன்பு காட்டத் தெரியாதவனுக்கு நான் எப்படி வழிகாட்ட முடியும்? ஏனெனில் அன்பே வழியுமாகும். நீ சிறிதளவாவது அன்பு காட்டியிருந்தால் வழி பிறந்திருக்கும். அந்த அன்பு யாரிடம் வேண்டுமானாலும் இருக்கலாம். ஒரு பெண்ணின் மீது அன்பு காட்டியிருந்தாலும் தப்பில்லை. அதுவும் அன்பின் ஒரு வகைதான். அந்த அற்ப அன்பு கடவுளின் மிகவிரிவான அன்பிற்கு இட்டுச்செல்லும்." என்று நம்பிக்கையூட்டினார்.

நீ ஒரு பெண் மீது அன்பு செலுத்தும்போது அவளிடமுள்ள சாதாரணத் தன்மை மறைந்து தெய்வீகம் பிரவேசிக்கிறது. பெண் ணாக இருந்து ஆணை நேசித்தால் அவன் புருஷோத்தமனா

கிறான். இந்த அன்புதான் படிப்படியாக வளர்ந்து கடவுளை நோக்கி நம்மை இட்டுச்செல்லும் பேரன்புப் பாதையாக உருவாகிறது.

கடவுளை வரையறுத்தல் சொற்களால் நிகழ்கிறது. கடவுளைப் பலர் பலவிதமாக வரையறுக்கின்றனர். நீ அவற்றை மனப்பாடம் செய்ய முடியும். ஆனால் தீர்வு கிடைக்காது. அனுபவத்தின் மூலமே நீ அவரை நெருங்க முடியும்.

எல்லா திசைகளிலும் கடவுளின் ஆனந்த நடனத்தைக் காணலாம். எங்கும் அவர்தான் உள்ளார். கடவுளின் உருவம் எத்தகையது என்று கேட்டாய். உலகில் அவரது வடிவத்தைத் தவிர வேறெதுவும் கிடையாது.

மற்றவர்கள் கடவுளை வரையறுத்துக் கூறுவதைப் படித்து நீ அவரை அறிந்துகொண்டு விட்டதாக நினைக்காதே. அவரை அறிவதற்குச் சொற்களைத் துணையாகக் கொள்ளாமல் அன்பைத் துணையாகக் கொள். கடவுளை வரையறுத்துக் கூறுமாறு பிறரிடம் கேட்டுக் கொண்டிராமல் இறை அன்பை வளர்த்துக் கொள்வது எப்படி என்று விசாரிக்கத் தொடங்கு. கடவுளைப் பற்றிய வர்ணனை படித்தால் நீ பண்டிதன் ஆவாயே தவிர அவரைச் சென்றடைய மாட்டாய்.

அன்புதான் பிரார்த்தனை. அன்புதான் கடவுள். இதுவே உண்மை. அன்பு புனிதமடைந்து பிரார்த்தனையாகிறது. பிரார்த்தனை புனிதமடைந்து கடவுளாகிறது. இந்த அன்பின் ஏணிப்படியில் மிகவும் தாழ்ந்த படியில் காமன். மேலே மிக உயர்ந்த கடைசிப் படியில் ராமன்! புழுதிபடிந்த அன்பு காமம். புழுதி நீங்கி தூய்மை பெற்ற அன்பு கடவுள்.

அன்பை எல்லோரும் நடுவில் நிறுத்திவிடுகின்றனர். அது கடவுள்வரை போனால்தான் திருப்திகரமாக முடியும். கணவன்-மனைவி, பெற்றோர்-குழந்தைகள், நண்பர்கள் என்ற வகையிலான அன்பு காலப்போக்கில் நீர்த்துப் போகிறது; வற்றிப்போகிறது; ஏமாற்றம் தருகிறது. சொந்தமென்று நினைத்த முகங்கள் அந்நியப்பட்டு சோகம் விளைகிறது.

நீ மற்றவர்களிடம் அன்பு செலுத்தும்போது அவர்களை மிகைப்படுத்தி உன்னதமானவர்கள் என நினைக்கிறாய். பழகியபின் அவர்களது சாயம் வெளுத்துப்போகிறது. நட்பு கசக்கிறது. ஒருவர் மீது உனக்கு அன்பு பிறந்தால் நீ அவரை அழகில் சிறந்தவர், அறிவில் சிறந்தவர், ஆற்றலில் சிறந்தவர் என்றெல்லாம் கற்பனை செய்கிறாய். காலப்போக்கில் அவர் சுமார் ரகம்தான் என்று தெரிந்ததும் வருந்துகிறாய். இவ்வாறு பலமுறை ஏமாறுகிறாய். அழகு, அறிவு முதலிய எல்லாவற்றிலும் கடவுள் ஒருவரே தலைசிறந்தவராக இருக்க முடியும்.

அன்பு என்னும் உரைகல்லில் உரசிப் பார்த்தால் நீ அன்பு காட்டியவர்கள் குறையுடையவர்களாகத் தெரிவார்கள். அவர்களை விட்டுச்சென்று வேறு புதியவர்களிடம் அன்பு காட்டுகிறாய். அங்கும் இதே கதைதான். இப்படியே மனமென்னும் பறவை மாறி-மாறி வெவ்வேறு கிளைகளில் உட்கார்ந்து ஏமாறுகிறது.

ஞானி ஒருவரைப் பற்றி உயர்வாகக் கேள்விப்பட்ட அரசர் ஒருவர் தன் அரண்மனைக்கு அவரை அழைத்தார். அவரோ 'நீதான் என்னைப் பார்க்க விரும்புவதால் நீயே என் இருப்பிடத்திற்கு வா' என்று பதிலனுப்பிவிட்டார். அரசன் அங்கே போனபோது ஞானி வயல் வேலையாக வெளியே சென்றிருந்தார். அவர் மனைவி ஒரு கிழிந்த பாயை விரித்து அமரச் சொன்னாள். அவர் மறுத்து அங்குமிங்குமாக நடந்தபடி இருந்தார்.

மனைவி வயலுக்குச் சென்று ஞானியை அழைத்துவந்தாள். வழியிலேயே அவள் கணவரிடம் தான் எவ்வளவோ சொல்லியும் அரசர் பாயில் உட்கார மறுத்ததைச் சொன்னாள். ஞானி சிரித்தார். "அந்தப் பாய் அவர் உபகாரத் தகுதியற்றது. அவருக்குப் பொருத்தமான ஆசனம் கொடுத்தால் உட்காருவார்," என்றார்.

நீ மனமென்னும் பட்சியைப் பல இடங்களில் உட்காரவைக்க முயன்றாய். ஆனால் அது உட்காரவில்லை. அது உட்காரத் தோதான இடம் கிடைக்கவில்லை. அந்த இடம் கடவுள் மட்டுமேயாவார்.

இந்த உலகம் அன்பை கற்றுக்கொள்வதற்கான கல்விச்சாலையாகும். உலகமெனும் பள்ளியில் நீ கற்றவற்றால் பலன் உண்டோ, இல்லையோ, அன்பைக் கற்றிருந்தால் அது ஒன்றே போதும்.

அன்பின் வடிவங்கள் மூன்று: ஒன்று காமம். இது அன்பின் அடிமட்டத்தில் கீழான படியாக உள்ளது. இதுவே உடலாசை, உடல்களின் சந்திப்பு. இரண்டாவது வகை, அன்பு என்றே கூறப்படுகிறது. இது மனங்களின் சந்திப்பு. எண்ணங்களில் ஒற்றுமை இந்த அன்பின் அடிப்படை. இரண்டு உடல்கள், ஒரே இதயம் போன்ற நிலை. அன்பின் உச்சநிலைக்கு நான் சூட்டும் பெயர் பிரார்த்தனை. இந்நிலையில் ஆத்மாக்களின் சந்திப்பு நிகழ்கிறது.

காமம் என்னும் தளத்தில் சுரண்டல் நிகழ்கிறது. அதில் ஜோடி சேருபவர்கள் ஒருவரை ஒருவர் ஆக்கிரமிக்க முயல்கின்றனர். அன்பு என்னும் தளத்தில் ஒருவரையொருவர் கருவியாகப் பயன்படுத்துகின்றனர். பெற்றோரும் பிள்ளைகளும் கூட எதிர்காலப் பயன் கருதி பரஸ்பரம் காரியத்தை நிறைவேற்றிக் கொள்கின்றனர். ஆத்ம அளவிலான தொடர்பு அல்லது ஆத்மாக்களின் சந்திப்புக்கு நான் பிரார்த்தனை என்று பெயர் கொடுக்கிறேன்.

**ஓ**ர் அரசனுக்கு மூன்று பிள்ளைகள். வயதுப்படி போகாமல் அவர்களில் தலைசிறந்தவனுக்கே முடிசூட்ட அரசர் விரும்பினார். ஒரு துறவியிடம் ஆலோசனை கேட்டார். அதன்படி ஒவ்வொரு மகனுக்கும் ஆயிரம் ரூபாய் கொடுத்து அவரவர்களின் மாளிகையை நிரப்பிடுமாறு அரசர் சொன்னார். பிறகு துறவி வந்து எவனது மாளிகை நிரம்பியுள்ளது என்கிறாரோ அவனுக்கு முடிசூட்டப்படும் என்று அறிவித்தார்.

மூத்த மகன் ஊரில் குப்பைக் கிடங்கிற்குச் சென்று அங்கு கொட்டிக் கிடந்த குப்பைகளை மாட்டுவண்டிகளில் ஏற்றி, தன் மாளிகையில் நிரப்பினான். குப்பைக்கு விலை கிடையாது. வண்டிக் கூலிக்கு மட்டும் கொடுத்த பணத்தைச் செலவழித்தான். இதனால் மாளிகை மட்டுமல்ல, தெருவே நாற்றமடித்தது.

இதைக் கவனித்த இரண்டாம் மகன் வீட்டிலும் வெளியிலும் எங்கும் நறுமணம் பரப்பும் பொருளைக் கொண்டு மாளிகையை நிரப்ப முடிவெடுத்தான். ஆயிரம் ரூபாய்க்கும் பூக்கள் வாங்கி மாளிகையில் ஆங்காங்கே குவித்தான்.

மூன்றாம் மகன் ஏராளமான அகல் விளக்குகள் வாங்கி, நெய்யூற்றி, மாளிகையிலும் வெளியிலும் ஒளிபரவச் செய்தான். அரசர் துறவியை அழைத்தார். மாளிகைகளைப் பார்வையிட்டுத் தீர்ப்புச் சொல்லச் சொன்னார்.

துறவியார் முதல் மாளிகையை நெருங்க முடியவில்லை. நாற்றத்தைப் பொறுத்துக் கொண்டு அவர் சொன்னார்: "உங்கள் மூத்தமகன் மாளிகையை நிரப்பிவிட்டார். அவர் நிரப்பிய பொருளை வைத்துப் பார்த்தால் இந்த மகன் ஆட்சிசெய்ய முற்றிலும் தகுதியற்றவன். அவனது ஆற்றல் அவன் நிரப்பிய கழிவுப்பொருட்களுக்குத்தான் சமம். அவன் கணக்குப் பார்த்து, தர்க்கம் பார்த்து மாளிகையை நிரப்பினானே ஒழிய அறிவை உபயோகிக்கவில்லை. இவன் நிரப்பிய விதத்தைப் பார்க்கையில் இவனுக்கு அறிவே இல்லை என்று நினைக்கிறேன்."

இரண்டாம் மகனின் மாளிகையைப் பார்வையிட்டுத் துறவி சொன்னார்: "இவன் மூத்தவனைவிடப் பரவாயில்லை. ஆனால் பூக்களெல்லாம் வாடி எங்கும் குப்பையாகிவிட்டது. அழுகிய பூக்களிலிருந்து மெல்லிய நாற்றமும் கிளம்புகிறது. இவனுக்கு அறிவு கூடுதலாக உள்ளது. ஆனால் தொலைநோக்கு இல்லை. பூக்கள் வாடி அழுகும் என்பதை இவன் முன்கூட்டியே யோசிக்கவில்லை. அரசனுக்குத் தொலைநோக்கு தேவை. இல்லாவிடில் நாட்டுக்கு ஆபத்து உண்டாகும்."

அரசருக்குக் கவலை ஏற்பட்டது. துறவி கடைசி மகனையும் பொருத்தமில்லை என்றால் என்ன செய்வதெனத் திகைத்தான். துறவி சொன்னார்: இவன்தான் மாளிகையை நிரப்பியிருக்கிறான். விளக்குகள் ஏற்றி எங்கும் ஒளியைப் பரப்பியுள்ளான். இவன் ஏற்றிய விளக்குகளால் வெளியேயும் பிரகாசம் பரவியுள்ளது. நெய் காரணமாக எழும் புகை புனித உணர்வு தருகிறது. சமூகத்தில்

எங்கும் ஒளியைப் பரப்ப இவன் முயற்சி எடுப்பான். எனவே இவனே உங்களுக்குப் பிறகு ஆட்சி செய்யத் தகுதியுள்ளவன்."

காமத்தில் உடல்கள் சேருகின்றன. அந்த உறவு விரைவில் குப்பைபோல் மதிப்பற்றதாகி விடுகிறது. காமத்தில் முதலில் இன்பம் தோன்றினாலும் விரைவில் கசப்பை உணர்கிறோம். குற்றம் செய்ததுபோல் உணர்கிறோம். உடல்கள் அழுகும் தன்மை கொண்டவை என்பதால் அவற்றின் உறவும் காலப்போக்கில் அருவருப்பூட்டுகிறது.

காமத்தைவிட அன்பு (காதல்) உயர்ந்தது. அது பூப்போன்றது. ஆனால் மனப்பூக்கள் எவ்வளவு காலம் வாழும்? மனமே அற்பாயுள் கொண்டது. அது நிலையாமைக்கு உட்பட்டது. இன்றைய மலர் நாளை வாடிவிடுகிறது.

மேற்கு நாடுகளில் காதலுக்கு முதலிடம் தருகின்றனர். பிறகு நிகழும் திருமணம் கால ஓட்டத்தில் வாடிவிடுகிறது. விவாகரத்தில் முடிகிறது. கிழக்கு நாடுகளில் திருமணம் முதலிடம் பெறுகிறது. ஆகவே திருமண வாழ்க்கை நீடிக்கிறது. திருமணம் முடிவு செய்யும்போது பணவசதி, குடும்பப் பின்னணி, உடற்குறை யின்மை, படிப்பு, வேலை அல்லது தொழில் ஆகியவை ஆராயப் படுகின்றன. எங்கேயோ உள்ள நட்சத்திரங்களின் பொருத்தம் கூடப் பார்க்கப்படுகிறது. காதலிப்பது ஆபத்தானது என்று இந்நாடுகளிலுள்ள மக்கள் நினைக்கிறார்கள்.

காதல் (அன்பு) மனத்துடன் சம்பந்தமுள்ளது. மனம் உறுதியற்றது. உடலாவது சுமார் 70 ஆண்டுகள் நீடிக்கிறது. மனமோ ஒரு மணி நேரத்தில் மாறிவிடும். காதலித்த நபரையோ கொலை செய்யுமளவு மனம் மாறிப்போகிறது. அல்லது காதல் கசந்து, விவாகரத்தில் முடிந்து, குடும்பம் சிதறிவிடுகிறது.

கிழக்கு நாடுகளில் மனைவியைத் தவிர வேறு பெண்ணுடன் தொடர்பு கொள்வதை பாவச்செயல். என்போம். மேற்கு நாடுகளில் மக்கள் காதல் இல்லாமல் மனைவியுடன் படுப்பதை பாபம் என்பார்கள். திருமணம் உடலை ஆதாரமாகக் கொண்டுள்ளது. காதல் மனத்தை அடிப்படையாக்க் கொண்டிருக்

கிறது. எனவே விவாக வாழ்க்கை நீடிக்கிறது. காதல் வாழ்க்கை விரைவில் கலைகிறது.

அழகாகத் தெரிபவை விரைவில் நசித்துவிடுகின்றன. கற்கள் அப்படியே கிடக்கின்றன. பூக்களோ காலையில் மலர்ந்து மாலையில் வாடி உதிர்கின்றன. வழக்கமான திருமணம் கற்பாறை போன்றது. காதல் மணம் பூவைப் போன்றது. இறக்கும்வரை ஒன்றாக வாழும் தம்பதிகள் (இணையர்) இந்தியாவில் பெரும் பான்மையோராக உள்ளனர். மேல்நாடுகளில் காதல் மணம் புரிந்து மூன்று ஆண்டுகளிலேயே விவாகரத்து செய்துகொள்பவர்கள் ஏராளமாக உள்ளனர். அங்கே ஒவ்வோர் ஆணுக்கும் ஒன்றிற்கு மேற்பட்ட மனைவியும், ஒவ்வொரு பெண்ணிற்கும் ஒன்றிற்கு மேற்பட்ட கணவனும் ஏற்பட்டிருப்பார்கள். எனவே குழந்தைகள் சம்பந்தமான குழப்பங்கள் அங்குண்டு.

ஒரு 'ஜோக்' புகழ்பெற்றது. ஒரு பெண் தன் நிகழ்காலக் கணவனிடம் "டார்லிங், அதோ பாருங்கள், என் குழந்தைகளும், உங்கள் குழந்தைகளும் நம்முடைய குழந்தைகளுடன் ஒற்றுமையாக விளையாடுகிறார்கள்!"

உடல்களின் சந்திப்பு, மனங்களின் சங்கமம் இவற்றைவிட உயர்ந்தது ஆத்மாக்களின் தொடர்பு. இங்கே பிரார்த்தனை பிறக்கிறது. மீராபாய், ராதை, சைதன்யர் ஆகியோர் ஆத்ம அன்புத் தளத்தில் இயங்கியவராவர். இரண்டு விளக்கொளிகள் சந்திப்பது போன்ற சாந்தமான, சகஜமான அன்பு வகை இது. ஒருவருடன் ஆத்ம அளவில் அன்பு பிறந்தால் அது வளர்ந்து படைப்பு முழுதையும் நேசிக்கத் தூண்டும். பிறகு அந்தப் படைப்புக்கு காரணமான பரமாத்மாவை நோக்கி நமது அன்பு பெருக்கெடுக்கும்.

பக்தன் ஒருவிதமான போதையில் உள்ளான். கடவுள்தான் அந்தப் போதை. பண்டிதர்கள் கடவுளைக் கொள்கை ரீதியாகப் பார்க்கிறார்கள். அதற்கு சித்தாந்தம் என்று பெயர் கொடுத்துள் ளார்கள். கடவுள் உண்டா-இல்லையா என்னும் ஆத்திக-நாத்திக விவாதத்தில் இறங்காதே. இது வேலை வெட்டியற்றவர்களின்

பொழுதுபோக்கு. அவர்கள் கடவுள் பற்றி எப்படி வேண்டு மானாலும் அனுமானித்துக் கொள்ளட்டும்.

நீ உன் வாழ்க்கையை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள விரும்பினால் அன்பு மார்க்கத்தில் இறங்கு. அன்புவழி உனக்கு கடினமாகத் தோன்றினால் தியானம் செய்வதை மேற்கொள். கடவுளை நோக்கிச் செல்ல தியானமும் இன்னொரு வழியாக உள்ளது. அன்பு செய்ய முடியாதவர்கள் தியானம் செய்யலாம். அன்பு வழியில் செல்ல முடிந்தவர்கள் பிற உபாயங்கள் குறித்து அக்கறை கொள்ள வேண்டியதில்லை.

## நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! மரணம் என்றால் மிகவும் பயமாக உள்ளது. இதிலிருந்து தப்பிக்க ஏதேனும் வழி உண்டா?**

மரணம் என்பது நீ பிறந்த அன்றே நிகழ்ந்துவிட்டது! இனி தப்பிக்க உபாயம் கிடையாது. பிறந்த நாளிலிருந்து நீ இறக்கவும் தொடங்கிவிட்டாய். நீ பிறந்தது ஒரு காலடி எடுத்துவைத்தது போன்றது என்றால் மரணம் என்னும் இரண்டாவது காலடி தவிர்க்க முடியாதது. வில்லிலிருந்து அம்பு கிளம்பிவிட்டது. அதைத் திரும்பப் பெறுவது நடவாத செயல். பிறந்துவிட்டால் இறப்பிலிருந்து தப்பிக்க முடியாது.

வாழ்க்கையில் எதுவும் நிச்சயமில்லாத நிலையில் மரணம் மட்டும் நிச்சயம் என்பதை நீ புரிந்துகொண்டால் அன்றே உன் பயம் நீங்கிவிடும். எதைத் தள்ளிப்போட முடியாதோ, எதைத் தவிர்க்க முடியாதோ அதற்கு அஞ்சுவதால் என்ன லாபம்?

வேலை ஏற்கெனவே முடிந்துபோனது. நீ பிறந்த அன்றே இறந்தும் போனாய். மூச்சுவிட்டபடி நீ பிறந்தாய். ஒருநாள் அது நின்றுவிடும். நீ நிரந்தரமாக வாழ முடியாது. ஆகவே பயத்தைப் புரிந்துகொள்ள முயலு. அதிலிருந்து தப்பிவிடலாம் என்று எதிர்பார்க்காதே.

நாதிர் ஷா* ஒரு கொடுங்கோல் அரசன். ஏராளமானவர்களைக் கொன்று குவித்தவன். மற்றவர்களின் சாவிற்கு நெகிழாதவன். ஒரு விலைமாது இரவு கூடாரத்தில் நடனமாடியபின் வீடு திரும்ப அஞ்சுகிறாள். இருட்டிற்காக பயப்படுகிறாள். நாதிர்ஷா வீரர்களை அழைத்து இவள் போகும் வழியிலுள்ள குடிசைகளை எரித்து வெளிச்சம் உண்டாக்குங்கள் என்று கட்டளையிடுகிறான். அவர்கள் அவ்வாறே செய்ய குடிசை வாசிகள் பலர் மாண்டுபோகிறார்கள். அத்தகைய குரூரமான நாதிர்ஷா தனது சாவு குறித்து நடுங்கியபடியே இருந்து வந்தான்.

சாவை நினைத்து அவன் இரவில் சரியாகத் தூங்கியதில்லை. இந்தியா மீது படையெடுத்துத் திரும்பிய வேளையில், ஓர் இரவு கூடாரத்தில் தூங்கும்போது ஒரு திருடன் நுழைந்துவிட்டான். அவனது நோக்கம் திருடுவது மட்டுமே. ஆனால் மோப்பம் பிடித்து நாய்கள் குரைக்க, குதிரைகள் கனைக்க, வீரர்கள் ஓடிவர எங்கும் குழப்பம் மிகுந்தது. நாதிர் ஷா தன்னைக் கொல்ல எவனோ வந்துள்ளதாக நினைத்து வெளியே ஓடினான். கூடாரத்தைக் கட்டியிருந்த முரட்டுக் கயிற்றில் சிக்கிக் கீழே விழுந்துவிட்டான். தன்னைக் கொல்ல வந்தவன் தன்னைக் கீழே தள்ளிவிட்டான் என்ற பயம் அவனைக் கவ்வியது. அவனது இதயம் அதிர்ச்சியால் நின்றுபோய் நாதிர் ஷா இறந்துவிட்டான்!

இவனைப் போன்ற சிலர் கொலைகள் பல செய்து இவ்வாறாக மரணத்திற்கு எஜமானனாகிவிட்டோம்; எப்போது எவரை வேண்டுமானாலும் கொல்ல முடியும் என்று ஆணவமாக நினைக்கலாம். இது ஒரு பிரமையே. இது மனநோயும் கூட. நமது செல்வம், பதவி, ஆற்றல் ஆகிய எதனாலும் நம் சாவைத் தடுக்க இயலாது.

நீ சாவைத் தடுக்க ஹோமம் முதலிய உபாயங்கள் செய்தால் உன் பயம்தான் அதிகரிக்கும். சாவு வருவதை ஏற்றுக்கொள். அதனிடம் விரோதம் பாராட்டாமல் இருந்தால், உன் பயம் குறைந்து நீங்கிவிடும். சாவிலிருந்து விடுதலை இல்லை. ஆனால்

* நாதிர் ஷா (1688-1747) ஈரான் நாட்டு மன்னன். அண்டை நாடுகளுடன் இடைவிடாமல் போரிட்டு ஈவு இரக்கமின்றி மக்களைக் கொன்றவன்.

அது குறித்த பயத்திலிருந்து விடுதலை பெறலாம். சாவு நிகழத்தான் போகிறது. அது நீ உண்டாக்கியதல்ல. பயத்திலிருந்து தப்பலாம். அது நீ உண்டாக்கியது.

**சா**க்ரட்டீஸ் இறக்கும் சமயம் அவருக்கு பயமாக இல்லையா என்று ஒருவர் கேட்டார். சாக்ரட்டீஸ் சொன்னார்: "எதற்காக பயப்பட வேண்டும்? சாவிற்குப் பின் என்ன ஆகும்? ஆத்திகர் ஆத்மா சாகாது என்கிறார். அது நல்ல விஷயம் என்பதால் சாவு பயம் தேவையில்லை. நாத்திகரோ ஆத்மா கிடையாதென்றும், சாவுடன் உடலின் கதை முடிந்தது என்றும் கூறுகிறார். இந்நிலையிலும் சாவுக்குப் பின் என்ன நடக்குமோ என்று பயப்பட அவசியமில்லை. எது நடந்தாலும் ஒன்றுதான். ஆகவே எனக்குக் கவலை இல்லை. பயமும் இல்லை."

மேலும் சிந்தித்தால் சாவு ஏற்படுவது உனக்கில்லை, உன் உடலுக்கு. உன் உடல் பிறந்தது. ஆகவே அது அழியும். நீ உன்னை உடலென்று நினைப்பதால்தான் இந்தச் சிக்கல் உண்டாகிறது.

உடல் தினமும் இறக்கிறது. தலைமுடி, தாடி, நகம், மலம்-சிறுநீர் முதலியவை உன் உடலின் செத்துப்போன அம்சங்கள். இவற்றை நீ தொடர்ந்து நீக்கிவருகிறாய். அப்போது நீ வலியேதும் உணர்வதில்லை. இவ்வாறு உடலின் பாகங்கள் குறைந்து கொண்டே வருகின்றன. ஒவ்வோர் ஏழாண்டு காலத்திலும் இவ்வாறு நம் பழைய உடலுக்குப் பதில் படிப்படியாகப் புதிய உடல் சூழ்வதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். நாம் 70 வயதுவரை வாழ்ந்துவிட்டால் அதற்குள் நம் உடல் 10 முறை மாறியிருக்குமாம். முதல் உடலின் அம்சம் எதுவுமே மிஞ்சியிருக்காதாம். நாம் அவ்வப்போது வீடு மாறுவதுபோல், நாம் கடைசி உடலான வீட்டையும் ஒருநாள் காலி செய்ய நேரிடும் என்பதை நினைவில் வைத்தால் பிரிவுத் துன்பம் எழாது.

உன் உடல் மண்விளக்கு போன்றது. அது நீ அன்று. அதில் எண்ணெய் ஊற்றப்பட்டுள்ளது. அது உன் மனம். அதுவும் நீ அன்று. திரியில் தெரியும் பிரகாசமே நீ. விளக்கும் எண்ணெயும் இல்லாமல் ஒளி மறைந்துவிடும் என்பது உண்மைதான். ஆனாலும்

விளக்கும் எண்ணெயும் மட்டுமே பிரகாசம் ஆகிவிடாது. அவை பிரகாசம் வெளிப்பட உதவுகின்றன. அதுபோலவே 'நீ' என்பவன் வெளிப்பட மட்டுமே உடலும் மனமும் தேவைப்படுகின்றன. அவை உன் 'இருத்தலுக்கு' (existence) அவசியமில்லை. ஏனெனில் நீ ஆத்மா. நீ உடலையும் மனத்தையும் கடந்தவன். இதை உணர்ந்தால் சாவு உனக்கு நேர்வதில்லை என்பது தெளிவுபடும்.

உடல் என்ற தளத்தில் சாவு நிச்சயம். ஆத்மா என்னும் தளத்தில் சாவு என்றும் ஏற்பட்டதில்லை, ஏற்படவும் முடியாது. பெயர், பதவி, புகழ், செல்வம் இவற்றின் அடிப்படையில் நீ என்பவன் இருப்பதாக நினைத்தால் நீ செத்துவிட்டவன்தான். நீ என்பவன் இவற்றைக் கடந்து இருக்கிறாய். அந்த உன்னைச் சாவு தொட முடியாது. தன்னை அறிந்தவனிடம் சாவு தோற்கும். இதுதான் உனது சாவு பயம் நீங்க நான் உனக்குக் கட்டிவிடும் தாயத்து!

ஒரு பேச்சுக்காக, நான் ஓர் உபாயம் சொல்லி நீ சாவிலிருந்து தப்பித்தால் பிறகு என்ன செய்யப்போகிறாய்? இப்பொழுதேகூட நீ உயிருடன் இருந்து என்ன சாதிக்கிறாய்? இப்பொழுது செய்வதையேதான் நீ சாகாவிட்டாலும் தொடரப் போகிறாய் செய்ததையே செய்து இன்னுமா திருப்தி அடையவில்லை?

அலெக்சாந்தர் நாடுகளை வெல்லப் பயணித்தபோது வழியில் ஓர் அருவியை அடைந்தார். அதன் நீரைப் பருகினால் மரணம் ஏற்படாது என்று கேள்விப்பட்டிருந்தார். அவர் அந்த நீரைப் பருக முயன்றபோது ஒரு காக்கை பறந்துவந்து தடுத்தது. அடுத்து அது பேசவும் தொடங்கியது!

"அலெக்ஸாந்தர்! அந்தத் தண்ணீரைக் குடிக்காதே. குடித்தால் பின்னால் வருந்துவாய். நான் காக்கைகளின் அரசன். நான் இதன் தண்ணீரைக் குடித்ததிலிருந்து நரகவேதனைப்படு கிறேன். நான் ஆயிரம் வருஷமாக உயிருடன் இருந்துவருகிறேன். நான் இறக்கவே முடியாது!

“நான் மலையிலிருந்து குதித்தேன். பாறாங்கல்லில் தலையை மோதிப் பார்த்தேன். விஷமும் குடித்தேன். ஆனாலும் சாகவில்லை. நான் வாழ்வதிலும் அர்த்தம் இல்லை. ஒரேமாதிரி வாழ்க்கையை இன்னும் எத்தனை காலம்தான் வாழ்வேன்? ஆகவே நன்றாக யோசித்துப்பார். பிறகு நீ இறக்கவே முடியாது. முதலில் இது சந்தோஷமாக இருக்கும். பிறகு நாளாக-நாளாகச் சலிப்பு ஏற்பட்டுவிடும். பிறகு நீ விரும்பினாலும் சாகமுடியாது. அது மட்டுமல்ல, உனக்கு வயதாவதைத் தடுக்க முடியாது. ஆயிரம் வயது ஆகும்போது நீ எப்படி இருப்பாய் என்பதைக் கற்பனை செய்துபார்,” என்று எச்சரித்தது.

அலெக்ஸாந்தர் சில நிமிடம் யோசித்துவிட்டு அருவிநீரைக் குடிக்காமலே திரும்பிச் சென்றுவிட்டார்.

இந்த வாழ்க்கையின் சுவையனைத்தும், ரசமனைத்தும், சுவாரசியமனைத்தும் சாவில்தான், ஒருநாள் சாவதில்தான் அடங்கியுள்ளது. எனவே சாவை அது வருகிறபோது வாட்டும் என்று திறந்த மனதுடன் இரு.

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்:

க்வ பூதாநி க்வ தேஹோ வா க்வ இந்த்ரியாணி க்வ வா மன:|
க்வ சூன்யம் க்வச னநராஷ்யம் மதஸ்வரூபே நிரஞ்ஜனே ||
285

க்வ ஸாஸ்த்ரம் க்வ ஆத்மவிக்ஞானம் க்வ வா நிர்விஷயம்
மன: |
க்வ த்ருப்தி: க்வ வித்ருஷ்ணத்வம் கத த்வந்த்வஸ்ய மே
சுஸதா || 286

க்வ வித்யா க்வ ச வா அவித்யா க்வ அஹம் க்வேதம் மம
க்வ வா |
க்வ பந்த: க்வச வா மோட்ச: ஸ்வரூபஸ்ய க் வ ரூபிதா || 287

க்வ ப்ராரப்தானி கர்மாணி ஜீவனமுக்திர் அபி க்வ வா |
க்வ தத் விதேஹ கைவல்யம் நிர்விசேஷஸ்ய ஸர்வதா ||
288

க்வ கர்த்தா க்வ ச வா போக்தா நிஷ்க்ரியம் ஸ்புரணம் க்வ
வா |
க்வா பரோட்சம் பலம் வா க்வ நி:ஸ்வபாவஸ்ய மே ஸதா ||
289

க்வ லோக: க்வமுமுட்சுர் வா க்வ யோகீ ஞானவான் க்வ வா |
க்வ பத்த: க்வ ச வா முக்த: ஸ்வஸ்வரூபே அஹம த்வயே ||
290

க்வ ஸ்ருஷ்டி: க்வ ச ஸம்ஹார: க்வ ஸாத்யம் க்வ ச
ஸாதனம் |
க்வ ஸாதக: க்வ ஸித்திர்வா ஸ்வஸ்வ ரூபே அஹமத்வயே ||
291

குருவின் உபதேசம் முடிந்துவிட்டது. சீடன் நன்றி தெரிவிக்கிறான்.

நீதான் எனது இதயத்தை மீட்டி
பாடல் புறப்பட ஊக்குவித்தாய்
ஊமை மனமும் குரல் பெற்றது
ஆயுள் முழுதும் இதை மறவேன்
நான் விழியின் மொழி கற்றதில்லை
உனது சந்திப்பில்லாமல்
வாழ்க்கை வீணாகியிருக்கும்
இதயம் பாறையாய் நீடித்திருக்கும்

சீடனால் தனது நன்றியை முழுமையாகக் கூற முடிவதில்லை. எந்தச் சொற்களைப் பயன்படுத்தினாலும் அவை குரு தந்தவைதாம். அதேசமயம் எதுவும் சொல்லாமல் ஊமையாக இருக்கவும் முடியவில்லை.

ஒரு வழி உண்டு. குருவின் உபதேசம் சீடனின் உயிரில் கலந்து எதிரொலிக்க வேண்டும். சீடன் என்னும் வீணையில் குருவின் வாக்கு மீட்டப்பட வேண்டும். இதுவே நன்றியை வெளிப்படுத்தும் முறையாகும்.

குருவிற்கு நாம் பட்டுள்ள கடனை என்றைக்கும் நாம் முழுமையாக அடைக்க முடியாது. புத்தரிடம் சீடர்கள், "நீங்கள் எங்களுக்கு அறவுரைகளை அள்ளி அள்ளிக் கொடுத்தீர்கள். நாங்கள் எப்படி எங்கள் நன்றியை வெளிப்படுத்துவது?" என்று கேட்டார்கள். அதற்கு புத்தர், "நான் வழி சொல்கிறேன். நான்

உங்களுக்குக் கொடுத்ததை மற்றவர்களுக்குக் கொடுங்கள். அவர்களுடன் பகிர்ந்துகொள்ளுங்கள். குருவிடமிருந்து பெற்ற நறுமணம் எங்கும் பரவச் செய்யுங்கள்.'' என்றார்.

அஷ்டாவக்ரர் சொன்னவை ஜனகரின் உள்ளத்தில் ஒளிபரவச் செய்தது. ஆகவே ஜனகர் தம் உயிர்போல் கருதி நன்றி தெரிவிக்கிறார்.

சீடன் குருவின் வாக்கை தனது வாழ்க்கையின் அனுபவமாக மாற்றிக்கொள்வது திருப்பிச்சொல்வது ஆகாது (repetition). அதே சொற்கள்தாம். ஆனால் அவை மீண்டும் உயிர்பெறுகின்றன.

ஜென் சம்பிரதாயத் துறவி ஒருவர் தன்னிடம் உபதேசம் பெற வந்த சீடனிடம் ஒரு கேள்விக்குப் பதில் கண்டுபிடித்து வருமாறு சொன்னார். அந்தக் கேள்வி பற்றியே ஆழ்ந்து சிந்திப்பதன் மூலம் தியானப் பயிற்சி ஏற்படும். அந்தக் கேள்வி: ஒரு கையால் தட்டுவது எப்படி?

இது நடைமுறையில் சாத்தியமில்லை. நாம் அறிந்துள்ள ஒலிகள் அனைத்துமே இரண்டு பொருட்களின் உரசலால்தான் விளைபவை. இந்த உரசல் வன்முறையின் அடையாளம். உரசலால் ஏற்படும் ஒலி நிரந்தரமாக இருக்காது. பொருட்கள் விலகியதும் ஒலியும் மறைந்துவிடும்.

இக்கேள்வியின் பொருள்: அந்த ஒரு கை ஒலி படைப்பின் தொடக்கக் காலத்திலிருந்து நிலவி வருகிறது. அந்த ஒலி என்றும் நீடிக்கும். இந்திய ஞானிகள் அதற்கு அநாஹத நாதம் என்று பெயர் வைத்திருக்கின்றனர். ஆஹதம் என்றால் உரசல், மோதல் (clash). அதற்கு எதிர்ச் சொல்லான அ நாஹதம் உரசலற்றதை (உரசலால் ஏற்படாத) ஒலியைக் குறிக்கிறது.

சீடன் கேள்விக்கு விடை தேடினான். தியானத்தில் ஆழ்ந்தான். அவ்வப்போது மனத்தில் தோன்றிய விடைகளை குருவிடம் சொன்னான். அவர் ஏற்கவில்லை. இப்படியே பல மாதங்களாகிவிட்டன. ஆகவே அவன் தன்னைவிட அனுபவம் வாய்ந்த மூத்த சீடனிடம் தனது பிரச்சினையைத் தெரிவித்தான்.

மூத்த சீடன் சொன்னான்: "இந்தக் கேள்விக்கு விடை காண எனக்கும் நீண்ட காலமாயிற்று. நான் கண்டுபிடித்த விடைகளையும் நம் குரு ஏற்கவில்லை. பிறகுதான் ஒருநாள் இந்தக் கேள்விக்கு விடை ஏதும் இருக்க முடியாது என்பது தெளிவாயிற்று. நானே ஒரு கை தட்டோசையாக மாறிச் செல்ல வேண்டும் என்பது புரிந்தது. இதனால் நான் அமைதியடைந்து, சூன்யமாகி, எண்ணங்களே இல்லாதவனாகினேன். எனக்குள்ளே எந்த ஒலியுமில்லை, எந்த அலையுமில்லை.

"பிறகு நான் குருவிடம் சென்று திருவடிகளில்ல பணிந்தேன். அப்போது அவர், 'எல்லாம் சரியாகிவிட்டது. நீ பதில் கொண்டுவந்திருக்கிறாய். உன் ஆன்மிகப் பயிற்சி பூர்த்தியாகி விட்டது.' என்றார். நான் வெளிப்படையான பதில் கொண்டுவரா விடிலும் அவர் எனக்குச் சரியான பதில் கிடைத்துவிட்டதாகக் கருதினார்."

இளைய சீடன் இது இவ்வளவு சுலபம் என்று தெரியாமல் போய்விட்டதே என்று நினைத்தான். மறுநாள் அவனும் குருவிடம் சென்று அமைதியாக அவருடைய திருவடிகளை வணங்கினான். குரு ஊகித்துவிட்டார். "நீ பெற்றது கடன் வாங்கிய ஆலோசனை. கடன் வாங்கிய ஞானம் செல்லுபடியாகாது," என்றார்.

அதற்கு அந்தச் சீடன் மூத்த சீடனைக் குறிப்பிட்டு, "அவன் செய்ததைப் போலத்தானே நானும் உங்கள் திருவடிகளை வணங்கினேன். ஒரு வார்த்தைகூட பேசாமல் அமைதியாக நிற்கிறேன்," என்று வாதம் செய்தான்.

"ஆனாலும் உன் செய்கைகள் அவனிடமிருந்து கடன் வாங்கியவை. அவன் உண்மையாகவே சூன்யமானபின் என்னிடம் திரும்பிவந்தான். உனது சூன்யம் வெறும் பாசாங்கு. நீ வேண்டுமென்றே மௌனமாக வந்துநின்றாய். ஆனால் உனக் குள்ளே பேசாத சொற்கள் வலை வலையாகப் பின்னிக்கிடக் கின்றன. எண்ண அலைகள் கொந்தளிப்புடன் உள்ளன. நீ என்னை வணங்கியபோது குரு என் மவுன பதிலை ஏற்காமலா இருக்கப்போகிறார் என்று நீ எண்ணினாய்" குரு விளக்கினார்.

சில மாதங்கள் கழித்து அந்தச் சீடன் மீண்டும் குருவிடம் வந்தான். இப்போது அவன் சூன்யமாகியிருந்தான். வெளியில் வித்தியாசம் தெரியவில்லை. குருவின் திருவடிகளில் வணங்கினான். குரு சொன்னார்: "புரிந்துகொண்டேன். உனக்குப் பதில் கிடைத்துவிட்டது," என்று பாராட்டினார். பக்கத்திலிருந்து வேறு ஒரு சீடன், "இவன் போன முறை வந்தபோது இருந்தது போல்தானே இப்போதும் தெரிகிறான்," என்று ஆட்சேபித்தான். "அப்படியில்லை, உள்ளே முழுமையாக மாறிவிட்டான்," என்று தெளிவுபடுத்தினார்.

அஷ்டாவக்ரர் கூறியது ஜனகரிடம் மீண்டும் உயிர்பெற்றது. ஜனகர் அதில் தனது ஆத்மாவை பிரவேசிக்கச் செய்தார்.

'எனது நிரஞ்சன சொரூபத்தில் பஞ்சபூதங்கள், உடல், புலன்கள், மனம், சூன்யம், நிராசை (ஏமாற்றம்), ஆகாயம் இன்மை ஆகியவற்றிற்கு வாய்ப்பில்லை.' **(சுலோகம் 285)**

**நி**ரஞ்சன் என்றால் (அதன்மீது) எந்தக் கறையும் படாதது என்று அர்த்தம். அதன் மீது எதையும் தடவினால் நிற்காது. உதாரணமாக, தாமரை இலையை நிரஞ்சன் எனலாம். அது தண்ணீரில் கிடக்கிறது. அதன் மீது நீர்த்துளிகளும் படுகின்றன. ஆனால் அவை இலையில் ஒட்டுவதில்லை.

ஜனகர் சொல்கிறார்: 'நான் உடலுடன் நெருக்கமாக இருந்தாலும் நான் ஒருபோதும் உடலில்லை. உடலைவிட மனத்திடம் நான் நெருக்கமாக இருந்தும் நான் மனமில்லை. நான் கர்த்தாவாகவும் எதையும் செய்யவில்லை; போக்தாவாகவும் எதையும் அனுபவிக்கவில்லை. கண்ணாடியில் உருவம் தெரிந்தாலும் அது கண்ணாடியில் ஒட்டுவதில்லை. அதுபோலவே நான் வாழ்கிறேன். கண்ணாடி சாட்சிபோல் அதில் தெரியும் உருவத்தைப் பார்க்கிறது. கடந்தகால அவமானங்களும் சன்மானங்களும் என் மனத்தில் ஒட்டுவதில்லை.

'நான் வாழ்க்கையில் எவ்வளவோ செய்தேன். ஆனால் எதுவும் செய்யாததுபோல் இருக்கிறேன். எத்தனையோ இன்பங்கள்-துன்பங்கள் என் வாழ்க்கையில் குறுக்கிட்டன.

அவற்றால் நான் தீண்டடப்படவில்லை. செல்வம், சொத்து, குழந்தைப் பருவம், யௌவனம், முதுமை ஆகியவை என் உடலைப் பாதித்தனவே தவிர என்னை ஒன்றும் செய்யவில்லை. இதற்கு முன் பறவையாக, மிருகமாக, மனிதனாகப் பல பிறவிகள் எடுத்திருக்கலாம். அவையும் என்னைப் பாதிக்கவில்லை.

"நிலம், நீர், நெருப்பு முதலிய பஞ்ச பூதங்களின் நடவடிக் கைகள் எனக்கு அப்பாற்பட்டவை. தண்ணீரில் எண்ணெய்த் துளி ஒட்டாமல் மிதப்பதுபோல் என்னைச் சுற்றிலுமுள்ள ஐம்பூதங்கள் என்னை எதுவும் செய்வதில்லை.'

உடலாலும் புலன்களாலும் தான் பாதிப்படையவில்லை என்கிறார் ஜனகர். நான் கண்ணுக்குப் பின்னால் நிற்கிறேன். ஆனால் நான் கண்ணில்லை. கண் என்பது ஒரு சன்னல் மட்டுமே. நான் காதுமில்லை. அதுவும் ஒரு சன்னல். நான் அருகில் நின்று ஒலியைக் கேட்கிறேன். என் கையால் உன்னைத் தொடுகிறேன். ஆனால் உண்மையில் உன்னைத் தொடுவது கையில்லை. கை தானாகவே தொட முடியுமெனில் பிணத்தின் கை தானாக நம்மைத் தொடுமா? பிணத்தின் கண் தானாகப் பார்க்குமா? இவை சாத்தியமில்லை. ஏனெனில் இவற்றின் பின்னால் நின்றவன் விடைபெற்றுக் கொண்டுவிட்டான். உண்மையான சக்தி நீங்கிவிட்டது. அதன் பெயர்தான் நிரஞ்சன்.

மேலும் ஜனகர், 'நான் மனமில்லை; சமாதியில் உணரும் சூன்யம் இல்லை; எந்த அனுபவமும் நான் இல்லை,' என்கிறார்.

எதுவெல்லாம் உன் அனுபவ வட்டத்துக்குள் வருகிறதோ அதிலிருந்து நீ வெளியே இருக்கிறாய். அது நீயில்லை. இது உள்ளுலக கணிதம். நீ ஒன்றைப் பார்த்தால் அதிலிருந்து நீ தனிப்பட்டு இருக்கிறாய் என்று பொருள். காட்சியாக ஒன்று தெரிந்தால் அது காண்பவனாக இருக்க முடியாது. உனக்குள்ளே சூன்யமாக உணர்கிறாய். மனத்தில் எந்த எண்ண அலையும் இல்லை. எனினும் உணரப்படுவது சூன்யம். உணர்பவன் நீ என்பதால் சூன்யமும் நீயும் ஒன்றல்ல.

'முரண்படுகின்ற இரட்டை நிலைகளைக் கடந்த எனக்கு சாஸ்திரங்களோ, ஆத்மவிக்ஞானமோ, இன்ப நாட்டமற்ற மனமோ,

திருப்தியோ, பேராசையின்மையோ எதுவுமே பொருந்தாது.' **(சுலோகம் 286)**

**நா**ன் எல்லா இரட்டைகளையும் கடந்தவன். எங்கெல்லாம் இரண்டாக, எதிரெதிராகப் பிரிகிறதோ அங்கு நான் இல்லை. வாழ்க்கையின் எந்த அனுபவத்தையும் இரண்டு விதமாகக் காணலாம். அவ்வாறு இரட்டையாகத் தோன்றுமிடமெல்லாம் நீ இல்லை என்பதை; புரிந்துகொள். அங்கு உன் சொரூபம் (சுய ரூபம்) நிற்க முடியாது.

இன்பம்-துன்பம், பகல்-இரவு, வாழ்வு-சாவு, ஆண்-பெண், அமைதி-குழப்பம், இளமை-முதுமை, ஆகுதல்-அழிதல், படைப்பு-நாசம் இவ்வாறு இரட்டையாக உணரப்படும் நிலைகளில் உனது வாஸ்தவமான சொரூபம் (நிரஞ்சன்) இல்லை. ஏனெனில் இந்த இரட்டைகளில் நீ ஒன்றைத் தேர்ந்தெடுக்கிறாய். நீ உன்னை அடிப்படையில் ஆண் அல்லது பெண் என்று சொல்லும்போதே ஒன்றைத் தேர்ந்தெடுத்துவிட்டாய்.

புத்தர் நிர்வாண நிலையை (புத்தநிலையை) அடைந்தபின் ஒருவன் அவரிடம், "நீங்கள் இந்த நிலையில் உங்களை எப்படி உணருகிறீர்கள், ஆணாகவா, பெண்ணாகவா?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான் எதையும் தெரிந்தெடுக்கவில்லை. அவ்வாறு தெரிந்தெடுக்கும் செயலுக்கு நான் அப்பாலானவன் ஆகி விட்டேன். இப்போது நான் ஆணோ, பெண்ணோ இல்லை. நான் நானாக இருக்கிறேன். அவ்வளவுதான்," என்றார்.

நீ இளைஞனா, கிழவனா? இரண்டு விதமான பதில்களுக்கு வாய்ப்புண்டு. 1) உடலால் இளைஞன், உள்ளத்தால் கிழத்தன்மை பெற்றவன், 2) உடலால் கிழவன், உள்ளத்தளவில் குமரன். அதாவது, எல்லா மாறுதல்களும் வெளிப்புறமே நடைபெறு கின்றன. உடல் தொடர்ந்து மாறுதல் அடைகிறது. உள்ளே இருப்பது உருவமற்றது. அது நிரந்தரமானதும்கூட. வெளிப் பார்வையின் அடிப்படையில் உன்னை நீ ஆண் அல்லது பெண் என்கிறாய். உனக்குள்ளே எட்டிப் பார்த்து அங்கே நீ யார் என்று கேட்டுப் பார். ஆண்-பெண் வேறுபாடு உடலுடன் சம்பந்தப் பட்டது. ஆத்ம அளவில் ஆண் ஆத்மா-பெண் ஆத்மா என்ற

பிரிவுகள் கிடையாது. சாட்சி மனப்பான்மை வந்துவிட்டால் போதும் சாட்சியிலும் ஆண்-பெண் பேதம் கிடையாது.

சில சம்பிரதாயங்களில் பெண்களுக்கு மோட்சம் கிடையாது என்றொரு கருத்துண்டு. மோட்ச நிலையில் ஆண்-பெண் என்ற வேறுபாடே இருக்க முடியாது. இந்த வேறுபாட்டை உணர்கின்ற ஆண்களும் பெண்களும் மோட்சமடைய முடியாது.

சாஸ்திரங்கள் எல்லாம் மனத்தில் உள்ளன. புத்தியில் உள்ளன. அவை சொற்களால் ஆனவை என்பதால் புத்தியைச் சேர்ந்தவை. "நீங்கள் யார்?'' என்று ஒருவரைக் கேட்டால் அவன் தன்னை இந்து, முஸ்லிம் என்றெல்லாம் அறிமுகப்படுத்திக் கொள்வார். பிறக்கும் சமயம் குழந்தை எந்த மதத்தையும் சார்ந்ததாக இருக்காது. பெற்றோர்கள் தங்கள் மதநம்பிக்கை களையும் சடங்குகளையும் குழந்தைக்கு போதித்து அதற்கு மூளைச்சலவை செய்கிறார்கள். குழந்தை வளர்ந்தபின் அதுவும் தன்னைக் குறிப்பிட்ட மதத்தவன் என்றே கூறிக் கொள்கிறது. எல்லையற்ற ஆத்ம சொரூபமாகிய குழந்தை மதம் என்ற எல்லைக்குள் சுருங்கிப்போகிறது. ஆத்மாவிற்கு சாஸ்திரங்கள் கிடையாது; சொற்கள் கிடையாது; எண்ணங்கள் கிடையாது.

சொற்கள் உள்ள இடத்தில் இரட்டைகள் உண்டு. இலக்கணத்தில் இதைக் காணலாம். ஒவ்வொரு சொல்லும் எதிர்ச்சொல்லும் பெற்றிருக்கிறது. உதாரணமாக அழகுக்கு எதிர்ச்சொல் குரூபம். நீ இரட்டைகளை விரும்பவில்லை என்று கூறி குரூபம் என்னும் சொல்லைத் தவிர்த்தால், எல்லாமே அழகு என்று நீ சொல்ல வேண்டியிருக்கும். அப்படியாயின் அழகு என்ற சொல் அர்த்தமிழந்து விடுகிறது. அழகு என்ற சொல்லே தேவையில்லாமல் போய்விடுகிறது.

மகாயானம் என்று ஒரு புத்தமதப் பிரிவு இருப்பதால் க்ஷீணயானம் என்னும் சொல்லும் எழுந்தது (Great Vehicle-Smaller Vehicle). அதேபோல் ஒருவரை மகாத்மா என்று சொல்லும்போது மற்ற பலரை க்ஷீண ஆத்மா என்று மறைமுகமாகக் குறிப்பிடுகிறோம். ஒருவரை நல்லவர் எனக் கூறுவதற்கு வேறு சிலரை நாம் கெட்டவர்களாகக் கருதுகிறோம்

என்று தெளிவாகிறது. 'சில சூழ்நிலைகளில் நான் துன்பப்படுகிறேன்' என்று நீ சொன்னால்தான் 'சில வேளைகளில் நான் சந்தோஷமாக இருக்கிறேன்' என்று கூறுவது பொருந்தும். 'நான் எந்த சூழ்நிலையிலும் சுகமாக உள்ளேன்' என்று நீ கூறினால் அது அர்த்தமற்றது. அதைக் கூறவேண்டிய அவசியமும் இல்லை.

ஜனகர் தன்னை இரட்டைகளின் மோதல்களுக்கு அப்பாற்பட்டவன் என்கிறார். 'இரட்டைகள் இருக்குமிடத்தில் "நான்" இல்லை. இரட்டைகள் தவிர்ந்த இடத்தில் "நான்" உள்ளேன்' என்கிறார். இந்த நிலையை திருப்திக்கு இடமில்லை. ஏனெனில் ஆசைக்கும் இடமில்லை. தாகம் எடுத்தால்தான் திருப்திக்கும் வாய்ப்பு? பசியெடுத்தால்தானே திருப்திக்கும் வாய்ப்பு? எல்லா அனுபவங்களும் தமக்கு எதிரான அம்சங்களையும் தம்முடன் இழுத்துவருகின்றன. சுகம் என்ற சிகரத்தில் ஏறுபவம் துன்பம் என்னும் பள்ளத்தாக்கில் விழக்கூடிய அபாயத்திற்கும் தயாராக இருக்க வேண்டும்.

தத்துவ அறிஞர் கிருஷ்ணமூர்த்தி மாற்றுகள் இல்லாத நிலை என்பதை ஆதரிக்கிறார் (choicelessness). இது எதையும் தேர்ந்தெடுக்காமையைக் குறிக்கிறது. நீ செய்ய வேண்டியது சும்மா பார்த்தபடி நிற்றல் மட்டுமே. இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்காதே. அழகு-அழகின்மை, நம்மவர்-அந்நியர், பிரியமானது-பிரியமற்றது, அருகே வைத்தல்-தூரத் தள்ளுதல் போன்ற இரட்டைகளில் நீ எதையும் தேர்ந்தெடுக்காவிடில், நீ முக்தி நிலையை அடைந்துவிட்டால் எனலாம்.

'சொரூபத்திற்கு ரூபம் எங்கே? கல்வியறிவு, கல்லாமை, நான்-இது-எனது முதலிய உணர்வுகள், கட்டுத்தளை, சுதந்திரம் முதலியவை சாட்சி நிலையில் என்ன மதிப்பைப் பெறமுடியும்?' **(சுலோகம் 287)**

**எ**க்கருத்தையும் விளக்குகையில் சொற்களைப் பயன்படுத்தித்தான் ஆகவேண்டியுள்ளது. நிசப்தம் என்பதைச் சொல்லவும் சப்தம் தேவைப்படுகிறது. எனவே சொற்களின் எல்லையைக் கவனத்தில் கொள்ளவேண்டும். எதிர்மறைச் சொல்லையும் சேர்த்து ஒப்பிட வேண்டும். சொருபத்திற்கு ரூபம்

என்ற இக்கேள்வியிலேயே ரூபம் என்னும் சொல் வருகிறது! வேறுவழியில்லை. எதிர்மறைச் சொற்களை அருகருகே கொணர்ந்து, அவற்றை மோதவிட்டு விழச்செய்ய வேண்டும். மிஞ்சுவது எதுவோ அதுவே சத்தியம்.

உபநிடதம் ஓரிடத்தில் கடவுள் தொலைவிலும் தொலைவிலுள்ளார்; அருகிலும் அருகே உள்ளார் என்று கூறுவதைப் படித்து நாம் திகைப்படைகிறோம். தர்க்கப்படியும் இது சரியென்று தோன்றவில்லை. அன்றாட வாழ்வில், தொலைவில் இருப்பதே அருகிலும் இருப்பது என்று சொல்வது நகைப்பூட்டும்.

அருகில் என்று சொல்லும்போதே அது எவ்வளவு தொலைவில் என்பதையும் குறிப்பிட்டுவிடுகிறது. ஒருவன் என்னிடமிருந்து நாலு அடி தொலைவில் உட்கார்ந்துள்ளான் என்று சொன்னாலும் நாலு அடி அருகில் உள்ளான் என்றும் பொருள் படுகிறது.

**சு**ற்றுலாப் பயணி ஒருவன் சைபீரியாவின் கடுமையான பனிபிரதேசத்தில் வழி தெரியாமல் சிக்கிக்கொண்டான்.* இரவாகிவிட்டது. அங்குமிங்கும் ஓடி ஒரு சிறு கிராமத்தை அடைந்தான். அங்கே வாழ்ந்த சைபீரிய எஸ்கிமோக்களின் வீடுகள் பனிக்கட்டியால் ஆனவை. நமது பயணி ஒரு வீட்டிற்குள் நுழைந்தான் குளிரால் அவன் உடல் நடுங்கியபடி இருந்தது. பற்கள் உரசி ஓசை கிளம்பியது. வாய் திறந்து பேச முடியவில்லை. அவனை அனுமதித்த வீட்டின் சொந்தக்காரன் ஜட்டி மட்டுமே அணிந்திருந்தான்! அவன் ஒரு போர்வையைப் பயணியிடம் கொடுத்து, "இந்த ஊரில் சிலசமயம் இலேசாகக் குளிரடிக்கும். தேவைப்பட்டால் இதைப் போர்த்திக்கொள்," என்றான்! இது எப்படி இருக்கு? ஒருவன் குளிரால் செத்துக்கொண்டிருக்கிறான். அதே இடத்தில் இன்னொருவன் பழக்கம் காரணமாகக் குளிரை உணரவில்லை.

---

* வட மத்திய ஆசியாப் பகுதி. இதன் பெரும் பகுதி ரஷ்யாவில் உள்ளது. பனிபெய்யாத குளிர்காலமுள்ள இப்பகுதியில்-68 டிகிரி சென்டிகிரேட் அளவுக்குக் குளிர் இருக்கும்.

ஒரு வாளியில் தண்ணீர் நிரப்பு. ஒரு கையைப் பனிப்பாளத்தின் மீது வை. இன்னொரு கையை அடுப்பின் மேற்புறம் காட்டி சூடுபெறச் செய். இரு கைகளை வாளித் தண்ணீரில் நுழை பனிக்கட்டியைத் தொட்ட கை தண்ணீரை சூடாகவும், அடுப்பில் காட்டிய கை குளிர்ச்சியாகவும் உணரும். ஒரே வாளி; ஒரே தண்ணீர், ஒரே ஆளின் கை. உணர்வது இரண்டு வகையில்.

சொரூபம் என்றால் சுயரூபம். ஆனால் உனக்குள்ளே ஆழத்தில் எந்த உருவமும் இல்லை. ஆகவே சொரூபம் ரூபமற்றது என்று இந்த சுலோகத்தில் வருகிறது.

இத்தகைய அரூப நிலையில் அறிவு-அறிவின்மை இரண்டும் கிடையாது. அறிவு என்பது கற்பதன் மூலம் வருகிறது. கற்பவை எல்லாம் மனத்துடன் முடிந்துவிடுகின்றன. அதற்கும் ஆழத்தில் செல்வதில்லை. ஆகவே தலையில் அடிபட்டால் கற்றது மறந்துபோகிறது.

ஒரு டாக்டர் ரயிலிலிருந்து விழுந்துவிட்டார். தலையில் அடி வெளிக்காயமில்லை. உள்காயத்தால் ஞாபக சக்தியை இழந்துவிட்டார். சிறு வயதிலிருந்து என்னுடன் படித்தவர். நலம் விசாரிக்கச் சென்றேன். ஆனால் அவருக்கு என்னை அடையாளம் தெரியவில்லை. அதுமட்டுமல்ல, தன்னுடைய பெற்றோர், மனைவி, குழந்தைகளையும் அவருக்கு அடையாளம் தெரியவில்லை.

அவருக்குத் தான் படித்த மருத்துவமும் மறந்துவிட்டது. மூன்றாண்டுகள் கழிந்தன. பிறகு குழந்தைகள் ஒவ்வொரு செயலாகக் கற்பதுபோல் இவரும் பயிற்சி செய்தார். சில மாதங்கள் கழித்து மருத்துவ படிப்பு நினைவு துண்டு துண்டாக வந்தது. எனவே எவரும் அவரிடம் சிகிச்சைக்குச் செல்வதில்லை.

அறிவு என்பது வெளியிலிருந்து புகட்டப்படுவதால் அதைப் பிடுங்கிக் கொள்ளவும் முடியும். விடாமல் உபதேசிப்பதன் மூலம் ஒருவர் கற்றதை மறந்து வேறு வகையில் சிந்திக்கும்படி செய்ய முடியும். இதை மூளைச்சலவை என்கிறோம். குறிப்பாக, ஒருவரது மதநம்பிக்கையையும், அரசியல் கொள்கையையும் மூளைச்

சலவை செய்து அவற்றை மறந்துவிடச் செய்ய முடியும். கொடுங்கோல் ஆட்சியாளர்களும், தீவிரவாத மதத்தலைவர்களும் இதைத்தான் செய்கின்றனர். தியானத்தில் தேர்ச்சி பெற்றவனை மூளைச்சலவை செய்யமுடியாது. தான் மூளையில்லை என்று அவனுக்குத் தெரியும்.

அவன் தன்னைக் கர்த்தாவாக நினைப்பதில்லை. கர்த்தாவாக நினைப்பவன்தான் சிந்தனைப் போக்கை மாற்றிக்கொள்வான். சாட்சி என்றும் அப்படியேதான் இருப்பான். சாட்சியாக விளங்க ஒருவன் பெரிய பண்டிதனாக இருக்க வேண்டியதில்லை. நீ எந்த நிலையில் உள்ளாயோ அந்த நிலையிலேயேகூட சாட்சியாக விளங்க முடியும். இதற்காக சாஸ்திரங்கள் கற்க வேண்டியதில்லை. சமஸ்கிருதம் தெரிந்திருக்க வேண்டியதில்லை. சாட்சி மனப்பான்மை அமையவேண்டுமானால், நீ எதைச் செய்தாலும் சரி அதனுடன் உன்னை இணைத்துக் கொள்ளாதே; அதனுடன் ஒட்டிக்கொள்ளாதே.

ஒரு விவசாயி வயல் உழுகிறார். அப்படியே சாட்சியாகவும் ஆக முடியும். ஆனால் தன்னை உழுபவனாக நினைக்காமல், கலப்பை செல்வதைப் பார்ப்பவனாக மட்டும் கருத வேண்டும். உடல் இயங்குகிறது; மனம் உழுவது குறித்துத் திட்டமிடுகிறது; ஆனால் உழவன் இதையெல்லாம் பார்ப்பவனாக மட்டும் தன்னை நினைக்க வேண்டும். உனது தொழில் வேதம் ஓதுபவனாகவோ, வேறு எதுவாகவோ இருந்தாலும் சரி, நீ உன்னைத் தொழிலுடன் சம்பந்தப்படுத்திக் கொள்ளாதே. அத்தொழில் நடைபெறுவதை மட்டும் பார். இப்படித் தான் கோரா கும்பர் என்ற குயவர் பாண்டங்கள் தயாரித்தபடியே ஞானம் பெற்றார். கபீர்தாசர் நெசவைக் கவனித்துக் கொண்டும், ரைதாஸ் (ரவிதாஸ்) செருப்புகள் தைத்தபடியும் ஞானிகளாயினர். காசியில் புகழ்பெற்ற பண்டிதர்கள் வேதம் கற்றோத முடிந்ததே தவிர ஞானம் பெற முடியவில்லை.

அமெரிக்காவில் படித்துப் பெற்ற பட்டங்களைவிட நடைமுறை வாழ்க்கையை வளப்படுத்தும் அறிவிற்கே முதலிடம் தரப்படுகிறது. அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் பட்டம்

பெறாதவர்களாயினும் பலர் பேராசிரியர்களாக இருப்பதைக் காணலாம். இந்தியாவிலோ உயர்ந்த பட்டம் பெறாதவர்கள் பல்கலைக்கழகப் பேராசிரியர்களாக இருக்க முடியாது.

இங்கே இந்திப் பேராசிரியர்கள் கபீர்தாசரின் பாடல்களை-பாடமாகச் சொல்லித் தருகிறார்கள். அவரைப் பற்றி ஆய்வுக் கட்டுரை எழுதி டாக்டர் பட்டம் பெற்றவர்கள் பேராசிரியர்களாக வேலைபார்க்கிறார்கள். ஆனால் கபீர்தாசர் ஏதேனும் பல்கலைக் கழகத்தில் வேலை கேட்டால் கிடைக்குமா? என்னென்ன பட்டம் வாங்கியிருக்கிறீர்கள் என்றல்லவா கேட்பார்கள்? ஆனால் அமெரிக்காவில் அவருக்கு வேலை கிடைக்கும்! அங்கே பல கவிஞர்கள் பட்டதாரியாக இல்லாவிடினும் பேராசிரியர்களாக உள்ளனர். கவிஞர்தானே கவிதையைப் படைக்கிறார். ஆகவே அவரே அங்கு கவிதைப் பாடம் நடத்தவும், பயிற்சி வகுப்புகள் (ஒர்க் ஷாப்) நடத்தவும் அழைக்கப்படுகிறார்கள்.

அமெரிக்காவில் பட்டம் வாங்காவிடிலும் பல பொறி யாளர்கள் உள்ளனர். அவர்களிடம் அனுபவம் நிறைந்திருக்கிறது. அங்கே எவரை நியமித்தால் முதலீட்டுக்கு ஏற்ற பலன் கிடைக்கும் இருக்கும் என்றும், எவரால் அதிக லாபம் கிடைக்கும் என்றும் கவனித்தே வேலை தரப்படுகிறது. அவருடைய மற்ற தகுதிகள் இரண்டாம் பட்சம்தான்.

சுவாமி ராமதீர்த்தர் அமெரிக்காவில் இருந்தபோது மக்கள் அவரிடம் மிகுந்த மரியாதை காட்டினர்.* அவரது மேன்மையை அவர்கள் சுயமாகவே உணர்ந்தனர். அவரிடம், "நீங்கள் வேதப் பயிற்சி பெற்றிருக்கிறீர்களா? சாஸ்திரங்கள் படித்திருக்கிறீர்களா?" என்று கேட்கவேண்டுமென்று அங்குள்ளவர்களுக்குத் தோன்ற வில்லை. அவரது பேச்சே வேதவாக்குப் போல இருந்தது.

ஆனால் இந்தியாவில் நிலைமை வேறுவிதம். அவர் இந்தியாவிற்குத் திரும்பி காசிக்குச் சென்றபோது பண்டிதர்கள், உமக்கு சமஸ்கிருதம் தெரியும்?" என்று கேட்டனர். அவருக்குச்

---

* சுவாமி ராமதீர்த்தர் (1873-1906) கணிதப் பேராசிரியர். சுவாமி விவேகாநந்தரைச் சந்தித்தபின் ஆன்மிக வாழ்க்கையை மேற்கொண்டார். வேதாந்தத்தைக் கவிதை நடையில் விளக்கியவர். ஆன்மிகத்தை உல்லாசத் திருவிழாவாகக் கருதியவர்.

சிறிதளவே சமஸ்கிருதம் தெரியும். லாகூர் அருகில் பிறந்தவராத லால் உருதுக் கல்வியே பெற்றவர். பார்ஸி மொழியிலும் அறிஞர். கணிதப் பேராசிரியராகப் பணி செய்தவர். அவருக்கு சமஸ்கிருதம் வராது என்று தெரிந்ததும் காசி பண்டிதர்கள் அவரை, "ஏதோ பிரம்மஞானம் என்றொரு கொள்கையைப் பரப்புவதாகப் பீற்றிக் கொள்கிறீர்களாமே? முதலில் சமஸ்கிருதம் கற்றுக்கொள்ளுங்கள் அடுத்து, வேதப் பயிற்சி பெறுங்கள். சாஸ்திரங்களைப் படித்துத் தேர்ச்சிபெறுங்கள். பிறகு உங்கள் ஞானத்தை விளம்பரப்படுத்திக் கொள்ளுங்கள்," என்று கூறி இகழ்ந்தார்கள்.

இந்து மதத்தின் சாரத்தைப் புரிந்துகொள்ள இக்காலத்தில் சமஸ்கிருத அறிவு தேவையில்லை. ஒருவர் தன்னை முஸ்லிம் என்று தெரியப்படுத்த அரபிமொழி அறிந்திருக்க வேண்டிய கட்டாயமில்லை. ஒருவன் யூதமதத்தைச் சேர்ந்தவன் என்பதால் அவனை ஹீப்ரு மொழி கற்குமாறு வற்புறுத்த முடியாது. சத்தியத்தை அறிவது ஒன்றே கட்டாயமானது. சத்தியமோ உனக்குள்ளே கிடக்கிறது. விழிப்புப் பெறுவது மட்டுமே மிஞ்சியிருக்கிறது. உள்ளே இருப்பதை அகக்கண் திறந்து பார்ப்பது மட்டுமே எஞ்சியுள்ளது.

பந்தம்-மோட்சம் (பிடிபடுதல்-விடுதலை) இரண்டுமே உலகியல் சார்ந்தவை ஏனெனில் அவை இரட்டைகள்.

**ஒ**ருவன் 20 ஆண்டுகள் சிறையிலிருந்தபின் விடுதலை பெறுகிறான். அது அவனுக்கு முக்திநிலைபோல் தோன்றுகிறது. உனக்கு அவ்வாறு தோன்றாது. ஏனெனில் நீ ஏற்கெனவே சுதந்திரமாகப் பாதையில் சென்று கொண்டிருக்கிறாய். அவன் 20 ஆண்டுகளுக்குப்பின் இப்போதுதான் காற்றுவீச்சு, சூரிய ஒளி, பறவைகள் பறத்தல், மக்கள் நடமாட்டம் இவற்றை மீண்டும் அனுபவிக்கிறான். இத்தனை காலமாக இருண்ட சிறையறை, கம்பிக் கதவுகள், வார்டர்களின் காலடி சத்தம் தவிர வேறு அனுபவம் இல்லை. இப்போது வெளியே வந்தபிறகு பரம மோட்ச நிலையை உணர்கிறான்.

முக்தி உணர்வு பின்பு தோன்ற முன்பு விலங்குகளால் பூட்டப்பட்டிருக்க வேண்டும். முன்பு கட்டப்பட்டிருந்தால்தான்

பிறகு விடுதலையை அனுபவிக்க முடியும். சுதந்திரமாக இருப் பவன் முக்தி உணர்வு என்று தனியாக எதையும் உணர்வதில்லை. அவன் சிறையலடைக்கப்பட்டால்தான் கட்டப்படுதலை உணர்வான். ஆக, கட்டப்படுதலும் விடுதலையும் இரட்டை உணர்வுகள். ஒன்றுடன் ஒன்று நெருங்கிய உணர்வுகள். சாட்சி இவற்றைக் கடந்து இருநிலைகளிலும் ஒரேமாதிரி இருப்பான்.

'தர்மம்-அதர்மம் இரண்டினாலும் பாதிக்கப்படாத எனக்கு பிராரப்த கருமம் எப்படி அமையும்? ஜீவன் முக்தி, தேக உணர்வற்ற கைவல்ய நிலைக்கு இடமெங்கே? நான் எப்பொழுதும் சிறப்பம்சம் ஏதும் இல்லாதவன்.' **(சுலோகம் 288)**

ஜனகர் தன்னைக் குறிப்பிடச் சிறப்புச் சொல் ஏதும் கிடையாது என்கிறார். 'குறிப்பிட்ட மதத்தவன், குறிப்பிட்ட சாதியினன், ஆண் அல்லது பெண், ஞானி அல்லது அறிவிலி, சுதந்திரமானவன், அடிமை என்றெல்லாம் என்மீது எந்த முத்திரையும் குத்த முடியாது. நான் நானாக மட்டும் இருக்கிறேன். என்னை வரையறுத்துக் கூற முடியாது.'

ஜனகர் அவரைக் குறிப்பிடும் சிறப்புச் சொல் எதுவும் கிடையாது என்கிறார். எச்சொல்லும் சரியான அர்த்தம் தராது. குள்ளன்-நெட்டையன், செல்வந்தன்-தரித்திரன், தியாகி-போகி, செயல்படுபவன்-செயல்படாதவன் என்ற எதுவும் அவருக்குப் பொருந்துவதில்லை.

ஆகவே அவர் தன்னைச் சிறிதும் விசேஷமில்லாதவன் என்கிறார். தான் சிறப்பம்சம் உடையவனாக வேண்டும் என விரும்புவது அகங்காரத்தின் காரணமாகத்தான். அப்படி ஏதும் அமையாவிடினும் நாம் நம்மை எவ்விதத்திலோ விசேஷமான வர்கள் என்று காண்பித்துக் கொள்ளவே விரும்புகிறோம். ஒவ்வொரு மனிதனும் தான் சாதாரணமானவன் இல்லை என்று காட்டிக்கொள்ள உபாயங்கள் செய்கிறார்கள். ஒருவன் பணம் நிறையச் சம்பாதித்து, கோடீஸ்வரனாகி, தன்னை ராக்ஃபெல்லர், மார்கன், ஆண்ட்ரூ கார்நேகி போன்ற அமெரிக்க தன குபேரர்களுக்கு இணையாகக் காண்பித்துக்கொள்ள முயலுகிறான். இன்னொருவன் வேதங்களை முற்றோதித் தன்னை மகாபண்டிதன்

என்கிறான். வேறொருவன் தன்னைப் பணம், சொத்து, வீடு, மனைவி, குழந்தைகள் எல்லாவற்றையும் உதறித் தள்ளிய மகாதியாகி என்று கூறிக்கொள்கிறான்.

இப்படித்தான் ஒவ்வொருவனும் தன்னைச் சிறப்பாகக் காட்டிக்கொள்ள எதையாவது துரத்தியபடி ஓடுகிறான். இதன் அர்த்தம், ஒவ்வொருவனும் தன்னைச் சரியாகப் புரிந்துகொள்ள வில்லை என்பதுதான். சிறப்பம்சம் தேடி அலைவது 'நான் யார் தெரியுமா?' என்று உலகத்திற்குக் காண்பித்துக் கொள்ளத்தான். ஆனால் தான் யார் என உள்முகமாகத் தேடுபவன் தன்னைச் சிறப்பம்சம் உள்ளவனாகக் காட்டிக்கொள்ள முயலமாட்டேன். சிறப்பம்சம் பெறப் பாடுபடுவதை அவன் பைத்தியக்காரத்தனம் என்பான். உலகில் ஒவ்வொருவனும் தனித்தன்மை வாய்ந்தவன் தான். எவனும் எவனுக்கும் சமமில்லை. ஆகவே சிறப்பம்சம் என்று தனியாக ஒன்றிற்கு முயலுவது வீண் செயல்.

ஜனகர் தனக்கு விதேக கைவல்யம் என்னம் சிறப்புக் கிடைத்திருப்பினும் அதைப் பொருப்படுத்தவில்லை என்கிறார். ஜனகரை விதேகர் என்னும் சிறப்புப் பெயரால் அழைப்பது வழக்கம்.* ஜனகர் தேகத்தில் வாழ்ந்துகொண்டே தேகத்தை (தேக உணர்வைக்) கடந்தவராகவும் இருந்தார். அவர் உடலைப் புரிந்துகொண்டவராக இருந்தார். உலகில் வாழ்ந்தபடியே அவர் மோட்ச நிலையை அடையப் பெற்றார்.

அவர் அதையும் கடந்த மகாசூன்ய நிலையை அடைந்துவிட்டதால், மக்கள் தன்னைப் பற்றிக் கூறும் சிறப்புச் சொற்களை உதாசீனப்படுத்திவிட்டார்.

'சுபாவம் என்று தனியாக ஒன்றும் இலலாத என்னிடம் கர்த்தா உணர்வு எப்படி இருக்க முடியும்? அல்லது போக்தா (அனுபவிப்பேன்) உணர்வாவது இருக்குமா என்றால் அதற்கும் வாய்ப்பில்லை-என்னிடம் செயலின்மையும் கிடையாது; தூண்டப்பட்டுப் பரபரப்பாகச் செயல்படும் தன்மையும் கிடையாது. நேரிடையான ஞானமும் அதன் விளைவும் என்னிடம் தென்படவில்லை.' **(சுலோகம் 289)**

---

* ஆகவே அவர் மகள் சீதையின் ஒரு பெயர் வைதேகி.

**சு**பாவம் என்பது உன் தனித்தன்மை. உனக்குள் மூழ்கி உன் சுயத்தை நீ ஆராயும்போது அப்படி ஒன்றும் இல்லை என அறிந்து நீ அதிசயப்படுவாய். அப்போது சுயம் என்பது நீங்கிவிட்டதாக உணர்வாய். சுயம் என்பது பரம் (வெளிப்பொருள்) என்பதுடன் சேர்ந்துள்ளது. நீ முற்றிலும் தனிமையானவனாவதும் கூட்டம் என்பதுடன் சம்பந்தப்பட்டது.

ஒருமுறை நண்பர்களுடன் காஷ்மீர் சென்றிருந்தேன். ஏரியில் உல்லாசப் படகு வீட்டில் பயணித்து நாங்கள் இன்பமாக இருந்தோம். நாங்கள் புறப்படும் சமயம் படகுக்காரன் என்னிடம் வந்து, தன்னையும் மும்பைக்கு அழைத்துச் சென்று எல்லா இடங்களையும் சுற்றிக் காண்பித்து காஷ்மீருக்குத் திருப்பி அனுப்புமாறு வேண்டினான். நீண்ட காலமாக அவன் மும்பையில் சில நாட்களாவது செலவிட வேண்டும் என்று ஆசைப்பட்டு வருவதாகக் கூறினான். பல்லாண்டுகளாக ஏரியில் படகோட்டி அலுத்துப் போனதாகத் தெரிவித்தான்.

நான் மற்ற நண்பர்களைச் சுட்டிக்காட்டி, "இவர்கள் எல்லோருமே மும்பைக்காரர்கள்தாம். அங்குள்ள வாழ்வு திகட்டி, கசந்து காஷ்மீர் பார்க்க வந்துள்ளனர். தொழில் காரணமாக மும்பையைவிட்டு வெளியேற முடியாதபடி தவிக்கின்றனர்.

மும்பை வாழ்க்கையில் தத்தளிப்பவர்கள் காஷ்மீரில் அமைதியாகச் சில நாள்களைக் கழிக்கமாட்டோமா என ஏங்குகின்றனர். இந்த காஷ்மீர்வாசியோ காஷ்மீரின் அமைதி அவனுக்கு சூன்யமாக, பந்தமாகத் தோன்றுவதாகப் புகார் கூறுகிறான்!

நீ அமைதி என்பது மும்பையில் நீ சிக்கித் தவிக்கும் கூட்டத்துடன் சம்பந்தப்பட்டது. காஷ்மீருக்குச் சென்று, 'ஆஹா' இங்கே எவ்வளவு அமைதியாக உள்ளது' என்னும்போது நீ மனத்தளவில் மும்பையில்தான் இருக்கிறாய். காஷ்மீர் சூழ்நிலையை மும்பையுடன் ஒப்பிடுகிறாய். படகில் உனக்கருகில் உட்கார்ந்து துடுப்புப் போடுபவன் மனமோ ஒரேமாதிரி வாழ்க்கை நடத்தி சூனியமாகிவிட்டது.

'எனது சொரூபத்தில் பிரிக்க முடியாதபடி இருக்கும் எனக்கு உலகியல் வாழ்க்கையுமில்லை, யோகியின் வாழ்க்கையுமில்லை. நான் ஞானியுமில்லை, அறிவிலியுமில்லை. கட்டப்பட்டவனும் இல்லை, சுதந்திரமானவனும் இல்லை.' **(சுலோகம் 290)**

**ந**ம் நாட்டு சித்தர்களும் புனிதர்களும் 'ஒன்று' என்பதைச் சொல்வதற்குப் பதிலாக 'இரண்டல்ல' என்று கூறும் பழக்கம் கொண்டிருந்தனர். அவ்வாறு நன்கு யோசித்துதான் செய்தனர். ஒன்று என்று சொல்வதற்கு இரண்டு என்பது இருந்தாக வேண்டும்.

கணிதவியலில் அடிப்படை எண்கள் ஒன்று முதல் பத்து. மற்ற எண்கள் எல்லாம் இவற்றின் மடங்குகள் மட்டுமே. ஒன்று முதல் பத்து என்னும் வழக்கம் மனிதனுக்குப் பத்து விரல்கள் இருப்பதால் உண்டானது. உலகில் எல்லோருக்குமே பத்து விரல்கள் என்பதால் இப்பழக்கம் உலகமெங்கும் நிலவுகிறது. இது தற்செயலாகத் தொடங்கிய பழக்கமாகும்.

இந்த எண்ணிக்கையைக் குறைக்க முடியுமா என்று கணித வல்லுநர்கள் ஆராய்ந்தனர். லீப்னிஸ் என்ற கணித அறிஞர் 1,2,3,10 ஆகிய நான்கே போதுமென்றார்.* 1,2,3 இவற்றை அடிப்படை எண்கள் என்றார். இவையே போதுமென்று கருதினார். கிறிஸ்தவ மதத்தின் ட்ரினிடி (முச்சக்திகள்) கோட்பாட்டின் தாக்கத்தை இதில் காணலாம். இந்து மதத்திலும் மும்மூர்த்திக் கோட்பாடு உண்டு. விஞ்ஞானிகள் முச்சக்திகளாக இலக்ட்ரான், ப்ரோட்டான், ந்யூட்ரான் என்பவற்றைக் கூறுகின்றனர். லீப்னிஸ் 1,2,3,10 என்பதுபோல், 11,12,13,20 என்ற முறையில் வரிசை அமைத்தார்.

ஐன்ஸ்டீன் மூன்று எண்கள்கூட தேவையில்லை, இரண்டு எண்களை வைத்தே சமாளிக்கலாம் என நினைத்தார்! ஏனெனில் உலகில் எதிலும் இரண்டு பிரிவுகள் உள்ளன. இருட்டு-வெளிச்சம், காலை-மாலை, பிறப்பு-இறப்பு, ஆண்-பெண், நேர்மறை-

* Leibnitz (1646-1716) ஜெர்மானிய தத்துவ அறிஞர், கணித வல்லுநர், சட்டவியல் நிபுணர், வரலாற்று ஆசிரியர், அரசியல் ஆலோசகர், புதியன கண்டுபிடித்தவர்.

எதிர்மறை என்றெல்லாம் நினைவதால் அவர் 1,2 போதுமென்றார். அவர் 1,2,10; 11,12,20 என்றமைத்தார். இதற்குமேல் குறைக்க வாய்ப்பில்லை. ஏனெனில் 1 என்று சொல்லுவது 2 என்பது இருந்தால்தானே முடியும்.

இந்திய ஞானிகள் 1 என்றாலே அங்கே 2 என்பதும் மறைந்து நிற்கும் என்றே எப்பொழுதும் கூறிவந்திருக்கிறார்கள். ஒன்று என்பது தனியாக நிற்க முடியாது. எனவே அவ்வாறு கூறாமல் ஞானிகள் இரண்டல்ல என்கிறார்கள்.

ஜனகர் மேற்படி சுலோகத்தில் ஒவ்வொன்றையும் தான் அதுவாக இல்லை என்று கூறும்போது எல்லாச் சிறப்புச் சொற்களும் தன்னுடன் சம்பந்தப்படவில்லை என்று தெரிவிக்கிறார். அஷ்டாவக்ரர் ஒரு ஞானியிடம் என்னென்ன குணங்கள் இருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறாரோ அதில் சிலவற்றைச் சொல்லாமல் விட்டுவிடுகிறார். தன் சீடரைச் சோதித்துப் பார்க்கவே அவர் வேண்டுமென்றே அவ்வாறு செய்கிறார். ஆனால் ஜனகர் அவற்றை ஊகித்துச் சொல்லி, தம்மை குருவிற்கு ஏற்ற சீடரென நிரூபிக்கிறார்.

ஐரோப்பாவில் புகழ்பெற்ற ஓர் ஓவியரிடம் ஏராளமானவர்கள் ஓவியக்கலை கற்க வந்தனர். அவர் பயிற்சி முடிந்தபின் விசித்திரமான தேர்வு வைப்பார். அவரே ஓர் ஓவியம் வரைந்து அதில் எங்கேனும் நுணுக்கமாகக் குறைவைப்பார். ஒரு புள்ளி அல்லது சிறு கோடு மட்டும்தான் வரையாமல் வைத்திருப்பார். ஏறத்தாழ அவரொத்த ஓவியத் திறமை பெற்றவரால்தான் குறையைக் கண்டுபிடிக்க முடியும். பெரும்பாலோர் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுவார்கள். சிலர் திருத்துவது என்ற பெயரில் கெடுத்துவிடுவார்கள். அரிதினும் அரிதாக ஒருவர் அதைச் சரி செய்வார். அவரே தேர்ச்சி பெற்றதாக அறிவிக்கப்படுவார். இந்த சூழ்நிலையில் குருவும் சீடனும் சமமாகிவிடுவர், ஒன்றாகிவிடுவர். குரு யார், சீடன் யார் என்று கூற முடியாதபடி ஒரே தரத்தில் உபதேசம் அமைந்திருக்கும்.

அஷ்டாவக்ரர் வேண்டுமென்றே விட்ட நுணுக்கங்களை ஜனகர் தான் அறிந்துகொண்டதாகத் தெரிவிக்கிறார்.

'எனது சுயரூபத்தில் இரண்டற்றவனாக உள்ள எனக்குப் படைப்பு, விநாசம், அடையும் பொருள், அதை அடையத் தேவையான சாதனம், சாதகர், சித்தி பெற்றவர் என்றெல்லாம் எதுவும் கிடையாது.' **(சுலோகம் 291)**

**ஜ**னகர் தாம் பெற்ற 'இரண்டல்ல' என்னும் கண்ணோட்டம் காரணமாகப் படைப்போ, பிரளயமோ தமக்குத் தென்படவில்லை என்று கூறுகிறார். எதுவும் செய்யப்பட்டதாகவும், எதுவும் அழிக்கப்பட்டதாகவும் தெரியவில்லை.

சித்திகள் எனப்படும் அதிசய ஆற்றல்கள் குறித்து பதஞ்சலி முனிவர் தமது யோகசூத்திரத்தில் முழு அத்தியாயமே எழுதியுள்ளார். சித்திகளில் திறமை பெறுவதோடு நிறுத்திக் கொள்பவர் சித்தராக முடியாது என்றும் அவர் எச்சரிக்கிறார். சாதகர் (பயிற்சி செய்பவர்) வெளியுலகக் கவர்ச்சிகளில் சிக்கிக்கொள்ளக்கூடாது என்பதுபோல், உள்ளுலகில் வசப்பட்ட சித்திகளின் கவர்ச்சிக்கு அடிமையாகக்கூடாது என்கிறார். உள்ளுலகில் சித்திகளில் திறமைபெற்றும் அவற்றை ஒதுக்கிவிடுபவரே உண்மையான சித்தராவார். சித்திகள் பெற்றும் அவற்றைப் பெறாதவர்போல் இருந்துவிடுவது பரம சித்த நிலையாகும்.

இந்த நிலையில் சித்தர்கள் கூறும் வசனங்கள் மகாராஷ்டிரத்தில் 'அபங்க' என்றழைக்கப்படுகின்றன. இறை உணர்விலிருந்து சித்தரை இரண்டாகப் பிரிக்க முடியாத, பங்கப் படுத்த முடியாத, மனநிலையில் உதித்த வசனங்கள் என்று விளக்கலாம்.

நாம் எதையாவது ஒன்றைச் சார்ந்திருக்கும்போது, இரட்டைகளைக் கடக்காமல் இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்யும்போது, விட்டுபோன இன்னொன்று நமக்குத் துன்பம் தரும்.

**நா**ன் ஒருமுறை ஒரு ஜமீன்தாரின் மாளிகையில் விருந்தினராகத் தங்கியிருந்தேன். என்னுடன் என் நண்பரும் வந்திருந்தார். பழக்கவழக்கங்களில் அவர் முழுமையான சாமியார். ஜமீன்தார் நாங்கள் தூங்க வசதியான அறை ஏற்பாடு

செய்திருந்தார். கட்டில், வெல்வெட் மெத்தை முதலியவை இருந்தும் என் நண்பர் தூக்கம் வராமல் புரண்டபடி இருந்தார். நான் கேட்டேன். அதற்கு அவர், "இப்படிக் கட்டிலில், மென்மையான படுக்கையில் படுத்து எனக்குப் பழக்கமில்லை. எனக்குக் கட்டாந்தரையில் படுத்தால்தான் தூக்கம் வரும்," என்றார். நான் அவரைக் கட்டிலிலிருந்து இறங்கித் தரையில் தூங்கச் சொன்னேன். அவ்வாறே செய்த அவர் ஐந்து நிமிடத்தில் குறட்டைவிட ஆரம்பித்தார்!

ஆனால் அதிகாலையில் விழித்ததும் அவர் மீண்டும் கட்டிலுக்கு வந்து பொய்த்தூக்கம் போட ஆரம்பித்தார். நான் அவரைத் தட்டியெழுப்பி, கட்டிலுக்கு வந்ததன் காரணம் கேட்டபோது, "நான் தரையில் தூங்குவதை எவராவது வேலைக்காரர் பார்த்து ஜமீன்தாரிடம் சொன்னால், பாவம், அவர் பதைபதைத்துப் போவாரல்லவா? விருந்தாளிக்கு ஏதோ கோபம் என்று வருந்துவாரல்லவா? அவருக்கு விஷயம் தெரிந்து அவரது மனம் புண்படக் கூடாது என்பதற்காகப் பொழுதுவிடிந்து எவரும் பார்ப்பதற்கு முன்பாகக் கட்டிலுக்குத் திரும்பிவிட்டேன்," என்றார்.

ஆகவே ஒருவருக்கு இன்பமான சூழ்நிலை வேறு ஒருவருக்குத் துன்பச் சூழ்நிலையாகிவிடுகிறது. ஒருவருக்கு அழகாகத் தெரிவது இன்னொருவருக்கு சாதாரணமாகத் தெரியலாம். ஏன், உனக்கு இன்று அழகாகத் தெரிவது நாளைக்குச் சராசரியாகத் தெரியலாம். ஒரு பெண்ணைப் பேரழகி என நினைத்துக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறாய். சிறிது காலம் சென்றபின் அவளது பேரழகு மறைந்து அவள் பேயாகத் தெரியலாம்!

எதையும் சார்ந்திருப்பதைக் கருத்து, அபிப்பிராயம், மதிப்பீடு என்றெல்லாம் சொல்லலாம். எதையும் சார்ந்திராமல் சுதந்திரமாகவும் என்றும் ஒரேமாதிரி இருப்பதுவே சத்தியம் என்பதாகும்.

இரட்டைகளிடையே தென்படும் முரண்பாடு அல்லது விரோதம் உண்மையன்று. அது உனது பிரமை. சுகமும் துக்கமும் எதிரெதிரானவையல்ல. அவை ஒன்றாகக் கடை வைத்திருக்கும்

கூட்டாளிகள். வாழ்க்கையும் மரணமும் எதிரெதிரானவை என நீ நினைக்கலாம். அப்படியில்லை. மரணத்தின் காரணமாகப் பிறவி, பிறவியின் காரணமாக மரணம் என்று அவை இணைந்தே உள்ளன. சித்தர் என்பவர் இதை உணர்ந்து இரட்டைகளிலிருந்து விடுபட்டவராக இருப்பார்.

சித்தர் யார் என்பதை சித்தர் ஆகாமல் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது. இக்கணமே நீ சித்தர் ஆக முடியும். அவ்வாறு ஆக எந்த சாதனமும் தேவையில்லை. சித்தராக ஆவது உனது சுபாவத்திலேயே உள்ளது. உனது மோட்சம் உனக்குள்ளேயே இருக்கிறது. நீ சக்கரவர்த்தி. ஏதோ அபசகுனம் போல் உன்னை நீ பிச்சைக்காரனாக நினைத்துக் கொள்கிறாய். நீ பிச்சை கேட்டபடி அலைகிறாய். சித்தர் என்ற நிலையில் பெறுவதற்கு எதுவும் மிஞ்சியிருக்காது. பெற வேண்டியதைப் பெற்றாகிவிட்டது. எவ்வாறு ஆக வேண்டுமோ அவ்வாறு ஆகி விட்டாய். திருப்தியின் அதிகபட்ச நிலையை அடைந்துவிட்டாய்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஜனகர்போல் காதால் உபதேசம் கேட்ட மாத்திரத்திலேயே மகாஞானம் பெற்றதுபோல் நாங்களும் பெற முன்கூட்டியே எத்தகைய தயாரிப்புகள் செய்ய வேண்டும்? எந்த தயாரிப்பும் இல்லாமல் ஒருவனுக்கு மகாஞானம் உதிக்கும் சாத்தியக்கூறு உண்டா?**

காதால் கேட்டுமே (ச்ரவணம்) மகாஞானம் பெறும் விஷயத்தில் ரகசியம் எதுவும் கிடையாது. அப்படி ரகசியம் இருந்தால் அதைத் தேடவேண்டியிருக்கும். உபதேசம் கேட்டதும் ஞானம் கிடைக்கப் பெற்றால், நடுவில் இடைவெளி இல்லாததால், ரகசியம் எதுவும் இருக்க முடியாது. கடவுள் ஒளிந்திருக்கவில்லை. அவர் திரைக்குப் பின்னால் மறைந்திருக்கவில்லை. அவர் நம் கண் முன் நிற்கிறார். கண்ணுக்குப் பின்னாலும் நிற்கிறார். அவரே உன்னை எல்லாப் பக்கங்களிலிருந்தும் சூழ்ந்து நிற்கிறார். கடவுளைத் தவிர வேறெதுவும் இல்லை.

கடவுளை ரகசியமானவர் என நினைப்பவர்கள்தாம் அவரைத் தேடுவார்கள். அவரைத் தவிர வேறெதுவும் இல்லை என்று சொல்லக்கூடிய அளவு அவர் எங்கும் உள்ளார். எங்கும் உள்ளவரை எப்படித் தேடுவது? பகல் வேளையில் யாராவது வெளிச்சம் தேடுவார்களா?

கடவுள் வெளிப்படையானவர். அவரை ரகசியம்போல் பண்டிதர்களும் மடாதிபதிகளும் ஆக்கிவிட்டனர் இப்படிச் சிக்கலாக்கினால்தான் அவர்களின் பிழைப்பு நடைபெறும். கடவுளைச் சிக்கலாக ஆக்கினால்தான் சாதாரண மனிதர்கள்

அவர்களிடம் வழிகேட்டு வருவார்கள். கடவுளை சுலபமான வராக்கினால் மக்கள் கோயில்களுக்கும் மடங்களுக்கும் ஏன் வரப்போகிறார்கள்?

நீ யாரையும் பின்பற்ற வேண்டியதில்லை. ஏனெனில் நீ எங்கும் போக வேண்டியதில்லை. நீ ஏற்கெனவே சத்தியத்தில் நிலைபெற்றுள்ளாய். நீ விழிக்க வேண்டியது மட்டும்தான் பாக்கி. கண்ணைத் திறக்க மட்டும்தான் வேண்டும். ஓர் அரசன் கனவில் தன்னைப் பிச்சைக்காரனாகக் காண்கிறார். அவன் கண்விழித்தால் போதும். யதார்த்த நிலைக்கு வந்துவிடுவான். அலாரம் அடித்தால் போதும். அதைச் செவியால் கேட்ட மாத்திரத்திலேயே அவன் மீண்டும் அரசனாகிவிடுவான்! அவன் கனவுலகில் இருந்த சில நிமிடங்களில் அவனது சொத்து முழுவதும் காணாமல் போயிருந்தால்தான் அவன் விழிக்கும்போதும் பிச்சைக்காரனாக இருப்பான். அப்படி நடைபெற வாய்ப்பில்லை.

மரம் தன் வேர்களுடன் தொடர்பிழந்தால் நிற்கக்கூட முடியாது. வேர்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை. பூமியின் ஆழ்பகுதியில் கும்மிருட்டில் அவை உள்ளன. மரம் குனிந்து அவற்றைப் பார்க்க முயன்றாலும் அவை தென்படா. மரம், "என் வேர்களை எப்படித் தேடுவேன்? எப்படி அடையாளம் காண்பேன்? அவை உள்ளதற்கு என்ன ஆதாரம்?" என்று கேட்டால் (கேட்க முடியுமானால்), நாம், "வேர்கள் இருக்கத்தான் செய்கின்றன. இல்லாவிடில் மரமாகிய நீ இருக்க முடியாதே." என்போம்.

நீ பேசுகிறாய், மூச்சுவிடுகிறாய், நடக்கிறாய். இப்படி உன் மூலம் கடவுள் பேசுகிறார், சுவாசிக்கிறார், நடக்கிறார். நீ இப்போது ஒரு கேள்வி கேட்டாய். ஆழமான கேள்வி. அதைக் கேட்டவர் கடவுள்தாம்.

அஷ்டாவக்ரர் கடவுளை ரகசியம் என்று கூறவில்லை. நீ கடவுள் என்கிறார். உன் இயக்கங்கள் கடவுள் மூலமாக நடைபெறுவதால்தான் நீ என்பவன் இருத்தலும் சாத்தியமாகிறது என்கிறார். இதைக் காதால் கேட்டு உள்ளுக்குள் இழுத்துக் கொண்டாலே போதும். நீ ஞானமடைந்து விடுவாய்.

என்ன தயாரிப்புகள் தேவை என்கிறாய். எதிரே உள்ளதைப் பார்க்க தயாரிப்பு எதற்கு? எது உன்னிடம் வந்துசேர்ந்துவிட்டதோ அதைக் கொண்டுவர என்ன முயற்சி செய்ய முடியும்? எதிரே தட்டில் சாப்பாடு உள்ளது. அதை எடுத்துச் சாப்பிடாமல் கடைத்தெருவில் உணவு தேடுகிறாய்.

ஜனகருக்குக் காதால் உபதேசம் கேட்டே ஞானம் பிறந்தது என்றால் உனக்கு ஏன் அவ்வாறு ஏற்படவில்லை என்று கேட்கிறாய். இதில் ஏதோ ரகசியம் உள்ளது. ஏதோ தயாரிப்புத் தேவை என்று நினைக்கிறாய். ஜனகர் முன்கூட்டியே தயாரிப்புகள் செய்திருப்பார் என்று கருதுகிறாய். அதுவல்ல விஷயம். அவர் குருவின் உபதேசத்தை முழு இதயத்துடன், முழு மனத்துடன், முழு ஆத்மாவுடன் லயித்துக் கேட்டார். நீயோ மயக்கத்திலுள்ளவன் போல் விட்டுவிட்டுக் கவனித்தாய். அவர் கண்களை அகலத் திறந்து பார்த்தார். நீ கண்களை மூடியபடி பார்க்க முயலுகிறாய். ஆகவே விசேஷ தயாரிப்பு அவசியமில்லை.

நீ மகாஞானம் என்று சொல்வது எளிதில் கிடைக்கக்கூடியது. ஜனகருக்கு அப்படித்தான் கிடைத்தது. அது உனக்குக் கிடைக்காமைக்குக் காரணம் அது மகாஞானம் என்று சாக்குச் சொல்கிறாய். அது அவ்வளவு சுலபமாகக் கிடைக்குமா என்று கூறி உன் முயற்சிகளில் அலட்சியமாக இருக்கிறாய்.

அஷ்டாவக்ரர் சொல்லும் மகாஞானம் என்பது எளிமை யானது. சகஜமானது. சுபாவமானது என்கிறார். கடவுள் எல்லா ரிடமும் உள்ளார். பாவியிடமும் உள்ளார். படைப்பின் ஒவ்வோர் அணுவிலும் உள்ளவர் அவரே. ஆனால் தவறுதலாக நாம் கடவுள் எங்கோ உயரத்திலிருப்பவர், உலகத்திற்கு வெளியே இருப்பவர் என்று நினைக்கிறோம். நீ இயங்கினால் நிழல் விழுவதுபோல் எங்கும் தெரிவது கடவுளின் நிழலே.

நீ தயாரிப்புகள் என்னும்போது பதஞ்சலி முனிவர் அஷ்டாங்க யோகம் என்று கூறிய யம, நியம, ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், உடற்பயிற்சிகள், தாரணை, தியானம், சமாதி ஆகியவற்றை மனத்தில் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. இவற்றிலெல்லாம் தேர்ச்சிபெற ஒரு பிறவி போதாது.

இப்படி கஷ்டமாக இருப்பதைத்தான் மக்கள் வரவேற்கிறார்கள். கடவுளை அடைவது என்றால் இலேசுப்பட்ட காரியமா என்று நினைக்கிறார்கள். ஆகவே பதஞ்சலியை மக்களுக்குப் பிடித்துப்போனது. அஷ்டாவக்ரரோ கடவுளை அடைவது சுலபம் என்று கூறியதால் மக்கள் அவரை நம்பவில்லை. மக்களிடையே அவர் செல்வாக்குப் பெறமுடியவில்லை. தயாரிப்புகள் ஏதுமின்றிக் கடவுளை அடைவதென்பது மக்களின் கற்பனைக்கு அப்பாற் பட்டதாயுள்ளது. அதேசமயம் கஷ்டப்பட்டால்தான் கடவுளை அடையலாம் என்று கருதுவது மக்களின் கற்பனைக்குச் சுவையூட்டுகிறது, திருப்தி தருகிறது.

நீ பார்க்கும் சந்நியாசிகள் அகங்காரிகள். 'கடவுளைத் தேடுகிறோம்' என்று கர்வமாகச் சொல்லிக் கொள்பவர்கள். தொழில் செய்கின்ற உன்னை, கடை வைத்திருக்கின்ற உன்னை, விவசாயம் செய்கின்ற உன்னை பரிதாபமாகப் பார்க்கிறார்கள். கடவுளைத் தேடாமல் காலம் கழிக்கிறாயே என்று பார்வை யாலேயே ஏளனம் செய்கிறார்கள். தங்களின் கடினமான விரதங்களையும் பயிற்சிகளையும் சுட்டிக்காட்டி மற்றவர்களை மட்டம் தட்டுகிறார்கள்.

அஷ்டாவக்ரரின் பார்வையில் எந்த முன்கூட்டிய தயாரிப்பும் தேவையில்லை. ஏணி வைத்து மேலே ஏறவேண்டிய தில்லை. நீ நிற்கும் இடத்திலேயே கடவுள் இருக்கிறார். இது புரட்சிகரமான அறிவிப்பல்லவா? கடவுள் எளிமையானவர், சுலபமானவர். அவர் ஏற்கெனவே உனக்குக் கிடைத்திருக்கிறார் என்கிறார் அஷ்டாவக்ரர்.

அப்படியானால் கடவுள் உனக்கு ஏன் கிடைக்கவில்லை என்று கேட்கிறாய். ஏதோ உபாயம் உள்ளது, ஏதோ சாவி உள்ளது என்றும் அது உன்னிடமிருந்து மறைக்கப்பட்டுள்ளதாகவும் நினைக்கிறாய். பிறகு சூழ்நிலை சாதகமில்லை என்கிறாய். நீ வசதியற்ற குடும்பத்தில் பிறந்தவன் என வைத்துக்கொள்வோம். பணக்காரக் குடும்பத்தில் ஒருவன் ஞானியானான் என்று கேள்விப்படுகிறாய். உடனே நீ உன்னிடம் வசதிகள் இருந்தால் நீயும் உழைக்கத் தேவையில்லாமல், தியானத்திலேயே ஈடுபட்டு

ஞானியாகி இருப்பாய் என்று கூறுவாய். பணக்காரர்களின் குடும்பங்களில் எல்லாம் ஞானிகள் பிறந்துவிடுவதில்லை. ஏழைகள் எல்லோரும் ஞானிகள் ஆகிவிடுவதில்லை.

ஒருவன் வாழ்க்கையில் வெற்றிபெற்றால் நீ காரணம் தேடுகிறாய். அவன் லஞ்சம் கொடுத்திருப்பான் அல்லது அவனது உறவினர் அமைச்சருக்கு வேண்டியவராக இருப்பார் என்று முடிவு கட்டுகிறாய். ஆனால் நீ வெற்றி பெறும்போது நீ கொடுத்த லஞ்சம், நீ பெரிய மனிதர்களை அணுகியது உனக்கு நினைவிருப்பதில்லை. உன் திறமைக்காக, தகுதிக்காகப் பதவி கிடைத்தது என்று உன்னையே ஏமாற்றிக்கொள்கிறாய்.

ஒரு பெண்மணி என்னிடம் வந்து தன் மகன் மூன்று முறை மெட்ரிக்கில் தோல்வியடைந்தான் என்றாள். நான் காரணம் கேட்டேன். அவள் ஆசிரியர்கள் லஞ்சம் கொடுப்பவர்களின் பிள்ளைகளை மட்டும்தான் தேர்ச்சிபெறச் செய்கிறார்கள் என்று புகார் கூறினாள். எனக்கு அந்தப் பையன் சோம்பேறி, மந்த புத்திக்காரன் என்று ஏற்கெனவே தெரியும்.

நான்காவது முயற்சியில் அந்தப் பையன் மெட்ரிக்கில் தேர்ச்சி பெற்றுவிட்டான். அவனை அழைத்துக்கொண்டு என்னிடம் ஆசீர்வாதம் வாங்கவந்த பெண்மணியிடம், "இந்த முறை உன் மகன் எப்படித் தேர்ச்சி பெற்றான்? எவ்வளவு லஞ்சம் கொடுத்தாய்?" என்று கூறி மடக்கினேன்.

ஜனகருக்குக் கிடைத்தது. உனக்குக் கிடைக்கவில்லை என்றால், அவர் ஏதோ குறுக்குவழியைக் கையாண்டிருப்பாரென நீ நினைக்கிறாய். அல்லது அவர் முன்கூட்டியே ஏதோ தயாரிப்பு செய்தார் அல்லது ஏற்பாடு செய்திருந்தார் என்றும் அதனால்தான் குருமொழி காதில் விழுந்ததுமே அவருக்கு ஞானம் கிடைத்திருக்கும் என்றும் நீ கருதுகிறாய்.

அவருக்கும் உனக்கும் என்ன வேறுபாடு தெரியுமா? நீ ஒரு காதால் இயந்திரத்தனமாகக் கேட்டு இன்னொரு காது வழியே வெளியேறச் செய்தாய். அவர் லயித்துக்கேட்டு, உபதேசத்தை முழுமையாக உள்வாங்கி, தனது ஆளுமையில் இரண்டறக்

கலக்கச் செய்தார். அவர் ஞானம் எப்பொழுது கிடைக்கும் என்று மனத்துக்குள் கணக்குப்போட்டுக் கொண்டிருக்கவில்லை.

ஒருவர் இசைநிகழ்ச்சியை மெய்ம்மறந்து கேட்பதுபோல் ஜனகர் குரு உபதேசம் கேட்டார். நீ பாட்டுக் கேட்கும்போது ஒவ்வொரு வரிக்கும் அர்த்தம் தேடுவதில்லை. விளக்கம் கூறுவதில்லை. பாட்டு கூறும் கருத்துடன் ஒத்துப்போகிறாயா இல்லையா என்றும் ஆராய்வதில்லை. உனது மதக் கண்ணோட்டப்படி அமைந்துள்ளதா என்று ஒப்பிடுவதில்லை. சங்கீதம் என்பது ஓர் அலை, ரச பிரவாகம். அது தத்துவக் கோட்பாடு அன்று.

ஜனகர் குருமொழியை சங்கீதம்போல் பரவச உணர்வுடன் கேட்டார். நீயோ அறிவியல் பாடம் படிப்பதுபோல் உணர்ச்சியின்றிக் கேட்டாய். அதே சமயம் உன் மனத்தில் கணக்கற்ற எண்ணங்கள் சுற்றிச் சுற்றி வருகின்றன. மனம் பல திட்டங்கள் தீட்டுகிறது.

சிலர் எவ்வளவு முயன்றாலும், எவ்வளவு தயாரிப்புகள் செய்தாலும் மகாஞானம் பெறுவதில்லை. சிலர் குருவின் உபதேசம் கேட்டபின் ஞானம் பெறுகின்றனர். சிலர் குருவின் அருகில் இருந்தாலே (சத்சங்கம்) ஞானம் பெறுகின்றனர். விரல்விட்டு எண்ணக்கூடிய அளவு சிலருக்கு குருவின் நிழல் பட்டாலே போதும், ஞானம் கிடைத்துவிடும்.

**எ**னக்குத் தெரிந்த ஓர் எழுத்தாளருக்குப் பைத்தியம் பிடித்தது. மூன்றாண்டுகள் சிகிச்சை செய்தும் குணமாகவில்லை. ஒருநாள் அவர் டாக்டரிடம் பேனா-மை-நிறைய காகிதங்கள் தேவை என்றார். அவர் குணமாகிவிட்டார் என டாக்டர் மகிழ்ந்தார். தான் எழுத்தாளர் என்பது அவருக்கு நினைவுக்கு வந்துவிட்டால் அது பைத்தியம் நீங்கின மாதிரிதானே. முன்பெல்லாம் அவர் கத்துவதும் கூத்தாடுவதுமாக இருந்தவர். எழுது பொருட்கள் கிடைத்ததும் தினமும் நீண்ட நேரம் அவர் எழுதினார். டாக்டர் குறுக்கிட விரும்பவில்லை. அவர் முழுமையாக எதையாவது எழுதி முடிக்கும்வரை காத்திருப்பதுதான் நல்லதென டாக்டர் நினைத்தார்.

ஒருநாள் எழுத்தாளர் டாக்டரை அழைத்து, தான் எழுதியுள்ள நாவலைப் படித்துப் பார்க்கக் கேட்டுக்கொண்டார். நூறு பக்க நாவல். டாக்டர் அசந்துவிட்டார். அவர் மிகுந்த ஆர்வத்துடன் நாவலைப் படிக்கத் தொடங்கினார். முதல் வரி 'சேனாதிபதி தாவிக் குதித்துக் குதிரைமேல் ஏறினார். அதைத் தட்டிக்கொடுத்து 'சலோ, சலோ' (ஓடு) என்றார்.' பிறகு மீதி நூறு பக்கமும் 'சலோ, சலோ' என்று மட்டுமே எழுதப்பட்டிருந்தது! டாக்டர் காரணம் கேட்டார். அதற்கு எழுத்தாளர், "சேனாபதி சில முறை சொல்லியும் குதிரை ஓடவில்லை.நூறு பக்கமாவது 'சலோ, சலோ' என்று சொன்னால் குதிரை ஓடுகிறதா என்று பார்க்கவே இத்தனை பக்கம் எழுதினேன். அப்படியும் குதிரை ஓடாததால் நாவலை முடித்துவிட்டேன்," என்று பதிலளித்தார்.

சிலர் சிரமப்பட்டு ஞானம் அடைந்தபின் இவ்வளவு சிரமப்பட்டிருக்க வேண்டாம் என்பதை உணர்கிறார்கள். உழைப்புக்கும் ஞானத்திற்கும் சம்பந்தமில்லை. பயிற்சிகள் மேற்கொண்டு தயாராக இருந்தால் ஞானம் கிடைத்துவிடும் என நம்புவது பிரமை.

புத்தரிடம் அவருக்கு ஞானம் எப்படிக் கிடைத்தது என்று கேட்டதற்கு, அவர், "அதை ஏன் கேட்கிறாய்? நான் என்னென்னவோ முயற்சிகள் செய்தும் அது கிடைக்கவில்லை. பிறகு ஞானம் கிடைத்தபோது அது முயற்சி செய்யாமலேகூட கிடைத்திருக்கும் என்பது புரிந்தது. நான் அதைத் தேடியபடியே இருந்ததால் அதுவும் கைக்குக் கிடைக்காமல் நழுவியபடியே இருந்தது. தேடுவதை நிறுத்திவிட்டு போதிமரத்தின் கீழமர்ந்து அமைதியாக தியானத்தில் ஆழ்ந்தேன். திடீரென ஞானோதயம் ஏற்பட்டது.

புத்தர் ஒருமுறை தன் ஊருக்கு விஜயம் செய்தபோது அவர் மனைவி அவரைச் சந்தித்து, "நான் ஒரு கேள்விதான் கேட்க விரும்புகிறேன். உண்மையை மறைக்காமல் பதில் சொல்லுங்கள். அரண்மனையை விட்டு வெளியேறி காட்டில் உங்களுக்குக் கிடைத்த ஞானத்தை, நீங்கள் அரண்மனையிலேயே தொடர்ந்து தங்கியிருந்தால் பெற்றிருக்க முடியாதா?" என்று கேட்டாள். புத்தர்

தலையசைத்து, "ஆம், இங்கேயேகூட கிடைத்திருக்கும் என ஒப்புக் கொண்டார்.

காட்டுக்குப் போனால்தான் ஞானம் பெறலாம் என்று கட்டாயமில்லை. கடவுள் எங்கும் கிடைப்பாரெனில் அரண்மனையிலும் அவர் கிடைப்பதற்குத் தடை என்ன? ஆலமரத்தடியில் தான் அவர் கிடைப்பாரென்று சட்டம் இல்லை. ஆசிரமத்தில்தான் கிடைப்பாரா என்ன? அவர் இல்லாத இடமென்று ஒரிடமும் கிடையாது. அவர் உனக்குள்ளேயேகூட இருக்கிறார்.

ஸூஃபி சம்பிரதாயக் கதை ஒன்றில், ஒரு துறவி கனவில் கடவுளை தரிசிக்கிறார். கடவுள் அவரது பிரார்த்தனை பலித்தது என்று கூறி வாள் ஒன்றைப் பரிசாக அளிக்க முன்வருகிறார். அதைக் கொண்டு துறவி உலகை வென்று அரசாளலாம் என்கிறார். துறவி அதற்கு, "என்னிடம் ஏற்கெனவே குடிசை-துணி-பாத்திரம் என்று சில பொருட்கள் மிஞ்சியுள்ளன. அவற்றையே எப்படி தியாகம் செய்வது என்று புரியாமல் குழப்பமாக உள்ளது. இந்நிலையில் நான் உலகை வென்று என்ன செய்யப் போகிறேன்?" என்று மறுத்தார்.

அடுத்து, கடவுள் ஒரு வைர மோதிரத்தைக் காண்பித்து அதுதான் உலகிலேயே மிகப்பெரிய வைரம் என்றும், அதை வைத்திருப்பவன்தான் உலகிலேயே பெரிய பணக்காரன் ஆவான் என்றும் கூறினார். அதற்குத் துறவி, "நான் கிழவன். தலை நரைத்தவன். இன்னுமா எனக்கு புதிய ஆசை வரும்? வைரமும் கூழாங்கல்லும் எனக்கு ஒன்றேதான்? என்னை மயக்கி மீண்டும் உலக ஆசைகளில் தள்ளவா பார்க்கிறீர்கள்?" என்று மோதிரத்தைப் புறக்கணித்தார்.

கடவுள் உடனே ஓர் அப்ஸரஸை வரவழைத்தார். துறவியிடம், "இவள் உடல் தங்கம் போன்றது. இவள் என்றும் இளமையுடன் இருப்பாள். கிழவியாக மாட்டாள்," என்று ஆசைகாட்டிப் பார்த்தார். அதற்குத் துறவி, "பெண் ஆசையைக் கைவிட்டுத்தானே நான் துறவியாகியுள்ளேன். நான் மீண்டும் அந்த வாழ்க்கைக்கு ஏன் திரும்ப வேண்டும்? இவள் கிழவியாக மாட்டாள் என்றாலும் நான்தான் கிழவன் ஆகிவிட்டேனே.

உம்மால் இப்படிப்பட்ட வரங்கள்தாம் தரமுடியும் என்றால் சொல்லிவிடுங்கள். பிறகு நான் உங்களை தியானிப்பதை நிறுத்திவிடுகிறேன்,'' என்று மிரட்டினார்.

கடவுள், ''நீ இதுவரை என்னை தியானித்ததன் பலனாக நான் உனக்கு ஏதாவது வரம் கொடுக்காமல் போகமுடியாது. உனக்கு வேறு என்னதான் வேண்டும்?'' என்று கேட்டார். அவர் கையிலிருந்து ரோஜாப்பூவைப் பார்த்த துறவி அதைத் தனக்குத் தந்துவிடச் சொன்னார்.

''இதை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? காலையில் பூக்கும் இந்தப் பூ மாலையில் வாடிவிடுமே,'' என்று கடவுள் சுட்டிக்காட்டினார்.

''பூ ஒரு நல்ல எச்சரிக்கை. இது காலையில் அரும்பி, பகலில் வளர்ந்து அழிகின்றது. மானிட வாழ்க்கையும் அப்படித் தான் என்பதை உருக்கமாக நினைவூட்டுகிறது. அதன் அற்பாயுளில் அது சுகந்தத்தைப் பரப்புவதுபோல், என்னாலும் சமூகத்திற்கு சிறிதளவாவது பயன் விளைய வேண்டும் முதலிய பாடங்களை பூ கற்பிக்கிறது,'' என்று துறவி கூறி கடவுளிடமிருந்து ரோஜாப்பூவை மட்டும் பெற்றுக் கொண்டார்.

கடவுளும் நறுமணம் போல் உன்னிடம் உள்ளார். வெளியே தெரிவதற்கு அவர் திடப்பொருள் இல்லை.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! அஷ்டாவக்ரர் தமது கீதையில் அன்பு பற்றி குறிப்பிடவே இல்லை. ஆனால் நீங்களோ சாட்சி மனப்பான்மை யுடன் அன்பையும் இணைக்கிறீர்கள். காரணம் கூற முடியுமா?**

அஷ்டாவக்ரர் அன்பைப் பற்றி கூறவில்லைதான். ஏனெனில் சாதாரண அன்பு என்று எதை நினைக்கிறார்களோ அது அன்பல்ல என்றும், அதில் காமமும் ஊடுருவி நிற்கிறது என்று கருதினார். ஆகவே அன்பைப் பற்றி தான் எதுவும்

கூறினால் மக்கள் தவறாகப் புரிந்துகொள்வார்கள் என்று அவர் தயங்கினார்.

ஆனால் அஷ்டாவக்ரர் அன்பைப் பற்றி குறிப்பிடாததால், அன்பு செய்வதே பாவம் என்று நீ நினைக்கக் கூடாது என்பதற்காக, நான் சாட்சி மனநிலையுடன் அன்பையும் சேர்த்தே கூறுகிறேன். உடல் அன்பு அல்லது பாச உணர்வு தவறன்று. அதில் கடவுளின் மீது காட்டவேண்டிய அன்பு விதையளவில் உள்ளது. அதை வளர்த்துக் கொள்ள வேண்டும். சாட்சி மனப்பான்மை வளர-வளர, இந்த அன்பும் விரிவடையும்.

மண்ணுக்கும் தாமரைக்கும் என்ன சம்பந்தம் என்று நினைக்கலாம். செந்தாமரை வளரும்போது சேற்றிலிருந்து தான் ஜீவரசம் உறிஞ்சி எடுத்துக் கொள்கிறது. ஆனால் மண்ணும் தாமரையும் சமமில்லை. உடல்வழி அன்பு சேறுபோல் தாழ்ந்த நிலையில் இருப்பினும், கடவுள் என்னும் கமலம் அதில் மலர்கிறது. சேறு அடிப்படை.

தற்சமயம் நீ பிறர் மீது வெளிப்படுத்தும் அன்பு என்பது பரிபூரண அன்பின் ஆரம்பக் கட்டம்தான். நீண்ட பயணம் பாக்கியுள்ளது. உன் அன்பு இன்னும் வளர்ந்து விசாலமாக வேண்டியுள்ளது. உன் அன்புச் செடியில் இன்னும் பல பூக்கள் மலர வேண்டும். உன் அன்பு இப்பொழுதுள்ள நிலையிலேயே தேங்கிவிடக்கூடாது. துறவற விருப்பம் என்று அவசரப்பட்டு அதை வெட்டித் தள்ளிவிடாதே. அதில் கடவுள் மீது அன்பு என்னும் விதை மறைந்து நிற்கிறது.

நீ உன் மனைவியை அல்லது கணவனை, உன் குழந்தைகளை நேசிக்கும்போது அதில் கடவுள் மீதான அன்பு நிழல் வடிவில் உள்ளது. வாய்ப்புக் கொடுத்தால் நிழலும் நிஜமாகும். உலகியல் அன்பில் இறையன்பு புகைபோல் தெரிந்தாலும், புகை நடுவினில் தீ இருக்கும் என்று தர்க்க இயல் (லாஜிக்) கூறுகிறது. புகை இல்லாமல் நெருப்புண்டு. ஆனால் சிறு தணல் அளவிலாவது நெருப்பில்லாமல் புகையாது! சிறு தணலை ஊதி ஊதிப் பெருநெருப்பாக்க முடியும். அதுபோல் காமனிலிருந்து தொடங்கி ராமனை அடைய முடியும்.

புகையை ஆரம்ப நிலையாகக் கொண்டு நெருப்பைத் தேடு. ஒட்டிக் கொள்ளாமல் இருப்பதற்காக சாட்சி மனப்பான்மையும் தேவை. ஆனால் உணர்ச்சியற்ற பிணம்போல் இல்லாமலிருக்க அன்பும் தேவை. அன்பு இல்லாவிடில் சாட்சியான உன்னிடம் காணப்படும் அமைதி மயான அமைதி போன்றதாகும். உனது வாழ்க்கையில் சுவை இருக்காது. உன் வாழ்க்கை உலர்ந்து கிடக்கும் பாலைவனம் போலாகிவிடும்.

சாட்சி மனப்பான்மையும் உச்சகட்ட அன்பும் கைகோத்துச் சென்றால் உனக்கு உண்மையான சமாதிநிலை கிட்டும். வெறும் உடற்பயிற்சியால் கிடைக்கும் சமாதிநிலை பாலைவனம் போன்றது. சாட்சியில் அன்பும் சேர்ந்தால் உன் வாழ்க்கை பூங்காவனமாக இருக்கும். எல்லோரிடம் எதையும் எதிர்பாராத தூய்மையான அன்பு செலுத்துவதுடன், எவருடனும் எல்லைமீறாமல் பழகுவது வாழ்க்கையை அமைதியாக நடத்த உதவும். அப்போது கிடைக்கும் சமாதிநிலையில் நீ உணரும் சூன்யம் பரிபூரணமாக இருக்கும்.

நீ ஞான (தியான) மார்க்கத்தைப் பின்பற்றுபவனாயின், அதன் நிழல்போல் அன்பு விளங்கட்டும். நீ அன்பு (பக்தி) வழியைக் கடைப்பிடிப்பவனாயின், சாட்சி மனோநிலை அதன் நிழலாக இருக்கட்டும். வழிகள்தாம் வெவ்வேறு. அவற்றின் வழியாக வரும் யாத்திரிகர்கள் கடைசியில் எல்லாப் பாதைகளும் ஒரே இடத்தில் முடிவதைக் காண்பர்.

முன்பு பக்தியும் தியானமும் தனித்தனியாகப் பிரித்துப் பார்க்கப்பட்டது. பக்தி வழியில் சென்றவர்கள் தியானம் பற்றிப் பேசியதில்லை. தியானம் பற்றிய நினைவுகூட பக்தி உணர்வைப் பாதிக்குமென அவர்கள் அஞ்சினார்கள்.

இதேபோல் தியான வழியை மேற்கொண்டவர்கள் பக்தியைப் பற்றி பேச அஞ்சினார்கள். பக்தி பற்றிய நினைவு தியானத்திற்குத் தடையாக இருக்குமென அவர்கள் நினைத்தார்கள்.

ஆனால் நான் ஒரு விஷயம் துணிந்து சொல்கிறேன். ஒரு விஷயத்தை முழுமையாக அறிய அதன் முரண்படும் அம்சங்களைச் சேர்த்தே காண வேண்டும். ஒருவன் பகல் என்கிறான்.

இன்னொருவன் இரவு என்கிறான். நான் இரண்டையும் சேர்த்து முழுநாள் பற்றி பேசுகிறேன்.

ஒருவன் நடனம் பற்றிப் பேசுகிறான். இன்னொருவன் அமைதியாக உட்கார்ந்திருப்பது குறித்துப் பேசுகிறான். நடனத்தில் ஒருவிதமான அமைதி தரும் ஒழுங்கு வேண்டும் என்றும், அமைதியாக உட்காருவதில் நடனம் போன்ற உல்லாச உணர்வு வேண்டுமென்றும் சேர்த்தே சொல்லுகிறேன்.

ஒருவன் உலக வாழ்க்கையைச் சிறப்பித்துப் பேசுகிறான். இன்னொருவன் சந்நியாசத்தைப் பாராட்டுகிறான். நான் இரண்டையும் சேர்க்கிறேன். உலகில் வாழ்ந்துகொண்டே தாமரை இலை தண்ணீர்போல் உலகில் ஒட்டாமல் இரு. நீ துறவறம் மேற்கொண்டாலும் சமூகக் கடமைகளைப் புறக்கணிக்காதே. உலகைக் கண்டு பயப்படாதே.

இவ்வாறு நான் முரண்படுகின்ற அரைகுறையான, பாதியே உண்மையான அம்சங்களை இணைத்து, புதிய, பூரணமான என் சித்தாந்தத்தை நிறுவுகிறேன்.

வாழ்க்கையின் உண்மையான சக்தி அன்புதான். விளக்கை ஏற்றினால் ஒளி தோன்றுகிறது. அதுவே சாட்சி மனநிலை. ஆனால் அதில் எண்ணெய் நிரப்ப வேண்டும். அன்பே அந்த எண்ணெய். விளக்கு எரிகிறது என்று சொல்வது வழக்கம். ஆனால் விளக்கு என்னும் பொருள் எரியாது. எரிவது எண்ணெய். அதனால்தான் அது குறைந்து கொண்டே போகிறது. எரிவது அன்பு. அன்புதான் எரிந்து பிரகாசம் தருகிறது. அந்த பிரகாசமே சாட்சிநிலை.

நான் அன்பைப் பற்றி நிறையப் பேசுகிறேன். ஏனெனில் பூரண அன்பில் மகாசக்தி நிறைந்துள்ளது. சாட்சியைப் பற்றி நிறையப் பேசுகிறேன். ஏனெனில் அது உன் வாழ்க்கையை ஒளிரச்செய்ய வேண்டுமென விழைகிறேன். சாட்சி மனநிலை உன்னை உன்னில் ஊன்றச் செய்யட்டும். அன்பு உன்னைப் பிறருடன் சேர்த்து வைத்திருக்கட்டும். இவ்வாறு உன் வாழ்க்கையில் சமரசம் நிலவட்டும். இதுவே கட்டுப்பாடான மனநிலை (ஸம்யம்) என்பது.

போகியிடம் உள்ள சமநிலை கிடையாது. தியாகியிடமும் நடுநிலையான மனநிலை கிடையாது. போகி இன்பங்களின் திசையில் அதிகம் வளைந்திருக்கிறான். தியாகி எல்லாவற்றையும் விட்டதாக எதிர்திசையில் வளைந்திருக்கிறான். போகத்திற்கும் தியாகத்திற்கும் நடுவில், அந்த முரண்பாடுகள் சந்திக்கும் இடத்தில், சீரான மனநிலை நிலவுகிறது. அங்கே போகமும் தியாகமும் தத்தம் எல்லையை மீறாமலிருக்கின்றன.

நான் கூறும் அன்பும், நீ நினைக்கும் அன்பும் வெவ்வேறானவை. நீ செலுத்திய அன்பிற்கு முள்கள்தான் பரிசாகக் கிடைத்தன. பொறாமை, எரிச்சல், வெறுப்பு, பகைமை, போட்டி, போராட்டம், கலகம் முதலியவையே உன் அன்பின் விளைவுகளாக வெளிப்பட்டன. உனது அன்பு போதை போன்ற மயக்கமான மனநிலையுடன் சம்பந்தப்பட்டது.

என்னிடம் வந்து சிலர் தாங்கள் தியானத்தில் ஆழ்ந்தால் தங்கள் அன்புணர்வு உடைகிறது என்கிறார்கள். ஆனால் தியானத்தால் அன்பு பாதிக்கப்பட்டால் அது அன்பாகாது. அது ஒரு மயக்கம் மட்டுமே. தியானம் காரணமாக அன்பு வளர்ந்தால் அதுதான் அன்பு.

நாம் எப்பொழுதும் ஏதாவது செய்தவண்ணம் உள்ளோம். வாழ்க்கை நம்மை வலைபோல் சூழ்ந்து கட்டிப்போடுகிறது. நாம் ஓடுவதைச் சற்று நிறுத்தி ஏன், எதற்காக இந்தப் பரபரப்பு என்று யோசிப்பதில்லை. நமக்கு நாமே இன்னமும் அறிமுகம் ஆகவில்லை. நம்மை நாம் அடையாளம் கண்டால், அன்பு-சாட்சி, தியானம்-அன்பு, பக்தி-ஞானம் ஆகியவை ஒரே சக்தியின் இரண்டு முகப்புகள் எனத் தெரிந்துகொள்வோம். அவை ஒன்றாகவே வருகின்றன. உன் அன்பு உறுதியானதாக, உண்மையானதாக இருந்தால், சாட்சி மனமும் தானே அமையும், அமைந்தாக வேண்டும். உனது சாட்சிநிலை உறுதியாக இருந்தால், அன்பும் வரும், வந்தாக வேண்டும். அவ்வாறு நிகழாவிடில் உனது முயற்சியிலும் பயிற்சியிலும் குறைபாடு உள்ளதென்று அர்த்தம்.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் துறவறம் ஏற்றதிலிருந்து அமைதியாக உள்ளேன். ஆனால் இதனால் என் உறவினர்கள், நண்பர்களிடையே குழப்பம் உண்டாகி விட்டது. அவர்கள் அமைதியிழந்து விட்டனர். நான் என்ன செய்வது?**

இது இயற்கையானது. ஒருவன் துறவியானால் அவனை அறிந்தவர்களும், அவனைச் சார்ந்தவர்களும் சங்கடத்துக்கு உள்ளாகின்றனர். நீ துறவியானதால் நீ மாறிவிட்டாய். ஆகவே இதுவரை உன்னுடன் தொடர்போ, உறவோ கொண்டிருந்தவர் களும் மாற வேண்டியுள்ளது. உன்னுடன் புதிய முறையில் பேச, புதிய முறையில் பழகவும் வேண்டியுள்ளது. உன் பெற்றோர்கள் கூட உன்னுடன் பேசும் விதத்தை, நடந்துகொள்ளும் விதத்தில் தங்களை மாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது.

ஒரு பெண்மணி என்னைச் சந்தித்து, "நான் தியானம் செய்வதை மேற்கொண்டால் எனக்கும் என் கணவருக்கும் இடையே பிரச்சினை வருமா?" என்று கேட்டாள்.

நான் விளக்கமாகப் பதில் சொன்னேன். "ஆம், பிரச்சினை வரும். தியானத்தால் உனக்கு மன அமைதி கிடைக்கும். உன் கணவருடன் 20 ஆண்டுகளாக நீ குடும்பம் நடத்திவருகிறாய். வாழ்க்கை குறித்து உங்களுக்குள் விட்டுக்கொடுத்து ஓர் ஒப்பந்தம்போல் உருவாகியிருக்கும். இத்தனை ஆண்டுகளில் தகராறுகள், தொந்தரவுகள், பூசல்கள், கோப வெளிப்பாடுகள் நிறைய ஏற்பட்டு, ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு வாழ்ந்து வருகிறீர்கள்.

"நீ தியானம் செய்யத் தொடங்கினால், உனக்குள் சில மாறுதல்கள் உண்டாவதைத் தடுக்க முடியாது. ஆகவே கணவருக்கு உன்னுடன் புதிய முறையிலான வாழ்க்கையைத் தொடங்க நேரிடும். உனக்கேற்ப அவர் மாற வேண்டியிருக்கும். இப்போது ஐம்பது வயதில் அவரால் புதிதாக வளைய முடியுமா?"

அவள் திகைத்தாள். நான் தொடர்ந்தேன். "தியானத்தைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இத்தனை ஆண்டுகள் சேர்ந்து வாழ்ந்தபின் உன்னிடம் சிறு மாறுதல் தென்பட்டாலும் அவருக்குக் குழப்பமாகிவிடும். நீ சோதனை செய்துபார். நீ ஒரு வாரம் சற்று வித்தியாசமாக நடந்துகொள். அது நடிப்பானாலும் சில உண்மைகள் தெரியவரும்.

"உதாரணமாக, நீ எப்பொழுதும் சிரித்த முகமாக இரு. கணவர் கோபித்தாலும் திட்டினாலும் பொய்யாகவாவது சிரி. கணவர் குழப்பமடைவார். பிறகு வந்து சொல்," என்று அவளை அனுப்பினேன்.

ஒரு வாரம் கழித்து அவள் வந்தாள். "சுவாமி, நீங்கள் சொன்னது சரிதான். நான் எப்பொழுதும் சிரித்தபடி இருப்பதைப் பார்த்து என் கணவர் தடுமாறிவிட்டார். 'உனக்கென்ன கிறுக்குப் பிடித்துள்ளதா? இதைவிட நீ வழக்கம்போல் சண்டைபோடுவதே உனக்குப் பாந்தமாக இருக்கும்' என்று கத்தினார்," என்றாள்.

நீ உன் மனைவியை எவ்வளவு திட்டினாலும் அவள் சிரித்தபடி இருந்தால், உனக்கு அவமானத்தால் அடிபட்டதுபோல் இருக்கும். அவளும் திருப்பி உன்னைத் திட்டினால் இருவரும் சமநிலைக்கு வந்துவிடுகிறீர்கள். அத்துடன் விஷயம் முடிந்தது; பிரச்சினை தீர்ந்தது. ஆனால் நீ ஏசினாலும் அவள் சிரித்தால், அவள் உன்னைவிட உயர்ந்த நிலைக்குச் சென்றுவிடுகிறாள். பதி பரமாத்மா என்னும் கொள்கை உடைய நம் சமூகத்தில் மனைவி தன்னைவிட உயர்வாக இருப்பதைக் கணவனால் எப்படித் தாங்க முடியும்? நீ திட்டி அவள் சிரித்தால் அவள் விண்ணில் பறக்கும் பறவைபோலவும், நீ மண்ணில் நெளியும் புழுப்போலவும் அல்லவா ஆகிவிடுவீர்கள்.

தியானம் தொடங்குமுன் போலியாகச் சிரிக்கும் பெண், தியானத்தில் பயிற்சி பெற்றபின், கணவன் திட்டினாலும் நிஜமாகவே சிரிப்பாள். ஏனெனில் அவளுக்குக் கணவன் (அல்லது யாருமே) கோபப்படுவதும் திட்டுவதும் குழந்தைத்தனமாகத் தெரியும். ஆனால் கணவனால் மனைவியின் குணம் இந்த அளவிற்குப் பண்படுவதைப் பொறுத்துக்கொள்ள முடிவதில்லை.

மனைவி தன்னைவிட ஆன்மிகத்தில் அதிக முதிர்ச்சி பெறுவது கணவனுக்குத் தாழ்வு மனப்பான்மையை உண்டாக்குகிறது.

சந்நியாசம் நீ எடுத்துக்கொண்டாய். அதற்கேற்ப மாறுவதோ மற்றவர்களுக்குத் தொந்தரவாகிவிடுகிறது. அவர்கள் உன்னுடன் இத்தனை ஆண்டுகள் பழகி, குறிப்பிட்ட விதத்தில் உருவாகி விட்டனர். ஒரே தடத்தில் சென்று கொண்டிருந்தவர்களுக்கு நடுவில் பாதையை மாற்றுவது என்பது சிக்கலாகிவிடுகிறது.

மனிதன் துன்பங்களால் கஷ்டப்பட்டாலும் காலப்போக்கில் அவற்றுடன் சமரசம் செய்துகொள்கிறான். அவை இனி மாறுவதையும் அவன் விரும்புவதில்லை. அவற்றில் மாறுதல் காணப்பட்டால் புதுத் தொந்தரவுகளை எதிர்கொள்ள நேரிடும். வாழ்க்கையை வேறு விதத்தில் அமைத்துக் கொள்ள நேரிடும். அதற்கான துணிச்சல் சிலரிடமே உண்டு. மறுபடியும் 'அ. ஆ' என்று யார் பாடம் கற்க விரும்புவார்கள்?

ஆகவேதான் வயதானால் மக்களால் புதிதாக எதுவும் கற்க முடிவதில்லை. குழந்தைகள் எதையும் சீக்கிரமாகக் கற்றுக் கொள்கின்றனர். ஏனெனில் அவர்களின் வாழ்க்கையில் திட்டம் ஏதும் இருப்பதில்லை; கற்க ஏதும் தடையில்லை. அவர்கள் திறந்த மனம் உடையவர்கள். அவர்கள் எந்த மொழியையும் விரைவில் கற்றுக்கொள்கிறார்கள். ஆனால் நீ ஒரு மொழியில் பயிற்சி பெற்றபின் அதே வேகத்தில் இன்னொரு மொழி பயில்வது சிரமம். ஏனெனின் முதலில் கற்ற மொழியின் தாக்கம் உன் மீது அதிகம் படிந்திருக்கும். அதேபோல் ஒருவிதமாக வேலை செய்யப் பழகிவிட்டு நடுவில் வேறு விதமாக வேலை செய்ய நேர்ந்தால் தடுமாற்றம் விளையும். நீ துறவியாவதற்குமுன் உன்னுடன் ஒரு விதமாகப் பழகிவிட்டுப் பிறகு துறவிக்கேற்ற முறையில் பழகும் முறையை மாற்றிக்கொள்வது உன்னைச் சூழ்ந்திருப்பவர்களுக்கு சிரமமாகவும் செயற்கையாகவும் தோன்றுகிறத.

துறவியானதால் நீ அமைதி பெற்றாலும் மற்றவர்கள் அமைதி இழக்கும்படி ஆகிவிட்டதே என்பது குறித்து நீ வருந்தாதே. அது அவர்களின் பிரச்சினை, உன் பிரச்சினையன்று. மற்றவர்களைத் தடுமாறச் செய்யாமல் நீ துறவறம் மேற்கொள்வது

என்பது நடவாத காரியம். நீயும் அவர்களுடன் சேர்ந்து அப்படியே கிடக்க வேண்டியதுதான்.

நீ துறவியானது மற்றவர்களின் அகங்காரத்தை அடித்துப் போட்டது. நேற்றுவரை சாதாரணமானவனாக இருந்த இவன் ஆசி கூறும் சுவாமி ஆகிவிட்டானே என்று பொறாமையும், நம்மால் இப்படித் துணிந்து செயல்பட முடியவில்லையே என்று தாழ்வு மனப்பான்மையும் அவர்களை வாட்டுகின்றன. உன்னை நிந்திக்கும் வகையில் சிலர் உன்னை வாழ பயப்பட்டு ஓடிப்போன கோழை என்றும், வேறு சிலர் உனக்கு மூளைக் கோளாறு என்றும் பிரச்சாரம் செய்கிறார்கள்.

புத்தருக்கும் மகாவீரருக்கும்கூட இதுபோன்ற நிலை ஏற்பட்டிருக்கும். அவர்கள் தங்களது துறவறத்தால் மற்றவர்களின் வாழ்க்கையில் குழப்பமேற்பட்டதை விரும்பவில்லை. தாங்களும் மற்றவர்களின் தடுமாற்றத்தால் வருந்துவதையும் குற்ற உணர்வு கொள்வதையும் விரும்பவில்லை. இரு தரப்பினரின் அமைதியை நாடி புத்தரும் மகாவீரரும் துறவறம் ஏற்றபின் காட்டிற்குச் சென்றுவிட்டனர். பிறகு துறவு விருப்பம் கொண்ட எல்லோருமே காடு மலைகளுக்குச் சென்றுவிடுவது வழக்கமாகிவிட்டது.

ஆனால் நான் என்னுடைய துறவிகளைக் காட்டுக்குப்போக அனுமதிப்பதில்லை. அவர்கள் சமூகத்துடனான தொடர்பை அறுத்துக் கொள்ளக்கூடாது. மற்றவர்கள் தனது துறவறத்தால் கஷ்டப்படுகிறார்களே என்று தோன்றும் சங்கட உணர்வை எதிர்த்து நிற்க வேண்டும். மற்றவர்களை சங்கடத்துக்கு உள்ளாக்குகிறோமே என்றும் குற்ற உணர்வையும் துறவிகள் வெல்ல வேண்டும்.

என் மீது அன்பு அல்லது பக்தி கொள்வதும் ஒருவகையான துறவறமே. என் மீது தன் மனைவி மரியாதை வைத்திருப்பதைக் கணவர்கள் விரும்புவதில்லை. அதேபோல் மனைவிகள் தங்களைவிட எனக்குக் கணவர்கள் அதிக முக்கியத்துவம் தருவதை ரசிப்பதில்லை.

இப்படித்தான் ஒரு பெண்மணி என்னிடம் வந்து, தான் துறவியாக விரும்புவதாயும், அப்படிச் செய்தால் கணவர்

தற்கொலை செய்துகொள்வதாக மிரட்டுகிறார் என்றும் கண்ணீர் விட்டாள். என் புத்தகங்களை வீட்டுக்குள் கொண்டுவருவதையும் அவர் அனுமதிப்பதில்லையாம். என்னுடைய சொற்பொழிவு களைக் கேட்டுத்தான் அவருக்குத் துறவற ஆசை மூண்டதால் அவள் கணவர் அவள் தனக்கு முதலிடம் தராமல், ஓஷோ சாமியாருக்கு முதலிடம் தருகிறார் என்று எரிச்சல்படுகிறார்.

சிலரின் மனைவிகள் என்னைச் சந்திக்கும்போது என்னுடன் பழகியதால் தங்கள் கணவர்கள் மாறிவிட்டனர் என்று என்மீது பழிசொல்கிறார்கள். உதாரணமாக இவர்களின் புகார் இப்படி யிருக்கும். "சுவாமி, நான் முக்கியமான குடும்ப விஷயம் பேசும்போது கணவர் உங்கள் பேச்சின் டேப்பை (ஒலிநாடாவைக்) கேட்டபடி இருக்கிறார். டேப்பைப் பிடுங்கி எறிய வேண்டும்போல் ஆத்திரம் வருகிறது. என் சுக துக்கங்களை அவரிடம் பறிமாறிக் கொள்ள முயலும்போது அவர் உங்கள் புத்தகத்தைப் படிப்பதில் ஆழ்ந்து கிடக்கிறார். என் பேச்சு அவர் காதில் விழுவதாகத் தெரியவில்லை."

இந்த அளவிலேயே குடும்பத்தில் பிரச்சினை வந்து விடுகிறது என்றால், ஒருவர் என்னிடம் வந்து தீட்சையும் பெற்று விட்டால் குடும்பத்தினர் எத்துணை எதிர்ப்புக் காட்டுவர் என்பதை என்னால் ஊகிக்க முடிகிறது. உன் குழந்தைகளை மற்ற குழந்தைகள் கேலி செய்வர். "உன் அப்பாவுக்கு என்ன பைத்தியமா? காவி நிறத்தில் கோமாளி மாதிரி சட்டை போட்டிருக்கிறாரே அது என்ன பட்டாணி மாலை கழுத்தில்?" என்றெல்லாம் கேட்டுச் சிரிப்பார்கள்.

**என்னிடம் வந்து அன்பு செலுத்தினால்**
**உலகம் உனக்கு எதிரியாகி விடும்**
**சந்து பொந்தெல்லாம்உன்னை ஏசுவர்**
**சன்னல்கள் வழியாய் பரிகசிப்பர்**
**பாதையில் செல்வோரெல்லாம் உன்னைக்**
**குற்றவாளிபோல் சுட்டிக்காட்டுவர்**

உன் துறவறம் கண்டு மற்றவர்கள் கொதிப்படைவது இயற்கையே. அதை ஏற்றுக்கொள். உன் ஆன்மிகப் பயிற்சியில்

அதுவும் ஒரு கட்டமாகும். மக்கள் கொந்தளிக்காவிட்டால்தான் வியப்படைய வேண்டும். எல்லாம் சரியானபடி நடைபெறுகிறது. இதனால் நீ உன்னை நொந்து கொள்ள முயலாதே. மற்றவர்களின் மனத்தை சாந்தப்படுத்தவும் முயலாதே. நீ அவர்களை அலட்சியப்படுத்திவிடு. இந்த உபத்திரவம் அதிக நேரம் நீடிக்காது. விரைவில் மக்கள் உன்னை மறந்துவிடுவார்கள். போனவன் போனவன்தான் என்று விட்டுவிடுவார்கள். இறந்தவனையே மறக்கின்ற உலகமாயிற்றே இது. நீ துறவியாக மட்டும்தானே ஆனாய். உலகில்தானே, உயிருடன்தானே இருக்கிறாய். உன்னை மறப்பதில் சிரமமில்லை.

**சி**றுவயதில் எனக்குக் கடைக்குச் சென்று எதுவும் வாங்கிவரப் பிடிக்காது. பிறர் வீட்டு நிகழ்ச்சிகளுக்கு, விருந்து களுக்கு, திருமணங்களுக்குச் செல்வதை நான் விரும்பியதில்லை. என் சுபாவத்தைக் கண்டு குடும்பத்தினர் சங்கடப்பட்டனர். நான் நிகழ்ச்சிகளுக்குச் சென்று பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டுமென அவர்கள் விரும்பினர். ஆகவே என்னை வலுக்கட்டாயமாக இழுத்துச்செல்வார்கள். நிகழ்ச்சிகளில் எல்லோரும் நின்றால் நான் உட்கார்ந்துவிடுவேன்; எல்லோரும் அமர்ந்திருந்தால் நான் எழுந்து நின்றபடி இருப்பேன்! வேண்டுமென்று அவ்வாறு செய்யவில்லை. அப்படி ஒரு சுபாவம் எனக்கு அமைந்துவிட்டது. என்னுடன் வரும் பெரியவர்கள் சொல்கின்றபடி நடந்து கொள்வதில்லை. இதனால் அவர்கள் என்னை எங்கும் வெளியே கூட்டிச் செல்வதை நிறுத்திவிட்டனர்.

நான் வீட்டிலேயே கிடப்பதைக் கண்டு இரக்கப்பட்ட உறவினர் கடைகளுக்குச் சென்று சாமான்கள், காய்கறி வாங்கிவர அனுப்பலாயினர். இது வாழ்க்கைக்கு அவசியமான பாடமாக அமையுமென நினைத்தனர்.

எனது பிரச்சினை என்னவென்றால் நான் கடையை அடைவதற்குள் வாங்கிவரச் சொன்ன பொருளின் பெயரை மறந்துவிடுவேன். பெருங்காயம் வாங்கிவரச் சொன்னால் ஏலக்காய் வாங்கிக்கொண்டு வந்துநிற்பேன்! கடையை அடையும் வரை பொருளின் பெயரை, உதாரணமாக கடுகு, கடுகு என்று,

வழியெல்லாம் சொல்லிக்கொண்டே போ என்று அம்மா யோசனை சொல்வார்கள். அவ்வாறே பொருளின் பெயரை ஜெபித்தபடி செல்லும்போது, எதிரில் வரும் பழக்கமான மனிதர், "பையா, எங்கே போறே?" என்று கேட்டால் போதும். பொருளின் பெயர் மறந்துபோய் நான் வீட்டிற்குத் திரும்பி மறுபடியும் விசாரிப்பேன். ஆகவே என்னை பலசரக்கு வாங்கிவரும் வேலையிலிருந்து குடும்பத்தினர் விடுவித்துவிட்டனர்.

எனக்கு சாமான்கள் வாங்கி வருவதில் ஆர்வமில்லை. நான் அந்த வம்பிற்கே போக விரும்பவில்லை. என்னை வாழைப்பழம் வாங்கிவர அனுப்புவார்கள். நான் கடைக்குச் சென்று விலை உயர்ந்த, முதல்தரமான பழம் கேட்பேன். சிறிய ஊரானதால் கடைக்காரர்களுக்கு என் சுபாவம் தெரியும். கடைக்காரர் அதிக விலை பெற்றுக்கொண்டு அழுகிய பழங்களை என் தலையில் கட்டிவிடுவார்!

என் அத்தை அவ்வாறு அனுப்பி, நான் கொண்டுவந்த அழுகிய பழங்களைக் கண்டு நெற்றியில் தட்டிக்கொண்டார். அந்தப் பழங்களைத் தெருமூலையில் உட்கார்ந்திருக்கும் பிச்சைக்காரிக்குப் போட்டுவிடுமாறு விரட்டினார். ஆனால் பிச்சைக்காரி கோபத்துடன், "என்னை இந்தப் பழங்களைச் சாப்பிடும் அளவிற்கு மட்டமானவள் என்று நினைத்தாயா! பழங்களைக் குப்பைத் தொட்டியில் எறி," என்று சீறினாள். நான் அமைதியாகச் சென்று, பழங்களைக் குப்பையில் எறிந்து, வீடு திரும்பினேன்.

காலப்போக்கில் குடும்பத்தினர் என்னை உதவாக்கரை என்று புரிந்துகொண்டனர். நான் என்ன செய்யவேண்டும் என்பதை நான் ஏற்கெனவே அறிந்திருந்தேன் நான் எதுவும் செய்ய வேண்டியதில்லை என்பதுதான் அது! பிறகு என்ன செய்வதற்குப் பயிற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்? எதுவும் செய்யா மலிருப்பதற்கான பயிற்சிதான் மேற்கொண்டுவந்தேன்!

இப்படிப்பட்ட சூழ்நிலை வளர்ந்தது. நான் உட்கார்ந் திருப்பேன். அம்மா எதிரில் உட்கார்ந்திருப்பாள். "யாரைக் கடைக்கு அனுப்பி சப்ஜி வாங்கச் சொல்வது? எதிரே யாரும்

இல்லையே," என்று முணுமுணுப்பாள். நானும், "ஆமாம்மா, யாரும் தென்படவில்லை," என்பேன். வீட்டிற்குள் நாய் நுழையும். அம்மா என் எதிரிலேயே, "வீட்டில் யாரும் இல்லையே நாயை விரட்ட," என்பாள். அவள் சொல்வதை நானும் ஆமோதிப்பேன்!

காலப்போக்கில் குடும்பத்தினர் என்னை எதற்கும் உருப்படாதவன் என்று முடிவு கட்டினர். அவர்களது முயற்சிக்கும் எல்லை உண்டு அல்லவா? பிறகு அவர்கள் என்னை எதற்கும் தொந்தரவு செய்யவில்லை. என் வழிக்கே வரவில்லை.

நீ துறவறம் மேற்கொண்டுவிட்டாய், அந்தச் சுவையிலேயே ஆழ்ந்துசெல். பிறர் உன்னை பற்றி பலவிதமாகப் பேசுவார்கள். பல திசைகளில் இழுப்பார்கள். நீ அவர்களுடன் மோதாதே. அவர்களுக்கு விளக்கம் தரவும் முயலாதே. விளக்கினாலும் அவர்களுக்கு விளங்காது. நீ அமைதி காத்தால், உன்னைக் கிண்டல் செய்தவர்கள் சிறிது காலத்திற்குப்பின் உனக்கு மரியாதை காட்டுவார்கள். ஏளனம் செய்து விலகியவர்கள் தேடி வந்து அருகில் உட்காருவார்கள். உனக்கு மூளைக்கோளாறு என்றவர்கள் உன்னிடம் தங்கள் பிரச்சினைகளுக்கு ஆலோசனை கேட்பார்கள்! 'நீ மிகவும் சாந்தமாகிவிட்டாய். இது எப்படி சாத்திய மாயிற்று? உனக்கு என்ன ஆனது? முன்புபோல் உன் முகத்தில் கவலை ரேகைகள் தெரியவில்லையே! உன் கண்களிலும் சாந்தம் பிரதிபலிப்பாகிறது' என்றெல்லாம் அவர்கள் அதிசயிப்பார்கள். ஆனால் நீ அவர்களுக்கு எதையும் தெளிவுபடுத்த முயலாதே. நீ உன் பரவசநிலையிலேயே தொடர்ந்திரு. நீ எப்படி மாறினாய் என்று அவர்கள் கவலைப்பட்டுக் கொள்ளட்டும்.

சில விஷயங்களை விவாதிப்பதன் மூலம் நிரூபிக்க முடியாது. துறவறம் என்பது அத்தகைய விஷயங்களில் ஒன்று.

**இறைவா, நான் தனியாளாய் இருந்தால்**
**முன்பே உன்னிடம் வந்திருப்பேன்**
**பின்னாலிருந்து பிடித்திழுத்தது**
**என்னை உறவினர்களின் பெருங்கூட்டம்**
**காலில் பலப் பல விலங்குகள்**
**ஏற சிரமமான குன்றுகள் பல**

**உடலால் என்னைத் தடுத்தனர் சிலரெனில்**
**மனத்தால் தடுத்தனர் மிகப் பலர்**
**இங்கு வந்துசேர மாலையாகிவிட்டது**
**எனது இயலாமையைப் பொறுத்தருள்க**

கடவுளின் கருணையை யாசிக்கும் சோகநிலைக்குப் போகாதே. நிறையத் தடைகள், பின்னடைவுகள் காரணமாகக் கடவுளின் இடத்தை அடையத் தாமதமாகிவிட்டது என்று சாக்குச் சொல்லாதே. ஆனந்தமாக உல்லாசமாக அவரிடம் செல். மன்னிப்புக் கேட்டுச் செல்லாதே. நன்றி தெரிவிக்கச் செல். குடும்ப உறுப்பினர் எவருக்கும் மனத்தாங்கல் இல்லாதபடி அவர்களுக்குச் செய்யவேண்டியதைச் செய். ஆனால் மனத்தளவில் குடும்பத்திற்கு வெளியே இரு. கடைவைத்து வியாபாரம் செய்தாலும் மனத்தளவில் கடைக்கு வெளியே இரு. உன்னைத் தற்போது அவமதிக்கும் கூட்டம் காலப்போக்கில் உனக்கு மரியாதை கொடுக்கும்.

ஆனால் கூட்டம் உன்னை அவமதிக்கிறதா, பாராட்டுகிறதா என்பதில் உன் கவனம் செல்லக்கூடாது. நீ அதைக் கவனித்தால், அது உன் துறவறத்திற்குப் பின்னடைவாகும். துறவிக்கும் கும்பலுக்கும் என்ன சம்பந்தம்? நீ உனது தேடுதலைத் தொடரு. உள்நோக்கிப் பயணிப்பவன் வெளியுலக நடவடிக்கைகளைக் குறைத்துக் கொண்டே வரவேண்டும். அப்பொழுதுதான் அதிக அளவிலான சக்தியை உள்முகப் பயணத்திற்கு உபயோகிக்க முடியும். இன்று உன்னைப் புறக்கணிப்பவர்கள் விரைவில் உன்னைப் பாராட்டுவார்கள். ஆனால் நீ அந்தப் பாராட்டை எதிர் பார்க்கக்கூடாது. அவர்களது பாராட்டும் உன்னை வந்தடையும் நேரத்தில் நீ மான-அவமான நிலைகளைக் கடந்திருக்க வேண்டும். நீ இரண்டையும் நன்றியுடன் ஏற்றுக்கொள்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் எல்லாவற்றையும் துன்பமயமாக உணர்கிறேன். கனவிலும் சுகம் கண்டதில்லை. இதுவரை விழிப்பு அனுபவமும் ஏற்படவில்லை. நான் ஏன் செய்வேன்?**

எல்லாம் துன்பமயம் என்கிறாயே, அது உன் அனுபவமா அல்லது எவரோ சொல்வதை நீ திருப்பிச் சொல்கிறாயா? இங்கு துளிக்கூட சுகமில்லை என்று நீ சொல்வது உன் அனுபவமா அல்லது உலகை வெறுத்த ஞானிகள் சொல்வதை நீ திருப்பிச் சொல்கிறாயா? பிறரது அனுபவம் பயன்தராது. இன்பம்-துன்பம் குறித்து சுயமான அனுபவமே விழிப்புத் தரும். விழிப்புத் தந்தாக வேண்டும். துன்பம் தூய்மைப்படுத்துகிறது. ஆளுமைக்கு மெருகேற்றுகிறது. இதுதான் துன்பத்தின் சிறப்பு.

சிலர் என்னிடம் கடவுள் உலகில் ஏன் இத்தனை துன்பத்தைக் கொடுத்துள்ளார் என்று கேட்கிறார்கள். நான் அவர்களிடம், "கொஞ்சம் சிந்தனை செய்யுங்கள். இவ்வளவு துன்பம் கொடுத்தும் நீங்கள் விழிக்கவில்லையே! உலகில் துன்பமே இல்லாதுபோனால் நீங்கள் விழிப்புப்பெறும் வாய்ப்பும் இல்லாமல் போய்விடும்.

இவ்வளவு துன்பம் இருந்தும் சுகத்தின் மீதான எதிர்பார்ப்பு உனக்குக் குறையவில்லையே. இன்று சுகம் கிடைக்காவிடில் நாளையாவது கிடைத்துவிடும் என்று நம்புகிறாய். இந்த நிமிடம் சுகமாக இல்லாவிடிலும் அடுத்த நிமிடம் சுகமாக இருக்குமென நம்புகிறாய். இன்று தோற்றோம் என்றால் எப்போதுமேவா தோற்போம்? சுகத்தின் புதையிலை நெருங்கிவருகிறாய் என்று மனம் ஆசைகாட்டும். சுகம் கிடைக்கும் என்று நம்பியபடியே மனிதன் துன்பமயமான வாழ்க்கையை வாழ்ந்து முடிக்கிறான்.

உமர்கய்யாவின் வர்ணனைப் பாடல் ஒன்றுள்ளது. அது பின்வருமாறு: நான் பண்டிதர்களையும், மௌல்விகளையும், ஞானிகளையும், மதத்தலைவர்களிடமும் மனிதன் இத்தனைத் துன்பங்களுக்கு நடுவேயும் எப்படித்தான் வாழ்க்கையை நடத்துகிறான் என்று கேட்டுப் பார்த்தேன். அவர்களால் சரியாகப் பதில் கூற முடியவில்லை. எந்த வாசல் வழியாகப் போனேனோ அந்த வாசல் வழியாகவே திரும்பினேன். வெறுங்கையுடன் திரும்பினேன்.

நான் பயந்துபோய் கடைசியாக ஆகாயத்திடம், "நீ கோடி-கோடி ஆண்டுகளாக உலகில் நடப்பதைப் பார்த்து வருகிறாய்.

மக்களின் ஆசைகளையும், கனவுகளையும், அவை சிதறுவதையும், விருப்பங்களின் வானவில்லையும், அவை அழிவதையும் முதலியவற்றை நீ பார்த்துள்ளாய். இத்தனை துன்பங்களின் நடுவிலும் மனிதனால் எப்படி வாழமுடிகிறது?" என்று வினவினேன்.

அதற்கு வானம், "மனிதன் நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு வாழ்கிறான். என்றாவது ஒருநாள் அவன் விரும்பியது கிடைத்துவிடும் என்னும் நம்பிக்கை அவனை நாட்களை ஓட்டச்செய்கிறது," என்று பதில் கூறியது.

நீ வாழ்க்கையில் துன்பம் நிறைந்துள்ளது என்கிறாய். சுகமோ உனக்குக் கனவிலும் கிடைக்கவில்லை என வருந்துகிறாய். வேறு எவருக்கு சுகம் கிடைத்தது? எவருக்கும் கிடைத்ததில்லை. ஒருவேளை நாளைக்கு சுகம் கிடைக்கும் என நீ நினைக்கிறாய். வெளியுலகிலிருந்து சுகம் கிடையாது. வெளிப் பொருட்களுடன் சுகம் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. தனக்குள்ளே இறங்குபவர்களுக்கு, தனது சுயத்தில் வந்து சேர்பவர்களுக்கு, சாட்சி மனப்பான்மை உள்ளவர்களுக்கு சுக உணர்வு வசப்படுகிறது.

மக்கள் தங்களின் துன்பத்திற்கு வெவ்வேறு காரணம் சொல்கிறார்கள். போன பிறவியில் செய்த தவறுகளுக்கு இப்போது பலன் கிடைக்கிறது என்கின்றனர். கைவசம் நிறையப் பணம் இல்லை; மனைவி அழகாக இல்லை; குழந்தைப் பேறு இல்லை என்று ஒவ்வொருவரும் தங்கள் துன்பத்திற்கு வெவ்வேறு காரணம் கூறுகின்றனர். நாட்டில் உள்ள பணக்காரர்களும், பெரிய பதவியிலுள்ளவர்களும் சுகமாக இருக்கிறார்கள் என்று நீ நினைப்பது ஒரு பிரமை மாத்திரமே.

வாழ்க்கையில் வெளியிலிருந்து யாருக்கும் சுகம் கிடைத்ததில்லை, துன்பம்தான் கிடைத்துள்ளது. வெளியிலிருந்து வருவதன் பெயர்தான் துன்பம். உள்ளேயிருந்து பிரவாகிப்பதுதான் இன்பம். நீ என்றாவது ஒருநாள் எந்த உபாயத்தாலாவது சுகம் பெற்றுவிடலாம் என நம்புகிறாய். அது மணலிலிருந்து எண்ணெய் தயாரிக்க முயல்வதற்கு சமம். அலெக்ஸாந்தரோ, நெப்போலி

யனோ எவராக இருந்தாலும் வெளிப்பொருட்களின் உதவியால் உண்மையான, நிரந்தரமான சுகத்தை அனுபவித்தவர்கள் கிடையாது.

வாழ்க்கையில் மகா ஆனந்தத்தை அனுபவித்தவர்கள் சிலர் உண்டுதான். உதாரணமாக, அஷ்டாவக்ரர், புத்தர், கிருஷ்ணா, இயேசுநாதர் போன்றவர்களைக் குறிப்பிடலாம். அவர்கள் ஆனந்தத்தைப் பெற உள்முகமாகத் திரும்பினர்.

கிரேக்க ஞானி டாயோஜனீஸ் தன்னிடம் ஒரு பொருளும் வைத்திருக்கவில்லை. ஆடையும் அணியவில்லை. ஆனாலும் சந்தோஷமாக இருந்தார். ஒருமுறை அவரைச் சந்தித்த அலெக்சாந்தர் எப்பொருளும் இன்றி அவரால் எப்படி அவரால் மகிழ்ச்சியாக இருக்க முடிகிறது என்று கேட்டார். டாயோஜனீஸ் அந்தக் கேள்வியையே திருப்பிப் போட்டு எப்பொருளும் தன்னிடம் இல்லாததால்தான் மகிழ்ச்சியோடு இருப்பதாகப் பதிலளித்தார்.

மேலும், அவர் தன்னிடம் தண்ணீர் குடிக்க ஒரு குவளை மட்டும் இருந்ததாகவும், ஒருமுறை ஒரு நாய் ஆற்றுநீரை எந்த பாத்திரமும் இல்லாமல் அப்படியே குடிப்பதைப் பார்த்து, தானும் குவளையை எறிந்துவிட்டு கைகளால் நீர் எடுத்துப் பருகப் பழகிய தாகத் தெரிவித்தார். கடைசி உடைமையையும் விட்டொழித்தார்.

மனம் நெகிழ்ந்த அலெக்சாந்தர், "நான் உங்களுக்கு ஏதாவது செய்ய வேண்டுமா? உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதில் மகிழ்ச்சி அடைவேன்," என்றார்.

"எனக்குத்தான் எதுவும் தேவையில்லையே. பிறகு எப்படி நீ எதுவும் செய்துகொடுக்க முடியும்? நதிக்கரையில் மணலில் படுத்து வெயில் காய்கிறேன். நீ வந்து நிற்பதால் என்மீது வெயில் சரியாகப்படவில்லை. நீ அப்பால் சென்றால் போதும். அதுவே பெரிய உதவியாகும்," என்றார் டாயோஜனீஸ்.

"சரி, செய்கிறேன், இப்போது நான் உலகநாடுகளை வெல்லப் புறப்படுகிறேன். திரும்பியபின் என் கடைசி லட்சியமாக

வாழ்க்கையை அமைதியாக, ஓய்வாகக் கழிக்கப் போகிறேன்," என்று அலெக்சாந்தர் தெரிவித்தார்.

டாயோஜனீஸ் சிரித்தார். "என்னை நன்றாகப் பார். நான் சாந்தமாக உள்ளேன். ஓய்வாகவும் உள்ளேன். ஆனால் நான் எந்த நாட்டையும் வென்றவனில்லையே," என்றார்.

சும்மா இருப்பதுவே சுகம்!

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்:

க்வ ப்ரமாதா ப்ரமாணம் வா க்வ ப்ரமேயம் க்வ ச ப்ரமா |
க்வ கிஞ்சித் க்வ ந கிஞ்சித்வா ஸர்வதா விமலஸ்ய மே || 292

க்வ விட்சேப: க்வ சைகாக்ரயம் க்வ நிர்போத: க்வ மூடதா |
க்வ ஹர்ஷ: க்வ விஷாதோ வா ஸர்வதா நிஷ்க்ரியஸ்ய மே || 293

க்வ சைஷ வ்யவஹாரோ வா க்வ ச ஸா பரமார்த்ததா |
க்வ ஸுகம் க்வ ச வா துக்கம் நிர்விமர்ஷஸ்ய மே ஸதா || 294

க்வ மாயா க்வ ச ஸம்ஸார: க்வ ப்ரீதிர்விரதி: க்வ ச வா |
க்வ ஜீவ: க்வ ச தத்ப்ரஹ்ம ஸர்வதா விமலஸ்ய மே || 295
க்வ ப்ரவ்ருத்திர் நிர்வ்ருத்திர் வர க்வ முக்தி: க்வ ச பந்தனம்|
கூடஸ்த நிர்விபாகஸ்ய ஸ்வஸ்தஸ்ய மம ஸர்வதா || 296
க்வ உபதேஷ: க்வ வா ஸாஸ்த்ரம் க்வ சிஷ்ய: க்வ ச வா குரு: |
க்வ ச அஸ்தி புருஷார்த்தோ வா நிருபாதே: ஸிவஸ்ய மே || 297

க்வ ச அஸ்தி க்வ ச வா ந அஸ்தி க்வ அஸ்தி ஏசகம் க்வ ச த்வயம் |
பஹுநாத்ர கிமுக்தேன கிஞ்சின்ன உத்திஷ்டதே மம || 298

அஷ்டாவக்ரர், ஜனகர் என்ற மாமனிதர்களின் உரையாடலைக் கேட்டோம். அந்த உரையாடலை புண்ணிய நீர்நிலையாகிய கங்கைக்கு ஒப்பிடலாம். அதில் மூழ்கிக் குளித்து நாம் தூய்மை பெற்றால் அந்தச் சிறப்பு கங்கைக்கே உரியது. அவ்வாறு நாம் தூய்மை பெறாவிடில் மொத்தத் தவறும் நம்முடையதாகவே இருக்கும்.

இந்த உரையாடலின் விளக்கம் நீண்ட பயணமாக அமைந்தது. அதில் நாம் பல மாதங்களாகத் திளைத்திருந்தோம். ஒரே விஷயத்தையேதான் அஷ்டாவக்ரரும் ஜனகரும் வெவ்வேறு விதமாகச் சொன்னார்கள். இதனால் முதல் முறை, இரண்டாம் முறை புரிந்துகொள்ளாதவன் இன்னொரு முறை கூறப்படும்போது புரிந்துகொள்ள வாய்ப்புக் கிடைக்கிறது. புதுப்புது விஷயங்களை அவர்கள் விவாதிக்கவில்லை. ஒரே விஷயத்தை யேதான் பல்வேறு கோணங்களிலிருந்து அறிமுகப்படுத்தினார்கள். அந்த அடிப்படை விஷயம் இரட்டைகளிலிருந்து எப்படியாவது விடுதலை பெறுதல் என்பதாகும். அப்போது மகாசுகம் கிடைக்கும்.

ஒருவன் உன்னைத் திட்டினான். நீ வருத்தப்பட்டாய். அப்படியானால் நீ உன் துக்கத்திற்கு அதை அடக்கக்கூடிய எஜமானனாக இருக்க முடியாது. அவன் திட்டுவதை நிறுத்தினால் நீ துக்கப்படுவதும் நின்றுபோகும். ஆனால் அவன் திட்டுவதை நிறுத்துவது உன் கையில் இல்லை.

ஒருவன் உன்னைத் திட்டி நீ வருத்தப்படாமல் இருந்தால்— அல்லது வருந்துவதோ, வருந்தாமலிருப்பதோ என் கையில் உள்ளது என்று தெரிந்துவைத்திருந்தால்,—நீ துன்பங்களை அடக்கக்கூடிய எஜமானன் ஆகிவிடுகிறாய். பிறகு உன்னை யாரும் ஆட்டிப்படைக்க முடியாது.

வாழ்க்கையில் ஒவ்வொன்றும் இரட்டைகளாகப் பிரிந்திருப் பதாகத் தோன்றுகிறது. ஆனால் அவை இரண்டு முகப்புகளே தவிர தனித்தனியாக இல்லை. இதை நீ கவனிக்க வேண்டும். அவற்றை இணைத்தே பார்க்க வேண்டும். இரவும் பகலும், வாழ்வும் சாவும், இன்பமும் துன்பமும் இரண்டையும் சமமான மனோபாவத்துடன் பார். இரண்டையும் ஒரே அலசாகப் பார்.

எதுவும் இரண்டல்ல, ஒன்றே இரண்டாகத் தெரிகிறது என்னும் பக்குவம் உண்டாக சாட்சி மனப்பான்மை தேவை. சுகத்தைப் பார். அந்த நேரத்தில் அதைப் பார்ப்பவனாக மட்டும் இரு. அதில் மாட்டிக் கொள்ளாதே. அதனுடன் ஒன்றிவிடாதே. 'நான் இப்போது சுகமாக உணர்கிறேன்' என்று வேண்டுமானால் சொல்லலாம். நீ பார்ப்பது உன்னைத் தொடக்கூடாது. கர்த்தாவாக இருக்காதே. அனுபவிப்பவனாக (போக்தாவாக) இருக்காதே.

இதேபோல் துன்பத்தையும் அணுகு. அதைப் பார்ப்பவனாக மட்டும் உன்னை நிலைநிறுத்து. கொஞ்சம் கொஞ்சமாக முயன்று உன் மையத்துக்கு வந்துவிடு. எதற்கும் தடுமாறாதவனாக ஆகு. சுகத்தாலும் துன்பத்தாலும் நடுக்க முறாத அந்த நடுவான நிலையில் நீ சத்தியத்தை அறியமுடியும்.

"ஓஷோ அவர்களே! அஷ்டாவக்ரர் தமது மகாகீதையை உபதேசிக்க, அதைக் காதால் கேட்ட மாத்திரத்திலேயே ஞானம் பெற்றார். இப்போது உங்கள் தொடர் சொற்பொழிவு முடிவடையும் நிலையில் எத்தனை பேருக்கு ஞானம் உண்டாகியிருக்கும்?" என்று ஒருவன் கேள்வி எழுப்பினான்.

ஒன்று மட்டும் என்னால் நிச்சயமாகக் கூறமுடியும். இந்தக் கேள்வியைக் கேட்டவன் இன்னும் ஞானம் பெறவில்லை என்பதுதான் அது! அவன் ஞானம் பெறுவதும் சிரமம். ஏனெனில் அவனது பார்வை மற்றவர்கள் மீது படிந்திருக்கிறது. உண்மையில் முயற்சி செய்து ஞானி ஆக முடியாது. நீ ஏற்கெனவே ஞானிதான். ஆனால் அதை அறியாதவனாக உறக்கத்தில் இருக்கிறாய். உனக்குள் ஞான நெருப்பு உள்ளது. அது தற்போது சாம்பலால் மூடப்பட்டுள்ளது. அதை ஊதிப் பறக்கடித்தால் போதும். அதற்கு உதவுவதுதான் என் சொற்பொழிவுகளின் நோக்கம்.

சத்குருவிற்கு ஒரு வேலைதான் உள்ளது. உனது ஞானத்தை மறைக்கும் சாம்பலை ஒருமுறை ஊதித்தள்ளும் வேலைதான் அவருக்கு. ஆனால் உன்னிடம் ஞான நெருப்பு உள்ளதையே ஒப்புக்கொள்ளாமல் பிடிவாதம் பிடித்தால் பிறகு உன் இஷ்டம். உன் விருப்பத்திற்கு மாறாக உன்னை யாரும் எழுப்ப முடியாது.

நீயே விரும்பினால் மிகவும் ஆழ்ந்து தூக்கத்திலிருந்தும் உன்னால் விழிக்க முடியும்.

உன் மனம் தூங்கும்போதே எப்போதெல்லாம் விழிப்பது என்று ஒரு திட்டம் வைத்திருக்கும். அதன்படி, இடியுடன் கூடிய மழை பெய்தாலும் தூக்கம் கலையாத அன்னை, கைக்குழந்தை சிறிது சிணுங்கினாலும் எழுந்துவிடுகிறாள். அவள் மனம் அவள் அறியாமலே எதற்கெல்லாம் எழுந்திருப்பது, எதற்கு எழுந்திருக்க வேண்டாம் என்று ஏற்கெனவே முடிவுகட்டியிருக்கிறது.

இங்கே இத்தனை பேர் திரண்டிருக்கிறீர்கள். எல்லோரும் தூங்கிவிடுவதாக வைத்துக்கொள்வோம். எவனாவது வந்து 'ராமா!' என்று கூப்பிட்டால், எல்லோரும் தொடர்ந்து தூங்குவீர்கள். கூப்பிட்ட குரல் யார் காதிலும் விழாது. ஆனால் உங்கள் நடுவில் ராமன் என்று ஒருவன் இருந்தால் அவனுக்கு மட்டும் அந்தக் கூப்பிடுதல் கேட்கும். அவன் உடனே, "யார் தொந்தரவு செய்யறது? என்ன விஷயம்?' என்று கேட்பான்.

'ராமா!' என்று கூப்பிட்டதும் அது அனைவருக்கும் கேட்டிருக்க வேண்டும் அல்லது ஒருவருக்கும் கேட்டிருக்கக் கூடாது. ஆனால் அங்கு ராமன் என்று ஒருவன் இருந்தால், அவன் தூக்கத்திலும் தன் பெயர் காதில் விழுந்தால் மட்டும் விழிப்பது என்று தன்னை அறியாமலேயே முடிவுகட்டியிருப்பான். ஒருவன் விரும்பினால் மட்டுமே சாதாரண விழிப்பு ஏற்படுவதுபோல், ஆன்மிக விழிப்பிற்கும் ஆர்வம் வேண்டும்.

நீ காலையில் ஐந்து மணிக்கே எழுந்திருப்பதை விரும்பவில்லை. ஆனால் உன் மனைவி சீக்கிரம் கோயிலுக்குப் போவதற்காக ஐந்து மணிக்கே விழிக்க வற்புறுத்துகிறாள். அலாரம் வைத்துக்கொள்ளச் சொல்கிறாள். நீ சீக்கிரம் எழ மனமில்லாமலே அலாரம் வைக்கிறாய். ஆகவே காலையில் அலாரம் அடிப்பது உன் காதில் விழாது அல்லது சுயநினைவு இல்லாமலே கையை நீட்டி அலாரத்தை நிறுத்திவிடுவாய். சாதாரண விழிப்பானாலும், ஆன்மிக விழிப்பானாலும் விழிப்பது குறித்து நீதான் முடிவெடுக்க வேண்டும்.

நீ விழிக்க விரும்பினால் அற்ப நிகழ்ச்சியும் போதும் அதைத் தூண்டிவிட. உலர்ந்த இலை விழுந்தால்கூட அது வர விருக்கும் மரணத்தை நினைவூட்டும். நீ விழிக்க விரும்பாவிடில் வாசலில் பாண்டு வாத்தியம் முழங்கினாலும் பலனில்லை.

ஒரு நண்பர் பேசுகையில், "உங்கள் சொற்பொழிவு முடி வடைய உள்ளது. பயணம் இறுதிக் கட்டத்தை நெருங்கிவிட்டது. இதுவரை இங்கே எத்தனை பேர் ஞானம் பெற்றிருப்பார்கள்?" என்று கேட்டார். தன்னைப் பற்றி ஆராயாமல் மற்றவர்களைப் பற்றி விசாரிப்பது மனமுதிர்ச்சியின்மையைக் காட்டுகிறது. மேலும், மற்றவர்களுக்கு ஞானம் கிடைத்துவிட்டதா என்று எப்படி அறிவது?

பலருக்கு ஞானம் கிடைத்தது என்று தெரிந்தால் தனக்கும் கிடைக்கும் என்ற நம்பிக்கை கேள்வி கேட்டவருக்கு உள்ளது. ஆனால் ஏற்கெனவே ஞானம் பெற்றவர்களை ஏன் மறந்து போனார்? கிருஷ்ணர், புத்தர், ராமன், கபீர்தாசர், குரு நானக் போன்ற பலர் ஞானம் பெற்றுள்ளனரே. இந்த எடுத்துக்காட்டுகள் போதுமே. உனக்கு ஞானம் கிடைத்தால்தான் ஞான விழிப்பு என்று ஒன்றுண்டு நம்புவாயா?

அனுபவத்தின் மூலம்தான் நம்பிக்கை வரும். வேறு உபாயம் இல்லை. நூற்றுக் கணக்கானவர்கள் தேன் இனிமை யானது என்று சொன்னால், ஒருவன் தானே அதைப் பருகிப் பார்த்தால் அதன் சுவையை அறிய முடியும். அந்த அனுபவம் இல்லாமல் தேனீயால் கொட்டப்பட்டவன் தேன் கசப்பு என்பான்.

பல புனிதர்கள் கடவுளை தரிசித்திருப்பதாகக் கூறியுள்ளனர். உனக்கோ கற்சிலைதான் தெரிகிறது. நீ எதைப் பார்க்க முடியுமோ அதுதான் உன் கண்ணில் படும். மற்றவர்களின் அனுபவங்களைப் பற்றி கவலைப்படாதே. உன்னை பற்றி சிந்தனை செய். ஆனால் நீயோ வேறு சிலருக்குக் கிடைத்த தெய்வ தரிசனம் உனக்கு ஏன் கிடைக்கவில்லை என்று குழப்பிக்கொள்கிறாய்.

மற்றவர்களை உரைகல்லாக வைத்துக்கொள்வது சரியன்று. உன் வீடு எரிகிறது. அதே வரிசையிலுள்ள மற்ற சில வீடுகளும் எரிந்தால் உன் மனம் சற்று ஆறுதலடைகிறது. உன் வீட்டில் திருடியவன் அன்றே வரிசையாகப் பல வீடுகளில் திருடியிருந் தால் உன் அதிர்ச்சி தணிகிறது. இதேபோல் மற்றவர்களுக்கு ஞானம் கிடைக்கவில்லை என்பது தெரியவந்தால், நீ போர்வையை இழுத்துப் போர்த்தித் தூங்கிவிடுவாய். 'நாம் அப்படி ஒன்றும் மோசமில்லை' என்று ஆறுதல் பெறுவாய்.

கடவுள் எல்லோருக்கும் கிடைத்துள்ள பொதுச் சொத்து ஆனவர். நீ இந்த விஷயத்தை அடையாளம் கண்டுகொண்டிருந் தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; இதை உபயோகப்படுத்தினாலும் சரி, உபயோகிக்காவிட்டாலும் சரி, அதெல்லாம் உன்னைப் பொறுத்த விஷயம்.

ஒரு சுல்தான் அரண்மனைக் கோமாளிக்கு ஒரு குதிரையைப் பரிசளித்தார். அது சோனிக் குதிரை. இழுத்து-இழுத்து நடக்கும். உடனே கோமாளி குதிரைமேல் ஏறி அதை நடக்குமாறு தட்டிக்கொடுத்தான். குதிரை இலேசாக அசைந்து, மெதுவாக ஒரு காலடி எடுத்துவைத்தது. சுல்தான், "எங்கே கிளம்பிவிட்டாய்?" என்று கேட்டார். அதற்குக் கோமாளி, "வெள்ளிக்கிழமைத் தொழுகைக்காகக் கிளம்புகிறேன்," என்றான். அன்றோ திங்கள் கிழமைதான். சுல்தான் அதை நினைவூட்டியதும் கோமாளி. "இந்தக் குதிரையின் வேகத்துக்கு இப்போதே கிளம்பினால்தான் பக்கத்துத் தெருவில் உள்ள பள்ளிவாசலுக்கு ஐந்து நாளில் போய்ச்சேர முடியும்," என்று காரணம் தெரிவித்தான்.

அஷ்டாவக்ரர் கடவுளின் கோயில் அவ்வளவு தொலைவில் கூட இல்லை என்றும், அது உனக்குள்ளே இருக்கிறது என்றும் தெரிவிக்கிறார். அங்கு போய்ச்சேரச் சிறிது நேரம்கூட ஆவதில்லை. கண்ணை மூடி தியானித்து உள்ளே சிந்தனையைச் செலுத்தியதும் இறை உணர்வு உனக்குக் கிடைத்துவிடும். ஜனகருக்குக் கிடைத்தது. எனக்கும் கிடைத்தது. நீ எங்களைவிட எள் அளவும் தாழ்ந்தவனில்லை. உலகப் பற்று காரணமாக நீ சிந்தனையை உள்முகமாகச் செல்லவிடாமல் தடுப்பதால் உனக்கு இறையுணர்வு கிடைப்பதில் தடங்கல் ஏற்பட்டுள்ளது.

சிலர் என்னிடம், "தியானம் பழக வேண்டியது அவசியம் தான். அதற்கு இன்னமும் நாளிருக்கிறது. அப்படியொன்றும் எங்களுக்கு வயதாகிவிடவில்லையே. வயதானபின் பார்த்துக் கொள்ளலாம்." என்று தள்ளிப்போடுகின்றனர். ஆனால் கிழவனும் தான் கிழவனாகிவிட்டதாக நினைப்பதோ, கூறுவதோ அபூர்வம். தான் மரணத்தை நெருங்குவதை உணர்ந்தும் அவன் தனக்கு நீண்ட ஆயுள் எஞ்சியுள்ளதாக நினைக்கிறான். ஆகவே கடவுள் விஷயத்தை மேன்மேலும் தள்ளிப்போடுகிறான். இந்த விஷயத்தில் நீதான் முடிவுசெய்ய வேண்டும். நீதான் எஜமானன். உனக்கு தீவிர விருப்பமிருந்தால் கடவுளை இப்பொழுதே அடையலாம். அவ்வாறு உனக்கு விருப்பமில்லாவிடில் எந்த சத்குருவும் உனக்குக் கடவுளை எடுத்துக் கொடுக்க முடியாது.

ஜனகரால் ஞானம் பெற முடிந்தது. அவர் குருவின் உபதேசத்தில் இடைஞ்சல் செய்யவில்லை. அஷ்டாவக்ரர் சொன்னார், ஜனகர் கேட்டார். ஜனகர் நடுவில் குறுக்கிட்டு விளக்கம் கேட்கவில்லை. குருவின் சொற்களில் அவர் அவநம்பிக்கை கொள்ளவில்லை. குருவிடம் ஜனகருக்கு அந்த அளவிற்கு பக்தி இருந்திருக்கும். குருவின் முன்னிலையில் இருப்பதே அவருக்குப் போதுமானதாக இருந்தது. குரு எவராக இருப்பினும், சீடன் எவனாயினும், அந்தச் சீடன் தான் கேட்க விரும்புவதை மட்டுமே கேட்பான்.

**ச**ந்துலால் என்பவரை கார் மோதிவிட்டது. மோதியவர் அவரை காரில் ஏற்றிக்கொண்டு மக்கள் நடமாட்டமில்லாத பகுதியில் இறக்கிவிட்டுப் போய்விட்டார். அடிபட்டவர் தடுமாறிச் சென்று காவல் நிலையத்தில் புகார் கொடுத்தார். காரை ஓட்டியவர் முல்லா நஸ்ருத்தீன்தான்!

வழக்கின்போது நீதிபதி அவரை, "காரில் எடுத்துக்கொண்டு போயும் மருத்துவமனைக்குப் போகாமல் ஏன் பாதைக்கு ஒதுக்குப்புறமான இடத்தில் விட்டுச் சென்றாய்?" என்று கேட்டார். நஸ்ருத்தீன் அதற்கு, "ஐயா, விபத்து நடந்த இடத்தின் எதிரே ஒரு விளம்பரப் பலகை வைக்கப்பட்டிருந்தது. அதில் 'சாலையிலிருந்து சாவை ஒதுக்குங்கள்' என்று போட்டிருந்தது (Keep death away

from the road). கார் மோதியதால் இவர் செத்துப்போவார் என்று நினைத்தேன். நான் சாலை விதிகளை மதிப்பவன். ஆகவே இவர் சாலையில் சாகக்கூடாது என்று சற்றுத் தள்ளி இவரை விட்டுச்சென்றேன்,'' என்று விளக்கம் சொன்னார்.

மனிதன் தான் படிக்க விரும்புவதைத்தான் படிப்பான். அதாவது, தன்னைப் படிக்கிறான். தன்னைக் கேட்கிறான், தனக்குரிய விளக்கம் தருகிறான். என் சொற்பொழிவு உண்மையி லேயே உன் காதில் விழுகிறதா? எத்தனையோ பேச்சுகளும் கேட்கிறதல்லவா? அவற்றைக் கடந்து என் பேச்சு உன்னைச் சென்றடையுமா? நீ அடைய விடுவதில்லை. நடுவில் எத்த னையோ படுதாக்களைத் தொங்கவிட்டிருக்கிறாய். அவற்றைக் கடந்து என் சொற்கள் உன்னை அடைந்தாலும் அதற்குள் அவை உருமாறி, அர்த்தம் மாறிப்போயிருக்கும்.

ஆகவே என் பேச்சால் உனக்குள் ஆன்மிகப் புரட்சி வெடிப்பதில்லை. மருந்தில் மிகையாகத் தண்ணீர் கலந்தால் பயனற்றுப் போகிறது. குருவின் பேச்சை இடைமறிக்க ஒரு படுதாவும் இல்லாமல் நீ உன் இதயத்தைத் திறந்துகேள். தாகமெடுத்தவன் தண்ணீர் குடிப்பதுபோல் குரு உபதேசத்தை நீ ஆர்வத்துடன் பருகு.

இந்தக் கடைசிப் பகுதியில் ஜனகர் சொல்வதெல்லாம் ஏற்கெனவே அஷ்டாவக்ரர் வேறுவிதமாகக் கூறியதுதான். ஆகவே ஜனகரின் உரை அரைத்த மாவையே அரைத்தது போலாகாது. குருவின் சொற்களில் தமது உயிர்சக்தியைப் பொருத்துகிறார்.

**ஓ**ர் அரசருக்கு மூன்று பிள்ளைகள். தனக்குப் பின் யாரை அரசனாக நியமிப்பது என்பதை முடிவு செய்ய அவர் ஒரு போட்டி வைத்தார் ஒவ்வொருவனுக்கும் ஒரு மூட்டை நிறையப் பூக்களின் விதை தந்தார். தான் திருத்தலப் பயணம் செல்வதாகவும், ஓராண்டு கழித்து வருவதாகவும் தெரிவித்தார் “அப்போது இந்த விதைகளைத் திரும்பப் பெற்றுக்கொள்வேன்,'' என்றார்.

ஒரு மகன் விதைகள் தொலையக் கூடாது, திருட்டுப்போகக் கூடாது என்றும் பத்திரமாக அவற்றைப் பாதுகாக்க வேண்டும்

என்றும் கருதி இரும்புப் பெட்டகம் ஒன்றில் விதை மூட்டையை வைத்து, பெரிய பூட்டுகளை மாட்டிப் பூட்டிவிட்டான். தான் கெட்டிக்காரத்தனமாக நடந்துகொண்டதாக நினைத்தான். பல சந்தர்ப்பங்களில் கெட்டிக்காரத்தனம் முட்டாள்தனத்தில் போய் முடிகிறது. விளைவு? விதைகள் காப்பாற்றப்பட்டும் அவை அழுகிப் போயிருந்தன. அவற்றில் பூஞ்சை படர்ந்திருந்தது. அவற்றிலிருந்து நாற்றம் கிளம்பியது. அவை பயன்படாத குப்பையாகிவிட்டன. தந்தையிடம் திருப்பித்தர ஒரு நல்ல விதைகூட மிஞ்சவில்லை.

இரண்டாம் மகன் விதை மூட்டையை வீட்டில் வைத்துப் பாதுகாப்பது தொல்லை பிடித்த விஷயம் என்று நினைத்தான். விதை மூட்டையேத் தற்போது விற்றுவிட்டு, பணமாகச் சேமித்துவைக்கலாம் என்றும், தந்தை ஊர் திரும்பும்போது அந்தப் பணத்திற்கு புதிய விதைகள் வாங்கி அவரிடம் திருப்பிக் கொடுத்துவிட நினைத்தான். பணத்தைப் பராமரிப்பதும் சுலபமான வேலை. ஆனால் அவன் தந்தை திரும்பி வந்தபோது உரிய பருவகாலமாக இல்லாததால் பூக்களின் விதைகள் மூட்டையளவில் கிடைக்கவில்லை. பணத்தைத் தந்தையிடம் கொடுத்ததற்கு அதை அவர் ஏற்கவில்லை.

மூன்றாவது மகன் விதைகளை அலட்சியப்படுத்தவில்லை. விதை என்பது வளர்ச்சிக்கான வாய்ப்பு என்று அவன் அறிந்திருந் தான். விதை என்பது பூவாக மலர்வதை நோக்கிய பயணமாகும். அதை ஒரு ஜடப்பொருளாகக் கருதக்கூடாது. கூழாங்கல் ஒரு ஜடப்பொருள், உயிரற்றது. அது வளர முடியாது. அதன் தோற்றமும் வளர்ச்சியும் ஒன்றேதான். விதை உயிரோட்டமுள்ளது.

ஆகவே அந்த மகன் விதைகளைத் தோட்டத்தில் விதைத்தான். தந்தை திரும்பியபின் மலர்த் தோட்டத்தைப் பார்த்து மகிழ்ந்தார். அந்தச் செடிகளின் மூலம் மூட்டைக் கணக்கில் விதைகள் கிடைக்க வாய்ப்பு இருப்பதைக் கவனித்தார். அவர் அறிவிப்புச் செய்தார். நாட்டின் ஆட்சியை மூத்த மகனிடம் ஒப்படைத்தால், நாட்டின் வளர்ச்சி பூட்டப்பட்டு, ஒரு கட்டத்தில் அழியும். இரண்டாம் மகனிடம் நாட்டைக் கொடுத்தால் அதை

நல்ல விலைக்கு விற்றுவிடுவான்! மூன்றாம் மகனோ நாட்டைப் பராமரிப்பான்; வளர்ச்சிக்கு உதவுவான்; எதிர்காலச் சேமிப்பும் செய்வான். ஆகவே அவனே எனக்கு அடுத்தபடியாக அரசனாக இருப்பான்.''

மனிதன் விசித்திரமானவன். குப்பைகளை நினைவில் சேமிக்கிறாய். இருபது ஆண்டுகளுக்குமுன் உன்னை ஒருவன் திட்டி யதை நீ என்றும் மறப்பதில்லை. அதைப் பத்திரமாக நினைவில் பாதுகாக்கிறாய். அந்தக் காயத்தை நீ ஆறவிடுவ தில்லை; பசுமையாக வைத்துக்கொள்கிறாய்.

ஆனால் அஷ்டாவக்ரர் போன்றவர்களின் சொற்களை நீ காது கொடுத்துக் கேட்பதில்லை. அப்படிக் கேட்டாலும் அதை மறந்துவிடுகிறாய். இருபதாண்டுகள் முன் உன்னைத் திட்டியது உன் நினைவில் உள்ளது. இரண்டு மணி நேரம் முன் நீ கேட்ட நல்லுபதேசம் நினைவில் பதியவில்லை!

'முழுமையாகத் தூய்மையாகிவிட்ட எனக்கு, அறிகின்றவன், அறிவதற்கான சாதனங்கள், அறிய வேண்டிய விஷயம், ஞானம் முதலியவை எதுவும் சிறிதளவும் முக்கியமாக மிஞ்சியிருக்க வில்லை.' **(சுலோகம் 292)**

பண்டிதர்கள் ஞானத்தின் அங்கங்களெனப் பின்வருவன வற்றைக் கூறுகிறார்கள்:

ப்ரமா - ஞானம்

ப்ரமாண் - எதன் மூலம் ஞானம் கிடைக்கிறதோ அது

ப்ரமாதா - எவர்மீது ஞானத்தின் தாக்கம் படுகிறதோ அவர்

ப்ரமேய - எவர் பொருட்டு அந்தத் தாக்கம் நிகழ்கிறதோ அவர்

ஜனகர் தன் விஷயத்தில் இவை மிஞ்சியிருக்கவில்லை என்கிறார். அறிகின்றவனும் இல்லை, அறியப்பட வேண்டியதும் இல்லை என்கிறார். பார்ப்பவனும் இல்லை, பார்ப்பதற்குக் காட்சியுமில்லை.

ஜென் சத்குரு ரிஜாயீயிடம் ஓர் அரசர் வந்து சத்தியத்தை எதன் மூலம் அடைவது என்று கேட்டார். பல முறை கேட்டும் ரிஜாயீ மௌனமாகவே இருந்தார். அரசர் அமைச்சரிடம் இவருக்குக் காது கேட்காதா என்று விசாரித்தார். அப்போது துறவியே, "மன்னா, உன் கேள்விக்கு மௌனமாக இருப்பதுதான் பதில்," என்றார். அரசர் புரியவில்லை என்றதும் துறவி மணலில் 'தியானம்' என்று பெரிய எழுத்தில் எழுதினார்.

ஜனகர் அறிகின்றவனும் அறியப்படுவதும் கிடையாது என்கிறார். ஆனால் சாதாரணமாக ஒவ்வொருவனும் தனக்கு எல்லாம் தெரியும்போல் நடந்துகொள்கிறான். 'நான் ஒரு முட்டாளுங்க' என்று சொல்கின்றவன் எவனாவது உண்டா? "கடவுள் உண்டா?" என்று உன்னை ஒருவன் கேட்கிறான். "ஆமாம், உண்டு," என்கிறாய். ஆனால் இதுபற்றி உனக்குத் துளியும் தெரியாதே! நீ சொல்வதை வலியுறுத்தக் கொல்லவும் கொல்லப்படவும்கூட தயாராக இருக்கிறாய்.

என் ஊரில் நாட்டு வைத்தியர் ஒருவர். அவர் மருந்து கொடுப்பதுடன் 'உண்மையே பேசு. நோய் வராது. இருக்கும் நோயும் போய்விடும்' என்பார். இதனால் ஊரில் அவருக்கு மிகவும் மரியாதை. நான் ஒரு நாள் குறும்பாக அவரிடம் "கடவுள் உண்டா என்று கேட்டேன். "ஆமாம், உண்டு," என்று சொன்னார். "நீங்கள் உண்மைதான் சொல்கிறீர்களா?" என்று மடக்கினேன். அவர் ஆடிப்போய்விட்டார்.

"என்னைக் கொஞ்சம் யோசிக்க விடு," என்று வேண்டினார்.

"கடவுள் உண்டென்று நிச்சயமாகத் தெரியும் என்றால் அப்படியே சொல்லுங்கள். நானும் உங்களை விட்டுவிடுகிறேன். கடவுள் உண்டா என்று தெரியாவிடில் ஒப்புக்கொள்ளுங்கள். எல்லோரையும் உண்மை பேசச் சொல்லிவிட்டு, உங்களுக்குத் தெரியாத ஒன்றை உண்டு என்று சொல்வது பொய்யின் வகைதானே," என்று வாதம் புரிந்தேன்.

கடவுள் உண்டா, இல்லையா என்பது தனக்குத் தெரியாது என்று உண்மையை ஒப்புக்கொள்பவன் உண்மை பேசியதற்காக

என்றாவது ஒருநாள் கடவுளை அடையக்கூடும். ஆனால் கடவுளைப் பற்றித் தெரியாதபோது, கடவுள் உண்டு என்று பொய் சொல்பவன் என்றும் அவரை அடைய முடியாது.

எவர் என்ன கேட்டாலும் ஏதாவது பதில் சொல்வது நமக்கு இயல்பாக உள்ளது. தெரியாத விஷயமாயினும் ஏதாவது பதில் கூறாவிடில் மக்கள் நம்மை முட்டாள் என்று நினைப்பார்களே என்று அஞ்சுகிறோம். கடவுள் உண்டா என்று கேட்டதற்கு புத்தர் பதிலே சொல்லவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எந்தப் பதில் கொடுத்தாலும் அது தவறாக இருக்குமென்றும், அது தவறாகப் புரிந்துகொள்ளப்படும் என்றும் புத்தர் அறிந்திருந்தார். 'கொஞ்சம் அறிந்துள்ளேன்-கொஞ்சம் அறியவில்லை என்று சந்தேகமாகவும் சொல்ல முடியாத நிலை.

நீ ஒருவரிடம், "உங்கள் மீது எனக்கு மிகுந்த அன்பு உண்டு," என்று சொல்கிறாய். இது தவறான அறிவிப்பு. அன்பு என்பது மிகுதியாக, குறைவாக என்றெல்லாம் இருக்குமா? அன்பு உண்டு அல்லது அன்பு இல்லை என்னும் இரண்டு நிலைகளைத் தான் புரிந்துகொள்ள முடியும்.

ஆகவே ஜனகர், 'நான் கொஞ்சம் ஞானம் பெற்றேன்' என்றோ 'கொஞ்ச ஞானம் பெறவில்லை' என்றோ அறிவிக்க வில்லை. அன்பைப் போலவே ஞான்மும் அளவுகளுக்கும் ஒப்பிடுதலுக்கும் அப்பாற்பட்டது. ஒப்பிடுவதற்கு இரண்டு அம்சங்கள் என்று எதுவும் பிரிந்திருக்கவில்லை.

**உனது ஆதரவு இருக்கும்வரை**
**தலைகள் என்றும் வணங்கும் என்னை**
**நீ சித்தி, நீ சக்தி**
**நீ தியாகம், நீ பற்று**
**வணக்கம் நீ, வணங்கப்படுபவன் நீ**

**கவிதையும் நீ, உரைநடையும் நீ**
**உனது கை என் தலை மீதெனில்**
**எனக்கு அச்சம் எதிலுமில்லை**
**பாடலும் நீ, அதன் பொருளும் நீ**
**ஞானமும் நீ, அதன் பொருளும் நீ**
**பகலும் நீ, இரவும் நீ**

**தியானமும் நீ, தியானிப்பதும் உன்னையே**
**சரணமும் நீ, சேரும் இடமும் நீ**
**தானமும் நீ, யாசகமும் நீ**
**விருப்பம் நீ, திருப்தியும் நீயே**

மிஞ்சுவது ஒன்றே, ஒருவனே. அந்த ஒன்றை பக்தன் பகவான் என்கிறான். அன்பன் பரமாத்மா என்கிறான். ஞானி சூனியம், பூரணம், சத்தியம் என்கிறான். ஜனகரின் மொழியின் ஞானியின் மொழி. மேலேயுள்ள பாட்டு பக்தனின் மொழி.

'நான் செயல்களற்றவன். ஆகவே சிந்தனைத் தடுமாற்றங்கள் இல்லை. நான் மனத்தைக் குவிக்க வேண்டியதும் இல்லை. எனக்கு ஞானம்-அறியாமை இரண்டும் இல்லை. சோகமும் இல்லை, சுகமும் இல்லை.' **(சுலோகம் 293)**

ஜனகர் தன்னைச் செயல்களற்றவன் என்கிறார். மனத்தை ஒருமுகப்படுத்தும் வேலைகூட செய்யவில்லையாம். எண்ணங் களே இல்லாத நிலையில் ஞானம் எப்படி உதிக்கும்? ஆனால் ஜனகர் தான் ஞானியும் இல்லை, மூடனும் இல்லை என்று அறிவிக்கிறார். சாக்ரடீஸ் முதலில் தன்னை ஞானி என்றார். பிறகு தன்னை அறிவிலி என்றார். ஜனகர் தான் இரண்டும் இல்லை என்கிறார். ஏனென்றால் அறிவதற்கு ஏதொன்றும் இல்லை; அறியாமல் விட்டுவைக்கவும் எதுவுமில்லை.

'நான் சிந்தனைகளற்றவனாக உள்ளேன். எனக்கு உலகியலும் இல்லை. அதன் எதிர்நிலையும் இல்லை. ஆகவே சுகமும் துன்பமும் கிடையாது.' **(சுலோகம் 294)**

ஜனகர் தன் மனத்தில் சிந்தனைகள் எழுவதில்லை என்கிறார். எல்லாம் சூனியம். எங்கும் சாந்தம். மனக்கடலில் ஓர் அலையும் கிடையாது. அவர் தனக்குள் லயித்து அமர்ந்துள்ளேன் என்கிறார் மனம் முக்தியடைந்த நிலை இது (no-mind). சலனமெல்லாம் நீங்கிய நிலை.

இந்த சுலோகத்தில் வ்யவஹார, பரமார்த்த என்னும் தத்துவ இயல் சொற்கள் இரண்டு வருகின்றன. நடைமுறை வாழ்க்கையின் அடிப்படையில் உலகம் உண்மையானது. ஆன்மிகக் கண்ணோட்

டத்தில் உலகம் ஒரு தோற்றம், பிரமை (illusion). ஐரோப்பிய தத்துவ அறிஞர் பெர்க்லியும் நம் ஆதிசங்கராச்சாரியார் போலவே உலகைப் பொய்த் தோற்றமாக (மித்யா) காண்கிறார். பொருட்கள் இல்லை, அவை பற்றிய எண்ணங்கள்தாம் உள்ளன என்கிறார்.*

இது சம்பந்தமாக வேடிக்கைக் கதை ஒன்றுண்டு. அவர் பிரபல இலக்கியவாதி டாக்டர் சாமுவேல் ஜான்சனுடன் ஒருமுறை உலாவச் சென்றார். அவர் தான் ஒரு நூல் எழுதியுள்ளதாகவும், அதில் பொருட்கள் எனப்படுபவை உண்மையில் இல்லை என்றும், அவற்றைத் திடப்பொருட்களாகக் கருதும் நம் எண்ணங்கள் மட்டுமே உண்மையில் உள்ளன என்றும் நிரூபித்துள்ளதாகத் தெரிவித்தார்.

டாக்டர் ஜான்சன் ஒரு கல்லை எடுத்து பெர்க்லியின் கால் மீது எறிந்தார். காயம் உண்டாகி ரத்தம் கசிந்தது. பெர்க்லி தன் காலைப் பிடித்தபடி உட்கார்ந்துவிட்டார். ஜான்சன் சிரித்தார்.

"பொருட்களுக்கென தனியான இருத்தல் தன்மை கிடையா தென்றும், அவை வெறும் தோற்றமே என்று கூறினீர்களே. பிறகு எப்படி இந்தக் கல்லடியால் துடிக்கிறீர்கள்? ரத்தம் ஏன் வந்தது?" என்று கேட்டார்.

பெர்க்லி சொன்னது ஐரோப்பாவிற்குப் புதுமையாக இருந்தது. அவருக்குக் கிழக்கு நாடுகளைப் பற்றி ஒன்றும் தெரியாது. கிழக்கு இந்த 'தோற்றம்' என்னும் கண்ணோட்டம் மிக பழைமையானது. ஆதிசங்கரர் போலவே பௌத்தர்களும் உலகம் சத்தியம் இல்லை என்கின்றனர். உண்மையில் பிற்காலத்தில் வந்த சங்கரர் பௌத்தக் கொள்கையைத்தான் திருப்பிச் சொன்னார்.

ஒரு பிட்சுவை ஓர் அரசன் பிடித்து, "நீங்கள் உலகை அசத்தியம் என்கிறீரே. நிரூபியுங்கள்," என்று அதட்டினான். "நீங்கள் இதோ என் எதிரே உட்கார்ந்துள்ளீர்கள். பிறகு நீங்கள்

* Bishop George Berkeley (1685-1753). He did not believe that there exists any material substance external to the mind, but rather that objects only as collections of sensible ideas. The city of Berkeley in California is named for him.

இருப்பது உண்மையில்லை என்று எப்படி நிரூபிப்பீர்கள்?" என்று கேட்டான்.

அதற்கு பிட்சு, "கனவில் ஒருவன் என் எதிரே உட்கார்ந் திருப்பதைப் பார்க்கிறேன். ஆனால் கண் விழித்தபின் அவன் காணப்படவில்லை. நான் கனவு கண்டு அதில் அவன் வந்தானா அல்லது அவன் கனவு காண அதில் நான் வந்தேனா என்று எப்படி உறுதியாகக் கூறமுடியும்?" என்று திருப்பிக் கேட்டார்.

சுவாங்க்த்ஸூ என்னும் ஜென் துறவி கனவில் தாம் வண்ணத்துப்பூச்சியாக மாறிப் பறப்பதாகப் பார்க்கிறார். காலையில் கண்விழித்தபின் அவர் சிந்தனையில் ஆழ்ந்தார். சிறிது கலவரப்பட்டார். தான் கனவு கண்டு அதில் வண்ணத்துப் பூச்சியாக வந்தேனா அல்லது நான் உண்மையில் வண்ணத்துப் பூச்சியாக இருந்து அதன் கனவில் மனிதனாகத் தெரிந்தேனா என்று அவர் குழப்பமடைகிறார்!

ஒன்றை அசத்தியம் என்று சொன்னாலும், மாயை என்று சொன்னாலும் அதுவும் இருக்கத்தான் செய்கிறது. கனவு அல்லது கனவுபோல் என்றாலும் கனவும் அது நீடிக்கும்வரை இருக்கத் தானே செல்கிறது.

சமாதி நிலையிலும் ஒரு விழிப்பு உண்டு. அப்போது கடவுளுடன் தொடர்பு ஏற்படுகிறது. உலகம் காணாமல் போய்விடுகிறது. தினமும் நீ தூங்க ஆரம்பித்ததும் மலை, மரம், மிருகங்கள், பறவைகள், கணவன், மனைவி, பிள்ளைகள் எல்லாம் காணாமல் போகின்றன. கனவில் அதே கணவன், மனைவி, பிள்ளைகளோ அல்லது புதியவர்களோ தென்படலாம். கனவில் நீ வேறு தொழில் புரியலாம். காலையில் கண்விழித்ததும் இவை மறைந்துபோய் முதலிலிருந்த சூழ்நிலை திரும்பிவருகிறது.

தியானம் செய்பவர்கள் இதேபோல் ஒரு விழிப்பு சமாதிநிலையில் ஏற்படுவதாகச் சொல்கிறார்கள். அந்த சமயம் அனைத்து எண்ணங்களும் அமைதியாகிவிடுகின்றன. அந்த விழிப்பின்போது உலகம் ஒரு கனவுத் தோற்றம் என்னும் உணர்வு உதிக்கிறது. கடவுள் முன்பு தோற்றமாகக்கூட தெரியாதவர் சமாதியில் சத்தியமாகத் தெரிகிறார்.

'முழுமையாக தூய உருவம் படைத்த எனக்கு மாயையோ, உலகமோ, அன்போ, அலட்சியமோ, ஜீவன், பிரம்மம் என்றெல்லாம் எதுவும் கிடையாது.' **(சுலோகம் 295)**

ஜனகர் எல்லாவற்றையும் மறுத்தபடியே செல்கிறார். இது பரம அத்துவைத நிலையைக் காட்டுகிறது. அத்துவைதத்தில் இரண்டு உள்ளது ஒப்புக்கொள்ளப்பட்டு அவை ஒன்றெனக் கூறப்படும். ஜனகரின் பரம அத்துவைதத்தில் அந்த இரண்டுமே கூட இல்லாமல் போய்விடுகின்றன. ஆத்மா-பரமாத்மா வேறுபாடுகூட ஜனகர் ஏற்கவில்லை.

தனது என்று எதையும் கருதாதபோது எதன் மீது அன்பு செலுத்துவது? எதை உதறித் தள்ளுவது? எதைப் பிடித்துக் கொள்வது? எதை விடுவது? எதை அனுபவிப்பது? எதை தியாகம் செய்வது? மேலும், தன்னைத் தவிர உலகில் வேற எதுவும் கிடையாதே.

**யாருக்கும் சொந்தமாய் வீடில்லை இங்கே**
**வாழ்க்கை என்னும் சத்திரத்தில்**
**ஒரே மாதிரி சூழல் இல்லை**
**தென்றல் உண்டு புயலும் வீசும்**
**பருவகாலங்கள் மாறி வரும்**
**வெயில் உண்டு, மழை-குளிரும் உண்டு**
**லாபம்-நஷ்டம், இன்பம்-துன்பம்**
**வெற்றியும் தோல்வியும் எல்லைக்குள்**
**புகழும் பழியும் விதியின் கையில்**
**வாழ்வுடன் சாவு நிச்சயம் உண்டு**
**அவன்தான் செய்கிறான் ஆக்கல்-அழித்தல்**
**அவன்தான் வளர்க்கிறான் தேய்க்கிறான்**
**உலகைப் படைத்தவன் உன்னதக் கலைஞன்**

இங்குள்ள எதுவும் நமக்கோ, வேறு யாருக்குமோ சொந்தமில்லை. எல்லாமும் அந்த ஒருவனுடையது. நான்-நீ என்னும் வேறுபாடு கற்பனையானது, சுமத்தப்பட்ட ஒன்று. அவன் என்னிலும் உள்ளான், உன்னிலும் உள்ளான் என்பதால் நான்-நீ என்னும் வித்தியாசம் நீங்கியதும் அங்கே அன்பும் இல்லை, வெறுப்பும் இல்லை.

'நான் எப்பொழுதும் என்னில் நிலைபெற்றவனாக, பிரிவுகள் இல்லாதவனாக உள்ளேன். எனக்கு எதிலும் 'ஈடுபாடும்' பற்றும் இல்லை. நான் எதையும் தவிர்த்து ஒதுக்கவுமில்லை. நான் கட்டுப்படுதலுக்கும் கட்டுப்பாடு நீங்கிய முக்திக்கும் அப்பாற் பட்டவன்.' **(சுலோகம் 296)**

ஜனகர் இங்கே இரட்டைகளின் பாதிப்பிலிருந்து நீங்கிவிட்டதைச் சொல்லுகிறார். பாபம்-புண்ணியத்தையும் அவர் கடந்துவிடுகிறார். ஏனெனில் அவர் தன்னை எந்தச் செயலையும் தான் புரிபவனாக (கர்த்தாவாகக்) கருதவில்லை. அவர் சாட்சி மனப்பான்மை பெற்றுள்ளதால் இது சாத்தியப்படுகிறது.

மதத்தலைவர்கள் மக்களிடம் 'திருடாதே, தானம் செய், பிறரிடம் உள்ளதைப் பிடுங்காதே, உன்னிடம் உள்ளதிலிருந்து எடுத்துக்கொடு' என்று உபதேசிக்கிறார்கள். இது சாதாரணமான, பொதுப்படையான அறம். இதற்கும் மேலே சிறப்பு அறம் ஒன்றுள்ளது. அதன்படி, திருடவும் செய்யாதே; தானமும் செய் யாதே; செயல்புரிபவனாக உன்னை நினைக்காதே; நீ பாபியும் ஆக வேண்டாம்; புண்ணிய ஆத்மாவும் ஆகவேண்டாம்; நீ சாட்சியாகி விடு.

எதிலிருந்து விடுபடுவதும் சிரமம். கெட்ட பழக்கமாயின் அதை விடுவது மகாகடினம். எவ்வளவு உபாயம் செய்தாலும் சுலபத்தில் அப்பழக்கம் ஒழியாது. என் பேராசிரிய நண்பர் மூக்குப்பொடி பழக்கத்திற்கு அடிமையானவர். என்னுடன் சிறிது நேரம் பேசினாலும் அடிக்கடி பொடி போடுவார். பொடி போடாமல் தன்னால் வாழவே முடியாது என்று கூறுவார். நான் இதற்கு, "பொடிபோடாமல் நான் உயிர் வாழவில்லையா? உலகில் பெரும்பான்மை மக்கள் பொடிபோட்டா உயிர் வாழ்கிறார்கள்?" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "பொடி போடுவதால் எனக்குப் புதிய உற்சாகம் கிடைக்கிறது; புதிய பலம் பெறுகிறேன். இல்லாவிடில் என் வாழ்க்கை தளர்ந்துவிடும். பொடி போட்டு, தும்மல் போட்ட பின் மீண்டும் மலர்ச்சி பெறுகிறேன்," என்று எதிர்வாதம் புரிந்தார்.

பொடிப் பழக்கமே நீங்குவது சிரமம் என்றால் பாவச் செயலை எப்படித் தவிர்ப்பது? அது வராதபடி வாசல்கதவை அடைத்தால், புழைக்கடை வழியாக அது வந்துவிடுமே. நீ தானம் செய்து புண்ணியம் சம்பாதிக்க விரும்புகிறாய். அவ்வாறு தானம் கொடுக்க உன்னிடம் உபரியாக பணம் இருக்க வேண்டுமே. அதற்கு என்ன ஏற்பாடு? கூடுதல் பணத்தை எப்படிச் சம்பாதிப்பாய்? உழைப்பு மூலமா, ஊழல் மூலமா?

சிலர் பத்தாயிரம் ரூபாய் தானம் தருவார்கள். அதற்குமுன் அவர்கள் தங்களிடம் பத்து லட்சம் ரூபாய் இருக்குமாறு பார்த்துக் கொள்வார்கள். தேர்தல் சமயம் முக்கியமான 2-3 கட்சிகளுக்கு நிதி அளித்து, எக்கட்சி ஆட்சி அமைத்தாலும் பணம் சம்பாதிக்கும் வழியை உண்டாக்கிக் கொள்கின்றனர்.

**எ**னக்கு ஒரு சோதிடரைத் தெரியும். ஆனால் அவரது தொழில் சரியாக நடைபெறவில்லை. காரணம், அவரால் பொய் பேசவோ, சுற்றிவளைத்துப் பேசவோ முடிந்ததில்லை. மற்ற சோதிடர்கள்போல் பெரிய மனிதர்களின் பாராட்டுச் சான்றிதழ்கள் அவரது அறையை அலங்கரிக்கவில்லை. அவர் என்னிடம் ஆலோசனை கேட்டார்.

நான் அவரிடம், “நீங்கள் ஒரே முயற்சியில் உச்சியை அடையும் வழி கூறுகிறேன். நீங்கள் சிறிதளவு மட்டும் நெகிழ்ந்து கொடுத்தால் போதும். குடியரசுத் தலைவர் தேர்தல் நெருங்குகிறது. அதில் ஆளும் கட்சி வேட்பாளர், எதிர்க்கட்சிகளின் வேட்பாளர் ஆகிய இருவர் மட்டுமே முக்கியம். அந்த இருவரையும் இப்போதே சந்திப்பதுதான் சுலபம். நீங்கள் உங்கள் பெயர் அச்சடித்த காகிதத்தில் ஒவ்வொருவருக்கும் அவர்தான் அடுத்த குடியரசுத் தலைவர் பதவியில் வீற்றிருப்பார் என்று எழுதிக்கொடுங்கள்,” என்றேன்.

“நான் மாட்டிக் கொள்வேனே. தோற்றவர் சும்மா விடுவாரா?” என்று அவர் அஞ்சினார்.

“தோற்றவர் இதற்கெல்லாம் வழக்குப் போட்டுத் தன்னைக் கேவலப்படுத்திக் கொள்ள மாட்டார்,” என்று நான் தைரிய மூட்டினேன்.

தேர்தலில் ஜெயித்தவரைப் பூச்செண்டுடன் சந்தித்தார் நமது சோதிடர். குடியரசுத் தலைவர் அவரது சோதிடம் தனது நம்பிக்கைக்கு வலுவூட்டியது என்று கூறி அவருடன் புகைப்படம் எடுத்துக்கொண்டார். அவரது சோதிடத் திறமையைப் பாராட்டி நற்சான்றிதழும் தந்தார். முன்பு உள்ளூரிலேயே மதிக்கப்படாத இந்த சோதிடர் சுற்றுவட்டாரங்களிலும் புகழ்பெற்றுவிட்டார். குடியரசுத் தலைவர் அவரை வரவழைத்து, அவரிடம் சில சமயம் சோதிட ஆலோசனை கேட்டதும் உண்டு!

சாமர்த்தியசாலிகள் ஒரே சமயம் இரண்டு படகுகளில் சவாரி செய்வர். இரு தரப்பினருக்கும் தானம் வழங்குவர். இப்பொழுது பத்தாயிரம் ரூபாய் தானம் தந்துவிட்டு, எவர் ஆட்சிக்கு வந்தாலும் அந்த ஆட்சியில் பத்து லட்சம் சம்பாதித்து விடுவார்கள்.

'எவ்விதச் சிறப்புப் பெயராலும் அறியப்படாத சிவரூபமான நான், உபதேசம், சாஸ்திரம், சீடன், குரு, வலுவான முயற்சி ஆகிய எதுவும் தேவைப்படாத நிலைக்கு வந்து விட்டேன்' **(சுலோகம் 297)**

**எ**னக்கெனச் சிறப்புப் பெயர் கிடையாது. நான் இத்தகையவன், அத்தகையவன் என்றெல்லாம் அறியப்பட வில்லை. நான் எதுவும் இல்லை என்னும் நிலையை அடைந்து விட்டேன். நான் புனிதனுமில்லை, பாவியுமில்லை; கெட்டவனோ, நல்லவனோ இல்லை; நான் ஆத்மாவோ, பிரம்மமோ இல்லை என்னை இதுபோன்றவற்றில் அடக்கி வரையறுக்க முடியாது.

இந்நிலையில் நான் யாரிடமிருந்து உபதேசம் பெறுவது? யாருக்கு நான் உபதேசிப்பது? உபதேசத்திற்கு இரண்டு பேர் தேவைப்படுவர்; குரு-சீடன் தேவைப்படுவர். ஒருவர் சொல்ல இன்னொருவர் கேட்க வேண்டும். ஒருவர் கொடுக்க இன்னொருவர் பெற வேண்டும். ஆனால் ஜனகர் என்னைத் தவிர இன்னொருவர் இல்லாததால் நான் எவருக்கும் உபதேசம் தரவோ, எவரிடமிருந்தும் உபதேசம் பெறவோ முடியாது. உபதேசம் செய்யவோ, பெறவோ முடியாத நிலைக்கு ஒருவன் வருவது மிகவும் அதிர்ஷ்டமான விஷயம்.

உபதேசம் இல்லாத இடத்தில் சாஸ்திரங்களும் உருவாகுவதில்லை. சாஸ்திரம் என்பது உபதேசங்களின் தொகுப்புதானே. வேதங்கள், பகவத்கீதை முதலியவை வேறென்ன? உபதேசம் இல்லாதபோது யார் குரு, யார் சீடன்?. பெறுவதற்கென்று எதுவும் மிஞ்சியில்லாத நிலையில் உறுதியான, திறமையான முயற்சிக்கு என்ன வேலை?

இப்போது ஜனகர் சொல்வதெல்லாம் உபதேசம் இல்லையா என்று கேட்கலாம். அவர் வலிந்து எதையும் கூறவில்லை. தாமாகச் சொற்கள் அவரது வாயிலிருந்து உதிர்கின்றன. ஞானிகளின் பேச்சு வேண்டுமென்றே செய்யப்பட்ட உபதேசமாக இருக்காது. அவர்களின் பேச்சு பூவிலிருந்து இயல்பாகக் கிளம்பும் நறுமணம் போன்றதாகும்.

புத்தர் 40 ஆண்டுகள் பேசினார். ஆனால் நான் ஒருபொழுதும் பேசவில்லை என்றும் கூறுகிறார்! இது புதிர்போல் உள்ளது. புத்தருடைய வசனங்கள் என்று ஏராளமான சாஸ்திரத் தொகுப்புகள் வெளியாகியுள்ளன. வேறு எந்த புனிதரும் இந்த அளவு பேசியதில்லை. பைபிள் முதலிய புனித நூல்களும் பௌத்த சாஸ்திரங்களுக்கு முன்னால் சிறிய நூல்களே. புத்தரோ எவருக்கும் உபதேசிக்கவில்லை என்கிறார். ஏனெனில் அவர் இன்னொருவர் என்று ஒருவர் இருப்பதாக நினைத்ததில்லை. நீ தனிமையில் பாட்டை முணுமுணுப்பதுபோல்தான் இதுவும்.

'ஒளிமயமான எனது இந்த நிலையில், இருத்தல் என்பதோ, இல்லாமல் போவதோ கிடையாது.ஒன்று என்பதோ, இரண்டு என்பதோ கிடையாது. இதுபற்றி நிறையப் பேசுவதால் என்ன பயன்?' **(சுலோகம் 298)**

குரு-சீடன் முதலிய இரட்டைகள் வீழ்ந்தபின் இனி வீழ்வதற்கு எதுவும் இல்லாத நிலையில் ஜனகர் அஷ்டாவக்ர மகாகீதையை நிறைவு செய்கிறார்.

இனி மேற்கொண்டு நான் என்ன சொல்வேன்? ஏதாவது மிச்சமிருந்தால்தானே சொல்வதற்கு என்கிறார். இருத்தல்-இல்லாமை, ஆத்திகம்-நாத்திகம் (அஸ்தி-ந அஸ்தி) ஆகியவையும் அர்த்தம் இழந்துவிட்டன.

இதுவரை ஒன்றுதான் உண்டென்றேன். இரண்டெனக் கிடையாது என்றேன். அத்துவைதம் என்றேன். இப்போது 'ஒன்று' என்று கருதுவதுகூட வீண் எனத் தோன்றுகிறது. எல்லாம் போய்விட்டபோது ஒன்று, இரண்டெனக் கணித இயலுக்கு மட்டும் என்ன வேலை? எதுவும் சொல்வதிற்கில்லை என்றால் என் மனத்தில் எண்ண அலை ஒன்றுகூட எழவில்லை.

எல்லாம் சூனியமாக உள்ளது. எல்லாம் பூரணமாகிவிட்டது. நிறைகுடம் என்னும் நிலையை அடைந்தாகிவிட்டது. ஆகவே எந்த ஓசையும் எழவில்லை. இந்த சூனியத்தில் தெய்விக ஒலி கேட்கும். முழுமையான ஓய்வு உணரப்படும்.

**ம**வுனச் சாமியார் ஒருவரிடம் மக்கள் வந்து தங்கள் சந்தேகங்களைக் கேட்பார்கள். அவர் பெரும்பாலும் பதில் சொல்லமாட்டார். சில சமயம் கைத்தடியால் ஆற்றுமணலில் ஒன்றிரண்டு வார்த்தையில் பதிலளிப்பார். 'திருப்தியே சந்தோஷம்; ஓடாதே; விழி; அதிகமாக யோசிக்காதே; இழ; அழி-பெறு' எனச் சுருக்கமாக எழுதுவார். வேறு புதுச் சொற்களும் சேர்ப்பதில்லை.

ஆனால் மக்களால் அவற்றின் பொருளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் விளக்கமான உபதேசம் எதிர்பார்த்தனர். 'வாயால் பேசினால் என்ன? ஏன் தடியால் எழுதிக் காட்ட வேண்டும்?' என்றும் அவர்கள் தவித்தனர். மற்ற சாமியார்கள் போல் இவரும் ஏதாவது ஜெபம், தவம், யாகம், ஹோமம், மந்திரம், தந்திரம் முதலியவற்றை எப்படிச் செய்ய வேண்டுமெனச் சொல்வாரென்றும் மக்கள் காத்திருந்தனர். அவருடன் வாத விவாதம் செய்ய வந்த பண்டிதர்களாலும் அவரைப் பேசவைக்க முடியவில்லை.

ஒருநாள் அங்கே ஓர் இளைஞன் வந்தான். அவன் சராசரி இளைஞனாகவே தோற்றமளித்தான். ஆனால் அவன் ஆன்மிகத் தாகம் கொண்டவன். அவன் அந்த இடத்திற்கு வந்ததும் சாமியாரிடமிருந்த தடியைப் பறித்தான். அவனும் மவுனவிரதம் இருப்பவன். ஆகவே அவன் மணலில், "உங்கள் பிரகாசம் எனது இருட்டை ஓட்டுமா? எப்படி ஓட்டும்?" என்று எழுதிக்காட்டினான்.

சாமியார் அவனிடமிருந்து தடியை வாங்கி, "எவ்வகை இருட்டு? எங்கே இருட்டு? நீ இருட்டில் தொலைந்துபோனவனா?" என்று எழுதிக்காட்டினார். முதல்முறையாக அவர் இந்த அளவு எழுதியதைப் பார்த்து மக்கள் ஆச்சரியமடைந்தார்கள்.

"தொலைந்து போனவன் என்றால் பாதையை விட்டு விலகிச் சரிந்தவன் என்றா அர்த்தம்?" இது இளைஞனில் எழுத்து வடிவிலான கேள்வி.

எழுத்து மூலமே பதில் வந்தது. "தொலைந்து போனவன் என்று சொல்வது நீ நினைவாற்றலை இழந்துவிட்டாய் என்ற அர்த்தத்தில்தான். நீ வேறொன்றையும் இழந்தவனில்லை என்று உன் கண்களைப் பார்த்தே நான் தெரிந்துகொண்டேன். பிறகு என்ன விருப்பம் உன்னை இங்கே இழுத்துவந்தது?"

"விருப்பமா? எனக்கு ஒரு விருப்பமும் மிஞ்சியிருக்க வில்லையே," என்று இளைஞன் எழுதிப் பதிலளித்ததும், சாமியார் எழுந்து நின்றார். வலது காலால் பூமியை மூன்று முறை உதைத் தார். கண்களை மூடி, மூச்சை நிறுத்தி, சிலைபோல் தென்பட்டார்.

இளைஞன் மவுனம் கலைத்தான். "சுவாமி, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? என்ன விஷயம்?

சாமியார் சிரித்தார். மணலில் எழுதினார். "என் செய்கைக்கு அர்த்தம் கிடையாது. இது ஒரு சோதனைதான். விருப்பம் ஏது மில்லை என்று சொன்ன நீ என் செய்கைக்கு அர்த்தம் கேட்பதும் ஒரு விருப்பம்தானே?"

இளைஞன் தலைகுனிந்தான். "சுவாமி! நான் ஒரு விசேஷ மந்திரம் பற்றி கேள்விப்பட்டேன். அதை முழு லயிப்புடன் ஒலித்த மாத்திரத்தில் ஒருவன் பிரபஞ்சத்துடன் ஒன்றிவிடுவானாம். நான் அந்த மந்திரத்தைத் தேடுவதில் ஈடுபட்டு இப்போது இங்கு வந்திருக்கிறேன். இதற்குமேல் நான் அதிகம் சொல்ல வேண்டி யிருக்காது. அந்த மந்திரம் உங்களிடம் உள்ளதென எனக்குத் தெரியும். உங்கள் அருகில் நிற்கையில் அந்த மகாமந்திரத்தின் ஒலி காதில் விழுவதுபோல் உணர்கிறேன்," என்று பணிவாகக் கூறினான்.

சாமியார் விடுவிடுவென எழுதினார்: **தத்வமஸி**. நீயே அது. அந்த மந்திரம் நீதான். நீ ஒரு நிமிடமும் கடவுளைவிட்டுப் பிரிந்திருந்ததில்லை.' இவ்வாறு எழுதியபின் அவர் திடீரெனத் தடியால் இளைஞனின் தலையில் அடித்தார்! இளைஞனுக்குத் தலைசுழன்றது. அவன் வர்ணிக்க முடியாத சமாதிநிலையில் ஆழ்ந்துபோனான். அவனுடைய கண்களிலிருந்து இடைவிடாமல் நீர் பெருகியது. நேரம் ஓடியது தெரியவில்லை.

மூன்றாம் நாள் சாமியார் அதிசயமாகத் தனது மவுன விரதத்தைக் கலைத்தார். இளைஞனைத் தட்டி எழுப்பினார். "நீ உனது சொந்த இல்லத்திற்குத் திரும்பிவிட்டாய்," என்று அறிவித்தார்.

இளைஞன் நன்றியுடன் அவரை நோக்கினான். பிறகு அவரது தடியை வாங்கி மணலில் எழுத ஆரம்பித்தான்:

"எனது ஞாபக சக்தி மட்டுமே தொலைந்து போயிருந்தது. போனவன் யார்? திரும்பி வந்தவன் யார்? **மறந்திருந்தது நினைவுக்கு வந்தது**."

நீ என்றும் உள்ளாய். நீ என்றும் காணாமல் போனதில்லை. நீ நிரந்தரமானவன். நடுவில் நீ உன்னை மறந்திருந்தாய். மறந்தது இப்போது நினைவிற்குத் திரும்பிவந்தது.

**மறந்தது நினைவுக்கு வந்தது**—அஷ்டாவக்ர மகா கீதையின் சாரம்!

**ஹரி ஓம் தத்ஸத்!**

